# மேல் காற்று

## முதலிய கட்டுரைகள்

அ. ஸ்ரீநிவாச ராகவன்

லாங்மன்ஸ், க்ரீன் அண்ட் கம்பனி லிமிடெட்
36A, மௌண்ட் ரோட், மதராஸ்
1944

## கட்டுரைகளைப்பற்றி

பத்திரிகைகளில் அவ்வப்போது வெளிவந்து பழங் காகிதக் குப்பையில் ஒளிந்த கருத்துக்கள் சில; அகில இந்திய ரேடியோ நிலையத்தாரால் ஒலி பரப்பப்பெற்று, காற்றிலே மிதந்து மறைந்த வார்த்தைகள் சில; வெளியே வரலாமா என்று தயங்கும் கட்டுரைகள் ஒன்றிரண்டு— இவையே 'மேல் காற்று' என்ற இந்தக் கட்டுரைக் கதம்பம். கட்டுரைகளை வெளியிட அனுமதி தந்த 'தினமணி', 'சக்தி', 'கலாமோகினி', 'சூறாவளி', 'வசந்தம்', 'கலைமகள்', இவற்றின் ஆசிரியர்களுக்கும், அகில இந்திய ரேடியோ நிலையத்தாருக்கும், என் மனப் பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

என் ஓய்வு நேரத்தை இத்தகைய இலக்கியத் தொண்டிலே செலவிடத் தூண்டி, எனக்கு அளவற்ற ஊக்கம் அளித்துவரும் எங்கள் கல்லூரித் தலைவர் ராவ் சாஹேப் அலெக்சாந்தர் ஞானமுத்து, எம். ஏ., அவர்களுக்கும், இலக்கியத் துறையிலே பலவகையிலும் எனக்கு உதவி வரும் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவர் ராவ் சாஹேப் எஸ். வையாபுரிப் பிள்ளை, பி. ஏ., பி. எல்., அவர்களுக்கும் என் வணக்கமும் நன்றியும்.

கட்டுரைகளின் அமைப்பிலிருந்தும், அவற்றில் அங்கங்கே உள்ள குறிப்பிலிருந்தும், 'மேல் காற்று' என்ற தலைப்பு எவ்வளவு பொருத்தமானது என்பதை ஐரோப்பிய இலக்கியங்களைப் பயின்றவர்கள் உணரக் கூடும். பழைய தமிழ் இலக்கிய மரபைக் கைவிடாமல், புது விமர்சன நோக்கோடு, பழகு தமிழ் நடையில், அனுபவமாகப் பரிணமிக்கும் கருத்துக்களை வெளியிட வேண்டும் என்பதே என் இலட்சியம். இது எவ்வளவுக்கு நிறைவேறியுள்ளது என்பதை நிர்ணயிக்கும் உரிமை தமிழ் அறிஞர்களைச் சார்ந்தது.

ம. தி. தா. இந்து கல்லூரி,
திருநெல்வேலி. 11-8-44.

ஆசிரியன்

# பொருளடக்கம்

## 1

# மேல்காற்று

சோலை எங்கும் காற்றின் குரல் முழங்கியது. ஒன்றோடொன்று உராய்ந்து கிளைகள் முனகின. மூங்கிற் கொத்தின் விரல்கள் எதையோ தேடிக் காணாமல் அங்கலாய்த்தன. சோலைக்கு வெளியே, மாலை வானத்தின் தங்க அலைகளைக் கடந்து நீந்திவந்த காகக் கூட்டமொன்று, சோலையை நெருங்கியதும், நங்கூரமில்லாத படகுகள் போல் தத்தளித்துக் கலைந்து சோலைக்குள் மறைந்தது. கிளைகளின் ஓலத்தோடு ஓலமாய், மருண்ட பறவைகள் எழுப்பிய சந்தடி கலந்தது. பழுத்து வதங்கிய இலைகள் என்னைச் சுற்றி உதிர்ந்தன, காற்றுத்தேவன் கொடிகளாய், காலத்தேவன் வெற்றியாய். என்னென்னவோ நினைவுகள், உருவற்ற எண்ணங்கள் என் மனத்திலே பாய ஆரம்பித்தன. எங்கிருந்தோ வந்து சுழன்று எங்கேயோ போகும் என்னைப் போலவே, இங்கு சிறிதுநேரம் உழலும் இந்த மேல்காற்றுத்தான் அவற்றை என் மனத்திலே சொரிந்ததோ, என்னவோ, யார் கண்டது!

அப்போது உதயமாயிற்று "மேல் காற்று" என்ற ஆங்கிலப் பாடலின் ஞாபகம். அற்புதமான பாடல். மேல்காற்றின் தீவிர கம்பீரத்தை, அதன் மும்முர வன்மையை, சோக எக்களிப்பை, பாட்டின் சொற்கள் தாங்கி விம்முகின்றன. பாடலின் ஆசிரியன் ஷெல்லி என்பவன். ஷெல்லி...., ஆங்கிலக் கவிஞன்...., கவிஞன் என்றால்...., என்று தொடங்கி என் மனம் கவிதையைப்பற்றி எண்ணி அலைந்தது.

கவிதை கவிதை என்று பிரமாதப்படுத்துகிறார்களே, அப்படிக்கு அதிலே என்ன இருக்கிறது? கவிஞன் என்

பவன் தனிப் பிறவியா, அவனிடம் ஏதாவது 'சித்து' உண்டா? அவன் எல்லாம் அறிந்தவனா? அப்படி ஒன்று மில்லை. நமக்கும் அவனுக்கும் உள்ள பேதம் ஒன்று தான்; ஆனால் அது மிக முக்கியமானது. நம்மைவிட அவனிடம் மனிதப்பண்பு அதிகமாகப் பொருந்தி இருக் கிறது. நீண்ட காலம் படுத்த படுக்கையாய்க் கிடக்கும் நோயாளி ஒருவனுக்கும், நோயொன்று மில்லாமல் திட காத்திரமாய் உள்ள ஒருவனுக்கும் நிலையிலே என்ன வேறுபாடோ, அதுபோன்ற வேறுபாடுதான் நமக்கும் கவிஞனுக்கும் உள்ளது. நோயாளியின் உடல் வலிமை குன்றி இருப்பதைப் போலவே நம்முடைய மனிதப்பண்பும் குன்றி இருக்கிறது. இல்லை என்று சொல்லலாம். இருங் கள், மனித வாழ்க்கை நடைபெறும் அரங்காக அமைந் திருக்கிறதே இந்த அற்புதமான வையகம், இதைக்கூர்ந்து கவனிக்கிறோமா? நம்முடைய உணர்ச்சிகள், நாம் அமைத் துக்கொள்ள விரும்பும் தத்துவங்கள், இவற்றிற்கெல் லாம் வையகத்தின் தோற்றத்தில், தோற்றத்தில் தோய்ந் துள்ள உண்மையில், அமைதி காண முயல்கிறோமா? நம்மால் முடியவில்லையே! மாஞ்சோலையில் இதோ குயில் பாடுகிறது. "இது என்ன மாயப் பாட்டு! இறைவனை அறிந்து விட்டாயா, சொல்" என்று ஆண்டாளைப் போல் என்னால் கேட்கமுடிகிறதா? போன தீபாவளியின்போது பாபநாச மலை முகட்டிலே ஐப்பசி மழை கவிந்து நின் றதைக் கண்டேன். ஆனால், மின்னலின் மிடுக்கும், இடியின் குமுறலும், மழையின் பரந்த கலகலப்பும், எனக்கா, இல்லை, கவிஞனுக் கல்லவா வியப்பாக மாறி விட்டன :

**" வெட்டி இடிக்குது மின்னல்-கடல்**
**வீரத்திரை கொண்டு விண்ணை இடிக்குது**
**கொட்டி இடிக்குது மேகம்-கூ**
**கூவென்று விண்ணைக் குடையுது காற்று**

சட்டச் சட சட்டச் சடடட்டா-என்று
தாளங்கள் கொட்டிக் கனைக்குது வானம்
எட்டுத் திசையு மிடிய-மழை
எங்ஙனம் வந்ததடா தம்பி வீரா !"

இது போலவே, நமக்கன்று, கவிஞனுக்குத்தான் "மட விடைக் கீறி வண்பாளைகள் நாற" வைகறை வருகிறது; மேக வண்ணப் பட்டாடை போர்த்து, மெல்ல நடந்து, மாலைப் பொழுது மேற்கே சென்று மறைகிறது; "அருந்த அமரர் கலக்கியநாள் அமுத நிறைந்த பொற்கலசம் இருந்த திடைவந்தெழுந்ததென"ச் சந்திரன் உதயமாகிறான்; "ஆழ்கடல் அலைதிரை கையெடுத்தாடுகிறது"; மாலை மதியமும், தென்றலும், இளவேனிலும், "மூசு வண்டறை பொய்கையும்" ஒன்றாகிச் சமைந்த அழகின் விரல் "ஈசன் எந்தை இணையடி நீழலை"த் தொட்டு விடுகிறது.

மனித வாழ்க்கையையும் நாம் ஒன்றிக் கவனிப்பதில்லை. ஆற்றங்கரையிலே, கடைத் தெருவிலே, வீதி முனையிலே, பிச்சைக்காரனையும், தீராத நோயாளனையும், "முதுகு பற்றிக் கைத்தலத்தால் முன்னொரு கோலூன்றி" காலத்தின் பரிகாசமாக விதிர்விதிர்க்கும் கிழவனையும், துயரின் நிழல்கள் நம்முடைய கண்முன்னே தான் விழுகின்றன. யமபயம் என்ற சுருதியோடு இசைந்து வாழ்க்கையின் கலக்கக்குரல் எங்கும் கேட்கிறது. வாழ்வின் பெருமைக்கும் குறைவில்லை. உயிரைத் துரும்பாக எண்ணி அஞ்சா நெஞ்சத்துடன் வீரன் போர் முனையில் உலவுகிறான்; உலகத்தைத் துரும்பாக மதிக்கும் அன்பின் வலிமை காலனைக் கூடத் துச்சமாக உதறித் தள்ளுகிறது; எல்லையற்ற பொறுமையுடன், விஞ்ஞானி அறியாமைப் பேயுடன் போராடுகிறான்; இந்தப் பொறுமை எழுப்பிய கோபுரத்தின் மேல் நின்றுகொண்டு தத்துவஞானி

வாழ்க்கையின் பொருளை அறிய முயல்கிறான்; வேகாத வெயிலில் தனக்கும் மற்றவர்களுக்கும் உழவன் உணவு தேடி வருந்துகிறான்; மனிதனுடைய சலியா உழைப்பும், சூரிய வெளிச்சத்தில் துள்ளிச் சுழலும் இந்தப் பூமியைத் தன்னுடையதாகச் செய்துகொள்ள அவன் இதுவரை பட்டிருக்கும் பாடும், உழவனுடைய ஏற்றத்தின் முனகலில் கேட்கலாம். கேட்கிறோமா? வாழ்க்கையின் துயரத்தையும் இன்பத்தையும், இழிவையும் உயர்வையும், அழுக்கையும் அழகையும், மனிதப் பண்பு பூரணமாக உள்ளவர்களாலேயே உணர முடியும். நம்மால் முடிவதில்லை. ஆனால், இதைத்தான் சொல்ல வந்தேன், கவிஞனால் முடிகிறது.

இருந்தாலும், கவிஞனுடைய பேச்சையும் நாம் கவனத்துடன் கேட்பதில்லை. ஒரு சிலர் "கவிதை, கவிதை" என்று ஆவேசத்துடன் பேசுகிறார்கள் என்பது என்னவோ உண்மைதான். "சரிதான். கவிதை என்றால் ஏதோ மூடுமந்திரம் போல் இருக்கிறது. கவிஞன் ஒரு அதிசயப் பிறவி. நமக்கும் அவனுக்கும் என்ன?" என்ற எண்ணத்தையும், வீண் மலைப்பையுமே பொதுவாக கவிதா ரஸிகர்களுடைய ஆவேசப் பேச்சு உண்டாக்கி விடுகிறது. கோயிலிலே கடவுள் இருக்கிறான் என்று சொல்லிவிட்டு கடவுளை மறந்து விடுகிறோமே, அதைப் போலவே, கவிதையிலே என்னவோ இருக்கிறது என்று சொல்லளவில் ஒப்புக்கொண்டு, கவிஞனுடைய வார்த்தையைக் காதில் வாங்காமல் வளைய வருகிறோம்.

அது மட்டுமில்லை. நோயாளியைச் சிலம்பக் கூடத்தில் விட்டு 'எங்கே, கொஞ்சம் சிலம்பம் பழகு' என்று சொன்னால் அவனுக்கு எப்படி இருக்கும்? இதைப் போலத்தான், மனிதப் பண்பு குன்றிய நமக்கு, கவிஞனுடைய பேச்சு கசப்பாய்க்கூட இருக்கிறது. பூரணமான மனித தத்துவத்தை ஒட்டி அவன் காணும் இலட்சியங்க

ளும் நமக்குப் பைத்தியக்காரக் கனவுகளாகத் தோன்று கின்றன.

**" எல்லாரும் எல்லாப் பெரும் செல்வமும் எய்தலாலே**
**இல்லாரும் இல்லை; உடையார்களும் இல்லை மாதோ!"**

என்று கம்பன் சொன்னால் 'நடக்கக்கூடிய காரியமா?' என்று உதட்டைப் பிதுக்குகிறோம். 'நடக்கக் கூடியது தான்' என்று சொல்லி, அதை நடத்திக்காட்ட, கம்பன் முற்படுகிறான் என்று வைத்துக் கொள்வோம். அப்போது என்ன செய்வோம் தெரியுமா? 'வீண் வம்பு செய்கிறான், புரட்சிக்காரன்' என்று கம்பனைச் சிறையிலே கிடத்தி விடுவோம்.

**" தனி ஒருவனுக்கு உணவில்லை யெனில்**
**ஜகத்தினை அழித்திடுவோம்."**

என்று கவிஞன் பாடலாம். தனி ஒருவனுக்கு, ஒருவனுக்கா, லக்ஷக்கணக்கான மக்களுக்கு உணவில்லாமல் இருக்கும் இந்த "ஜகத்தினை" அழித்து விடுவேன் என்று கவிஞன் புறப்பட்டால், "ஜகம்" கவிஞனை அழித்து விடும்.

ஷெல்லி என்ற ஆங்கிலக் கவியைப் பற்றிய நினைவிலிருந்து, இவ்வெண்ணங்கள் உதயமானதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. ஷெல்லி தீவிரமான இலட்சியவாதி. பழமையான சமூகக் கோட்பாடுகளும், எப்போதோ ஒரு காலத்தில் அவை விளைத்த நன்மை ஓய்ந்த பிறகும், அவற்றிற்கு அடிமையாய் நிற்கும் கோழைத்தனமுமே மனித வாழ்க்கையின் முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டை என்று அவன் சொன்னான். இவற்றிலிருந்து விடுதலை பெற்றால், உலகத்தின் உள்ளே வியாபித்திருக்கும் அழகையும், மனத்திலே இப்போது மறைந்து நாடுவாரற்றுக் கிடக்கும் ஆத்ம செல்வத்தையும் மனிதன் பெறுவான் என்று

ஷெல்லி வற்புறுத்தினான். 'ஏதோ பைத்தியக்காரன்' என்று சொல்லிவிட்டுத் தன் வழியே சென்றது ஆங்கில சமூகம்.

ஆனால், ஷெல்லி விடவில்லை. தன் இலட்சியங்களை நடைமுறைக்குக் கொண்டுவர ஆரம்பித்தான். "கலியாண மென்பது உலக வழக்காகிப் போன சமூகக் கட்டுப்பாடே தவிர வேறில்லை. காதலுக்காகக் கட்டுப்பாட்டை உடைத்து விடலாம்" என்பது ஷெல்லியின் நம்பிக்கைகளில் ஒன்று. இதன்படி, தான் முதலில் மணந்த மனைவியைக் கைவிட்டு, வேறொருத்தியை அவன் வரித்தான். "இதேதடா, உளறுவதோடு நில்லாமல், பைத்தியக்காரன் கற்களை வீசி எறிய ஆரம்பித்து விட்டான்" என்று எண்ணி ஆங்கில சமுதாயம் ஷெல்லியை விலக்க முற்பட்டது. இதற்குமுன் அவனை இலட்சியவாதி என்று புகழ்ந்த சிலரும் "அதெல்லாம் கவிதையிலே சரிதான். நடைமுறையிலே வருவதென்றால் அதெப்படி ..." என்று இழுத்தார்கள். இதைத்தானே தமிழ்க் கவிஞன் சொன்னான் :

**" நாடகத்தில் காவியத்தில் காதலென்றால்**
**நாட்டினர்தாம் வியப்பெய்தி நன்றுஎன்பர் ;**
**ஊடகத்தே வீட்டினுள்ளே கிணற்றோரத்தே**
**ஊரினிலே காதலென்றால் உறுமுகின்றார்**
**பாடைகட்டி அதைக்கொல்ல வழிசெய்கின்றார்."**

இதனால் ஷெல்லி அனுபவித்த சஞ்சலம் கொஞ்சமன்று. தன்னைப் பிறர் அவமதிக்கிறார்களே, தூற்றுகிறார்களே என்று கூட அவன் கவலைப்படவில்லை. இவ்வளவு அவநம்பிக்கைக்குப் பாத்திரமாகிவிட்ட தன்னுடைய பாடல்களுக்கு இதனால் மதிப்புக் குறைந்துவிடுமோ, தான் கண்ட உண்மைகளை ஜனங்கள் ஏற்றுக்கொள்ளாமல் இருந்து விடுவார்களோ என்பதுதான் அவன் கவலை.

'தனக்கு இடமில்லை என்று சொல்லும் சமூகம் தன்னுடைய இலட்சியங்களைக் கடைப்பிடித்து நடக்கவா போகிறது?' என்று எண்ணிச் சோர்வடைந்தான்.

இந்த நிலையிலே வெளியே நோக்கினன். அப்போது இலையுதிர் காலம். சோலைகளை அலைத்து, வனத்தின் உள்ளத்தைக் கலக்கி, பழுத்து வதங்கிய இலைகளை எங்கும் பரப்பி ஓவென்றிரைந்து சென்றது மேல்காற்று. மேல் காற்றின் தீவிரத்தையும், அடங்காச் சுயேச்சையையும் கவனித்த ஷெல்லிக்குப் பழைய ஞாபகம் எழுந்தது. தானும் அதைப் போலவே சுதந்திரத்தோடு இருக்க எண்ணியவன், இருந்தவன் தானே :

**" உன்போல் இருந்தவனே!**
**அடங்காத நெஞ்சத்திலும், ஓயாத வேகத்திலும்,**
**பெருமிதத்திலும், வன்மையிலும்,**
**உன்போல் இருந்தவனே !**
**ஆனல் இன்ருே**
**காலம் என்னும் பாரவிலங்கு**
**என்னைத் தளையிட்டு ஒடுக்கிவிட்டது."**

இந்தக் காற்ருேடு காற்ருய், அதன் அசைவிலே பங்கு கொள்ளும் ஒரு இலையாகவோ, மேகமாகவோ, அலையாகவோ இருக்க முடியவில்லையே என்று வருந்தினன் :

**" நீ தூக்கி எறிந்து விளையாடும் வதங்கிய இலையாய் மட்டும் நான் இருந்தால்,**
**உன்னுடன் பறந்து செல்லும் மேகமாய் இருந்தால்,**
**உன் வலிமையைத் தாங்க முடியாமல் திணறி,**
**அதிலே பங்கு கொண்டு,**
**சுயேச்சையில் உனக்கு மட்டுமே தாழும் கடல் அலையாய் இருந்தால்...**
**என் வேதனையைச் சொல்லி உன்னோடு மன்ருட மாட்டேன் ;**

**அலையைப்போல், இலையைப்போல், மேகத்தைப் போல்,**
**என்னையும் தூக்கி உயர்த்தி நில், கை விடாதே......**
**வாழ்க்கையின் முட்களில் வீழ்கிறேன் ;**
**இரத்த வெள்ளத்தில் அழுந்தி அழிகிறேன் ;**
**ஆயினும், ஒரு காலத்தில், உன்போல் இருந்த வனே !"**

சமுதாயச் சிறையில் அகப்பட்டுக் கால விலங்கால் கட்டுண்ட கவிஞனைவிட, மேல்காற்றின் வலிமையில் பங்கு கொள்ளும் இலையும், மேகமும், அலையும், ஜீவசக்தி நிரம்பியவை என்று ஷெல்லி கருதினன். மேல்காற்றைக் கூப்பிட்டுச் சொல்லுகிருன் :

**" இந்தக் காட்டைப் போலவே**
**என்னையும் உனது குழலாக அமைத்துக்கொள்.**
**என் வாழ்க்கையும், வதங்கிய இலைகளைப்போல,**
**உலர்ந்து உதிர்வது.**
**ஆனலென்ன ?**
**மகத்தான உன் பேரிசையின் தமரம்**
**வனத்திலே இலையுதிர்காலக் குரலை எப்படி எழுப்பு**
**அப்படியே, என் வாழ்க்கையி லிருந்தும், [மோ**
**வருத்தம் தோய்ந்த, ஆனல் இனிமை நிறைந்த,**
**குரலொன்றை எழுப்பாதா ? "**

இலையுதிர் காலத்தின் குரல் - இலைகளும், மலர்களும், மரங்களும் மடிவதால் எழுகின்ற சோகக் குரல் - இதனுள்ளே வஸந்த ஜனனத்தின் கீதம் தோய்ந்திருக்கிறதல்லவா ? அதைப் போலவே, கவிஞனுடைய பாடல்களும் இன்று சோகம் நிறைந்து இருக்கலாம ; நம்புவாரற்றுக் கிடக்கலாம் ; ஆனல் நாளைக்கு அவற்றின் மூலமாகப் புதிய உலகம் நிர்மாணமாகாதா ? " ஆகும் " என்பதுதான் மேல்காற்றின் ஓலத்தில் ஷெல்லி கண்ட உண்மை.

# 2
# நெய்தல்

கடலிலே, அலைகள் குமுறி எழுந்து புரண்டு நுரையாகச் சிதறுகின்றன. பெண்ணொருத்தியின் உள்ளத்தில், காதல் வெள்ளம் கொந்தளித்துக் குமுறி இரங்கலாகப் பொங்குகிறது. இவையே, நெய்தல் இலக்கியம் என்ற பழந் தமிழ்க் காதற் பாடல்களின் ஆதார சுருதி, இடைவிடாத அடி நாதம்.

அதோ நடந்து செல்கிறாள் அந்தப் பெண். அவளுடைய ஏக்கமே நெய்தற் பாட்டுக்களில் தேங்கி நிற்கிறது. 'யார் அவள்?' என்று கேட்கிறீர்கள். பழந் தமிழ்க் கவிஞர் ஒருவர் பதில் அளிக்கிறார்:

**" இவளே, கானல் நண்ணிய காமர் சிறுகுடி**
**நீனிறப் பெருங்கடல் கலங்க உள்புக்கு**
**மீனெறி பரதவர் மகளே."**

அதோ தெரிகிறதே, வலைஞர் சேரி, அதன் தலைவன் மகள்தான் நாம் இப்போது சந்தித்தது. கானலில் அமைந்த இந்த அழகிய சேரியில் உள்ளவர் அவள் உறவினர். நீலக்கடல் கலங்கும்படி அதன்மேற் சென்று, வலை வீசி, மீன் பிடிக்கும் பரதவர். ஆம், இப்போது நாம் நிற்பது நெய்தல் நிலத்தில்.

இதுவே ஆசிரியர் தொல்காப்பியர் குறித்த 'வருணன் மேய பெருமணல் உலகம்'. பக்கத்திலே ஓயா ஒலமிட்டுப் புரளுகிறது கடல். ஒரு சமயம், வேல்கள் செறிந்த கோட்டைக் கதவை முட்டித் தகர்க்கும் ஆண் யானையைப் போல், சீறி நிமிர்ந்து, காற்றெனும் பாகன் தூண்ட, மணற் குன்றுகளை மோதிக் கரைக்கின்றது. இன்னொரு

சமயம், தேவர்கள் யாழ் தூக்கப் பாற்கடலில் அறிதுயில் கொள்ளும் மகா விஷ்ணுவைப் போல, புன்னை மலர்களில் வண்டுகள் இசைக்கும் ரீங்காரமே தாலாட்டாக, இந்தக் கருங்கடல் சிறிது தன்னுள்ளே அடங்கி உறக்கம் கொள்ளுகிறது. வேறு சமயங்களில், விளையாட்டில் ஈடுபட்ட சிறுமியர் அமைத்த மணல் வீட்டிற்கு, ஒளி வீசும் முத்துக்களை விளக்காகக் கொண்டு சேர்க்கிறது; அடுத்த நிமிஷம், ஓ வென்று நகைத்து அந்த வீட்டை விழுங்கி விடுகிறது. ஒரு நிலையில் நில்லாமல், ஓயாது சலிக்கும் இந்தக் கடலின் பக்கத்திலே, அதைப் போலவே பரந்து, அலை அலையாய்ச் சுருள்கிறது வெண்மணற்பரப்பு. இதன் மத்தியிலே சிறு குன்றுகள்; காற்றுச் சிறுமி அமைத்த சித்திர வீடுகள்; இவற்றின் அருகில் புடவையின் மடிப்பைப் போல் காற்றின் கையில் மணல் விசிறி ஆடுகிறது. மணற்குன்றுகளுக்கு அப்பால் உப்பங்கழி; நீல வானத்தைத் தன் இதயத்துக்குள் வாங்கி நீல மலர்களாகக் குவித்து வைக்கின்றது; கடலின் கரம் பட்டு மணம் பூரிக்கின்றது; கடல் விலகவே, உடல் சுருங்கி நைகின்றது. அதனருகில் உள்ள குளங்களில் நெய்தல் மலர்கள் ஒன்றோடொன்று நெருங்கி, இரகசியம் பேசுகின்றன. குளக்கரையில், புன்னை மரச் சோலைகள். புன்னைப் பூவின் மகரந்தப்பொடி நெய்தல் மலரின் உள்ளே மின்னும் பொன்னிற மணியின் மேலே படிகிறது. மணல் மேடுகளுக்கிடையே தாழைப் புதர்கள். சுறாமீனின் கொம்பைப் போல் முட்கள் செறிந்த தாழை மடல்களிடையே, யானை மருப்பைப் போல் தாழை அரும்பு கூம்பி வெளிர்கிறது. புன்னைப்பூவின் வாசமும், தாழையின் வெறியும் மணற் பரப்பிலே வீசும் மீன் நாற்றத்துடன் கலக்கின்றன. நாரையும், குருகும் நீர்க் கரைகளில் உலாவுகின்றன. அவற்றின் கூச்சலும், தாழையின் சலசலப்பும், புன்னையின் பெருமூச்சுமே கடலின் கலக்கக் குரலுக்கு

நிலம் தருகின்ற அமைதியான பதில். நீல வானம், கருங் கடல், அழகு சுமக்கும் வெண்மணற் பரப்பு, இவற்றின் நடுவே உள்ளது வலைஞர் குப்பம். அதில் வாழ்கின்ற பரதவர், கடலைக் கலக்கி, மீன்களையும், விலை உயர்ந்த முத்துக்களையும் பெறுவார்கள். புன்னை நிழலில், முறுக்கிய வலையைப் பிரித்து உலர்த்திக்கொண்டு, கடற் பரப்பின் மேற் செல்லப் பக்குவமான தருணத்தை எதிர்பார்த்து நிற்பார்கள் :

**" கானலஞ் சிறுகுடிக் கடன்மேம் பரதவர்**
**நீனிறப் புன்னைக் கொழுநிழ லசைஇத்**
**தண்பெரும் பரப்பின் ஒண்பத நோக்கி**
**யங்கணரில் வலை உணக்குவர்."**

இரவிலும், அவர்கள் தோணிகள் கடற் பரப்பிலே உலாவும். மண் திட்டுகளிலும், படகுகளிலும் மீன் கொழுப்பிட்ட அகல் விளக்குகளை ஏற்றி வைத்து, இரவு முழுதும் தூங்காமல் அலையோடு மல்லாடுவார்கள். சில சமயங்களில், மீன்களை மணற்பரப்பிலே குவித்து வைத்து, மீன் கொழுப்பிட்டுக் கிளிஞ்சிலில் ஏற்றிய சிறிய விளக்கொளியிலே தூங்குவார்கள் :

**" நெடுங்கடல் அலைத்த கொடுந்திமிற் பரதவர்**
**கொழுமீன் கொள்கை யழிமணற் குவைஇ**
**மீனெய் யட்டிக் கிளிஞ்சில் பொத்திய**
**சிறுதீ விளக்கிற் றுஞ்சுவர்."**

இடி போல் உறுமும் கடலிலே படகுகளைக் கூட்டங் கூட்டமாய் அவர்கள் இட்டுச் செல்வது, யானைப் படையைப் பரிக்கோற்காரர் இழுத்துச் செல்வது போலிருக்கும். மீனையும், முத்தையும், உப்பையும் உள்நாட்டிலிருந்துவரும் வணிகரிடம் வேறு பொருள்களுக்கு ஈடாகப் பரிமாறுவார்கள். அதோ, வலைஞர் குப்பத்துக் கப்பால் உப்பு வணிகர் வண்டிகள், சக்கரங்கள் மணலில்

உராய்ந்து ஒலிக்க, தள்ளாடித் தள்ளாடி, நெய்தற் செல்வத்தை உள் நாட்டிற்குக் கொண்டுசெல்வதைக் காண்கிறோம். கடல் தருகின்ற செல்வம் குறைவுபடும்போது, சுறுமீன் கொம்பை நட்டு, அதைச் சுற்றி வெண்டாளி மாலை அணிந்த பரதவர் மகளிர் ஆடிப் பாடித் தெய்வத்தை வழிபடுவார்கள் :

" வெண் கூதாளத்துத் தண்பூங் கோதையர்
சினைச் சுறவின் கோடு நட்டு
மனை சேர்த்திய வல்லணங்கினான்
மடற்றாழை மலர் மலைந்தும்
பிணர்ப் பெண்ணைப் பிழிமாந்தியும்
புன்றலை யிரும் பரதவர்
பைந்தழை மா மகளிரொடு
பாயிரும் பனிக்கடல் வேட்டஞ் செல்லா
துவவு மடிந்துண் டாடியும்
புலவு மணற் பூங்கானல்."

ஆகவே, இயற்கையோடு இசைந்த, எளிய, கவலையற்ற வாழ்க்கையே இந்த நெய்தல் மக்களுடைய வாழ்க்கை.

ஆனால், இவர்கள் குப்பத்தில் ஒருத்தி மட்டும் கவலை நிறைந்த உள்ளத்தோடு இருக்கிறாள். கடற்கரை மணலிலே விளையாடி, அலையிற் பாய்ந்து நீராடி, தோழியருடன் புன்னைச் சோலையில் சுயேச்சையுடன் திரிந்து, நெய்தல் மலர் சூடிக் கவலை யில்லாமல் அவள் இருந்து வந்த காலம் உண்டு. ஆனால் இப்பொழுதோ ? மாலைப் பொழுது வருகிறது.

" அகன் ஞாலம் விளக்குந்தன் பல்கதிர் வாயாகப்
பகல் நுங்கியது போலப் படுசுடர் கல் சேர."

ஆம், சூரியன், தான் அளித்த பகற்பொழுதைத் தானே விழுங்கி விடுகிறது. பிறகு,

**"இகன்மிகு நேமியான் நிறம்போல இருள்வர"**

அதன்பின் நிலவும் வருகிறது. 'தம் புகழ் கேட்டார் போல் தலைசாய்த்து' மரங்கள் துயில்கின்றன. 'சாந்தம் நிறைந்த மாலைப்பொழுது என்றல்லவா இதைச் சொல்லுகிறார்கள், நல்ல வேடிக்கை! அவர்கள் என்னத்தைக் கண்டார்கள்? பெண்கள் உயிரை வதைக்கும் இந்த மாலைப் பொழுதும் ஒரு பொழுதா?'

**"மகளிருயிர் பொதி அவிழ்க்கும்**
**காலை யாவதறியார்**
**மாலை யென்மனார் மயங்கியோரே."**

என்று அந்தப் பெண் தன் தோழியிடம் பேசுகிறாள். கூடு நோக்கிச் செல்லும் நாரை யொன்றைப் பார்த்து, 'எல்லை யற்ற வருத்தத்தை யல்லவா இந்த மாலைப் பொழுது தருகிறது, உனக்குத் தெரியவில்லையா?

**"பெரும் புலம்பன்றே சிறு புன் மாலை"**

இதனை அறிந்து அவரிடம் போய் நீ சொல்லலாகாதா?' என்று கேட்கிறாள். கடலைப் பார்க்கிறாள்: 'என்னை வருத்தவா இப்படி வெள்ளலைக் கைகளைக் கொட்டி முழக்கிப் பரிகசிக்கிறாய்? அல்லது என்னைப் போல் உனக்கும் காதல் செய்து பின்னர் பிரிந்து சென்ற காதலன் ஒருவன் இருக்கிறானோ?

**"எம் போலக்**
**காதல் செய் தகன்றோரை உடையையோ நீ?"'**

என்று கேட்கிறாள். அன்றிற் பறவையின் குரல் நிலவைத் துறவி வருகிறது. "என் துயரத்தை மிகுதிப்படுத்தவே ஆரவாரிக்கின்றாயா, அல்லது நீயும் என்னைப்போல், பிரிந்தவரை நினைந்து வருந்துகிறாயா?" என்கிறாள். இனிமையைப் பிழிந்து இரவுக்குக் களபம் பூசுகிறது குழல். அவள் கேட்கிறாள்:

"" தனியவ ரிடும்பை கண்டினைதியோ எம்போல
இனிய செய் தகன்ருரை உடையையோ நீ ""

கடலின் குரலும், காற்றின் அசைவும், துணையைப் பிரிந்த சிறு பறவையின் துயரவொலியுமே அவளுக்குத் துணையாய் நிற்கின்றன. அவளுடைய வருத்தத்தைக் காணச் சகியாமலோ என்னவோ, மணற்குன்று கரைந்து, அழிகிறது, மரங்கள் மயங்கி இலை குவிகின்றன. தன் நெஞ்சைப் பார்த்துக் கேட்டுக் கொள்கிருள்: "பைத்தியக்கார நெஞ்சமே, இந்த இருண்ட இரவிலே அவனையே நோக்கிப் போனுயே, என்ன கண்டாய? அவனையாவது நேரிற் கண்டாயா? என்னதான் பெற்றுய்? அவனைத் தழுவ உன்னல் முடிந்ததா? என்னத்தைத்தான் அறிந்தாய்? அவன் மனத்தையாவது அறிந்தாயா? உன்னைப் போல் பேதை நெஞ்சர் உலகத்தில் உண்டா?"

" காணுமை இருள் பரப்பிக் கையற்ற கங்குலான்
மாணுநோய் செய்தான்கட் சென்ருய் மற்றவனை நீ
காணவும் பெற்ருயோ காணுயோ மடநெஞ்சே!
கொல்லேற்றுச் சுறவினம் கடிகொண்ட மருண் மாலை
அல்லல்நோய் செய்தான்கட் சென்ருய் மற்றவனை நீ
புல்லவும் பெற்ருயோ புல்லாயோ மடநெஞ்சே!
வெறிகொண்ட புள்ளினம் வதிசேரும் பொழுதினுற்
செறிவளை நெகிழ்த்தான்கட் சென்ருய் மற்றவனை நீ
அறியவும் பெற்ருயோ அறியாயோ மடநெஞ்சே!"

தன்னை மறந்து விட்டானே என்று கலங்குகிருள். ஊரில் உள்ளவர்கள் தன்னைப்பற்றி ஏதேதோ பேசுகிருர்களே, பிரிந்த காதலன் திரும்ப வந்து தன்னுடன் இல்வாழ்க்கை நடத்தி ஊர் வாயை மூடுவது எப்போதோ என்று ஏங்குகிருள். தன்னிலையை ஒருவாறு அறிந்து, தன் சுயேச்சையைத் தாயும் தன் உறவினரும் கட்டுப்படுத்தி விட்டார்களே என்று வெம்புகிருள். சென்ற இடத்திலே

காதலனுக்கு மனம் மாறி, வேறு மகளிரிடம் காதல் பிறந்து விட்டதோ என்று அஞ்சுகிறாள். நெய்தல் நிலத்து இயற்கைப் பொருள்களும், நிகழ்ச்சிகளும் அவள் துயரத்தின் நிழலாய் அவளுக்குத் தோன்றுகின்றன ; வேறு சமயங்களில், தன் துயரத்தைக் கண்டும் அலட்சியமாகவோ, பரிகசித்தோ தம் வழியே செல்லும் உணர்ச்சியற்ற பொருள்களாக அவள் கண்ணிற் படுகின்றன. குருகின் ஒலியைக் கேட்டு, காதலன் ஏறிவரும் மணித் தேரோ என்று மயங்குகிறாள். தென்றல் ஏந்திவரும் மலர் மணம் நுகர்ந்து, மாலை சூடிய தன் மணாளன்தான் வந்து விட்டானோ என்று ஏமாறுகிறாள். தூக்கத்திலே அவன் பக்கத்தில் இருப்பதாக எண்ணி, காற்றைத் தழுவி அலமருகிறாள். சிறுவெண் காக்கையையும், நாரையையும், குருகையும், அன்றிலையும் தூதாக அனுப்ப எண்ணித் தன் ஏக்கத்தை எல்லாம் அவற்றிடம் சொல்லிச்சொல்லி வருந்துகிறாள். சில சந்தர்ப்பங்களில் தோழியிடமோ, தோழியின் மூலமாக அவனிடமோ, ஏதோ ஒரு இயற்கைக் காட்சியை அல்லது நிகழ்ச்சியை வருணிப்பது போலப் பேசி, தன் நிலையைக் குறிப்பாக உணர்த்துகிறாள். காற்று மணலைத் தூற்றுகிறது என்று சொல்லி ஊரில் உள்ளோர் அலர் தூற்றுகிறார்கள் என்று குறிக்கிறாள். "வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தது" என்னும்போது, தன் தலைவனுக்கும் பரத்தை ஒருத்திக்கும் இருந்த தொடர்பு அறுந்துவிட்டது என்பதையும், "இதைக் காணச் சென்றது மட நடை நாரை" என்னும்போது இதை அவளுக்கு உணர்த்த தூதுவர்களை அவன் அனுப்பினான் என்பதையும் குறிப்பாகச் சொல்லுகிறாள். கானலிலே நிலவொளி பரந்தது என்றால் தன்னைச் சுற்றித் தாயும் உறவினரும் காவல் காத்து வருகிறார்கள், ஆகவே களவொழுக்கம் விரும்பித் தலைவன் வரமுடியாது என்பதைப் புலப்படுத்துகிறாள்.

பழைய உரையாசிரியரோடு, நெய்தல் இலக்கிய உலகிலே புகுந்தால், நெய்தல் நிலத்தைப் பற்றிய ஒவ்வொரு இயற்கை வருணனைக்கும் வாழ்க்கைச் சித்திரத்திற்கும் ஓர் உள்ளுறை பொருள் தோன்றும். உரை ஆசிரியர் காணும் உள்ளுறை பொருள் பல இடங்களில் மிகவும் பொருத்தமாகவே இருக்கிறது. காதலில் வருந்தும் ஒருத்தி தன் மனநிலையைக் குறிப்பாக உணர்த்துவது சாதாரணம். உள்ளுறை பொருள் தேடுவது உரை ஆசிரியருடைய அறிவின் நுணுக்கத்தையும் தளரா ஊக்கத்தையும் காட்டுகிறது; என்றாலும் சில இடங்களில் பாட்டின் கவிதையையும், அதில் வெளியாகும் உணர்ச்சி வேகத்தையும் மறைத்தும் விடுகிறது. இதுபோலவே இன்னொரு முயற்சியிலும் உரை ஆசிரியர்கள் ஈடுபடுகிறார்கள். நெய்தல் என்ற திணைப்பகுதியில் "இரங்கல்" பொருளாக இருக்கவேண்டும் என்பது இலக்கணம். நெய்தல் நிலமும், ஏற்பாடும் - அதாவது மாலைக்கு முந்திய பிற்பகலும் - முறையே நெய்தல் இலக்கியம் குறிக்கின்ற இடமாகவும் பொழுதாகவும் இருக்க வேண்டும் என்பதும் சம்பிரதாயம். இவ்வரம்புகளைப் பல நெய்தற் பாடல்கள் மீறி இருப்பதை நாம் காணலாம். நெய்தற் கலியின் முதற் பாட்டிலேயே, ஏற்பாடு அன்று, மாலைப்பொழுது பேசப்படுகிறது. அதுபோலவே இரங்கலை மட்டு மல்லாமல் இரங்கலுக்குப் பின் கூடுகின்ற இன்பத்தையும், இரங்கலுக்கு ஏதுவான பரிவையும் சில நெய்தற் பாடல்கள் குறிக்கின்றன. இதற்கெல்லாம் அமைதிகூற உரை ஆசிரியர் படுகின்ற பாட்டில், பாட்டையே சில சமயம் நாம் மறந்துவிடுவதுண்டு. பாட்டுக்கள் இவ்வாறு இலக்கண வரம்பை மீறுவதைத் திணைமயக்கம் என்று உரை ஆசிரியர் கூறுவர். திணை மயங்கினால் குற்றமில்லை. பாட்டும் அதிலுள்ள கவிதையும் நம்மை மயக்கவேண்டும் என்பதல்லவா நாம் விரும்புவது?

இரங்கல் தலைவிக்கு மட்டுமன்று, தலைவனுக்கும் உரியதுதானே. தலைவியைப் பிரிந்த தலைவனுடைய இரங்கலை வெளியிடும் பாட்டுக்களும் இருக்கின்றன. "இரவு முழுதும் ஏன் தூங்கவில்லை?" என்று கேட்கும் நண்பனிடம் தலைவன் சொல்லுகிறான்: "நண்பா, என் நெஞ்சைப் பறிகொடுத்துவிட்டேன். கடலலை தூங்குகிறதா? அதுபோலத்தான் நானும்" என்கிறான்:

**"ஒண்டொடி யரிவை கொண்டன ணெஞ்சே**
**வண்டிமிர் பனித்துறைத் தொண்டியாங்கண்**
**உரவுக் கடலொலித் திரையென**
**இரவி னானுந் துயிலறி யேனே."**

நாம் சற்றுமுன் கண்ட வலைஞர் குப்பத்திற்குப் பக்கத்தில் புன்னைச் சோலை தோன்றுகிறதே, அங்கே போகலாம். தாழைப் புதர் அருகில் மறைந்து நிற்கிறோம். சோலையின் நடுவே ஓர் ஊஞ்சல். தாழை விழுதாலாகிய சங்கிலி. ஊஞ்சலில் சோக வடிவாய், நெய்தல் தலைவி அமர்ந்திருக்கிறாள். பக்கத்திலே தோழி நிற்கிறாள். தலைவி சொல்கிறாள்: "என்னை இங்கே தனியாக வருந்தவிட்டுப் போனானே, தேரில்லாவிட்டால் அவன் எப்படிப் போயிருப்பான்? அந்தப் பொல்லாத தேர்க் குதிரைகள் அல்லவா அவனை இழுத்துச் சென்று விட்டன? அவை நன்றாக அடிபடவேண்டும். விளையாட்டுச் சிறுவர் கையிலுள்ள பறையில் தீட்டப்பெற்றுள்ள குருவி எத்தனை அடிபடுமோ அத்தனை அடிபட வேண்டும்" என்று சீறிக் கண்ணீர் வடிக்கிறாள். தோழி சொல்கிறாள்: "வா, ஊஞ்சலை நான் ஆட்டுகிறேன். உன் காதலனைப் பற்றிய பாட்டுக்கள் பாடுவோம். உன்னை விட்டுப் பிரிந்து சென்றானே, என்ன கல்மனம் அவனுக்கு?" என்று அவன் கொடுமையைக் குறித்துத் தோழி பாடுகிறாள். இது தலைவிக்குப் பொறுக்கவில்லை. அவள் குறிப்பாகச் சொல்கிறாள்: "என் காதலன் ஊரிலே கொடுமை என்பதே கிடை

யாது. காற்றிலே குவளை மலர்கள்மேல் மணல் விழுகிறது. அதைக் கரைத்து மலர்களின் துன்பத்தை நீக்க, அலை மெல்ல வந்து அவற்றைத் தடவுகிறது. நீ பார்த்ததில்லையா?" என்கிருள். இதைக் கேட்டுக்கொண்டே வருகிருன் அவள் காதலன். என்ன பரவசம் அடைவான்! அதன் பிறகு காதலி இரங்குவதற்குக் காரணம் ஏது?

இரங்கல் இல்லையானுல் திணை மாறிவிடுமே என்கிருர் இலக்கண பக்தர். உண்மைதான். பொதுவாக நெய்தல் இலக்கியத்தில் காதலால் விளைந்த இரங்கலே பொருளாக வருவது. அதை யொட்டிப் பல்வேறு உணர்ச்சிகளும், மனநிலைகளும் விரவி வருகின்றன. இவற்றிற் கெல்லாம் அற்புதமான பகைப் புலமாய் நெய்தல் நிலம் அமைந்திருக்கிறது. கடலும், மணற் பரப்பும், வானமும் சமைத்த அழகிய அரங்கு; இதுவே நெய்தல் நிலம். இங்கே காதல் உள்ளத்தின் கொந்தளிப்பும், அதன் இன்ப வேதனையும் ஒலிக்கின்றன; இதுவே நெய்தல் இலக்கியம்.

3

# ஸன்யாஸி

நிர்மானுஷ்யமான மலைச்சரிவிலே ஒரு குகை. குகையின் வாசலில் ஸன்யாஸி ஒருவன் உட்கார்ந்திருக்கிறான். வெளியிலே இருள். வானத்தில், காலத்தை வென்று நித்திய வாழ்வு பெற்றவை போல், நட்சத்திரங்கள் சுடர்விடுகின்றன. குகையின் அருகில், மழைத்தண்ணீர் தேங்கியுள்ள குட்டங்களிலிருந்து தவளைகளின் ஓயா மொணமொணப்பு காற்றில் மிதந்து வருகிறது.

ஸன்யாஸி பேசுகிறான் :

" இரவேது, பகலேது? நாளாவது, நாழிகையாவது? கால வெள்ளம் ஒடுங்கி விட்டது. அதன் அலைமேல், இந்தப் பிரபஞ்சம் மிதந்து தத்தளிக்கிறது, நாணல் தட்டையைப் போல். இங்கே இந்த இருண்ட குகையில் அமர்ந்து என்னுள்ளேயே ஆழ்ந்து, தன்னந் தனியனாகி விட்டேன். தன் ஆழத்தைக் கண்டு வெருண்டு அசைவற்று நிற்கும் சுனையைப் போல், இரவு சலனம் ஒடுங்கி அயர்ந்து நிற்கிறது. பாறையிலிருந்து தண்ணீர் கசிந்து சொட்டுகிறது. குட்டங்களில் தவளைகள் மிதக்கின்றன, பழமையின் வடிவாய். நானே சூன்யத்தின் மூலமந்திரத்தை உச்சாடனம் செய்கிறேன். பிரபஞ்ச எல்லைகள் ஒவ்வொன்றாக எங்கேயோ சென்று மறைகின்றன. காலச் சம்மட்டியிலிருந்து சிதறிய அனற் பொறிகளாய், நட்சத்திரங்கள் அணைகின்றன. அகண்ட ஸம்ஹாரத்தின் இதய சூன்ய நடுவிலே, மாயைக் கனவிலிருந்து கண்விழித்த சிவனைப் போல் ஆனந்த வடிவானேன். நான் விடுதலை பெற்றேன்; நான் தனி ; நானே மஹாந்...

" பிரகிருதியே, முடிவில்லா மாயையே, பிரபஞ்சம் என்ற பேய்த் தேரில் பவனிவரும் பொய்வடிவே, இனி உன்

ஞல் என்னை ஏமாற்ற முடியாது. உன்மேல் பழிக்குப் பழி வாங்கிவிட்டேன். சைதன்யப் பெருவெளியின் கோட்டையான இருளிலே ஊன்றி, ஒளியென்ற பொய்யோடு இடைவிடாது போராடினேன். அது வலிமை குன்றி என்னிடம் சரண் புகுந்துவிட்டது. இனி எனக்குப் பயமில்லை, ஆசையில்லை. சுத்த அறிவின் சுடரைத் துணையாகக்கொண்டு, இன்று புறப்படுகிறேன்; மனிதர் வாழும் பொய்க் கோட்டைக்குள் புகுவேன். ஆனால், எனக்குக் கவலையில்லை; பொய்யின் மருமத்தை மிதித்து நிச்சலமாய் நிற்பேன். பொய்யால் என்னை அசைக்க முடியாது.''

பாசவலையிலிருந்து விடுபட்ட உண்மைத் துறவியின் பேச்சா இது? மேலெழுந்தவாருகப் பார்த்தால் அப்படித் தான் தோன்றும். ஆனால், உண்மை அதுவன்று. ஆசையை உதறித் தள்ளியவன், 'விடுதலை பெற்றுவிட்டேன்' என்று சொல்லிக்கொள்வதில் ஆசை கொள்வானேன்? மாயையை வென்று நித்தியத்தோடு கலந்தவன், சூன்ய மந்திரோச் சாடனத்தில் சித்தி பெற்றவன், துறவி — இவனுக்கு 'மாயையை வென்று விட்டேன்' என்ற மமதை எப்படி வரக்கூடும்? அதைப்பற்றிய நினைவே இல்லாமல், நினைவு ஒன்றுமே இல்லாமல் இருப்பது—அதாவது, இருந்தும் இல்லாமல் இருப்பதல்லவா சூன்யத்தோடு இரண்டறக்கலந்த நிலை? பொய்மைப் பாம்பைப் பிளந்து அதன் உயிரைக் குடித்த ஜீவன்முக்தனுக்கு, பாம்பின் வால் ஆடுகிறதா என்று பார்ப்பதில் சிரத்தை ஏது, முனைப்பு ஏது?

உண்மைத் துறவி பேசமாட்டான். பேசினாலும் இவ்வாறு பேசமாட்டான். வாழ்க்கையைக் கண்டு அஞ்சி, மலைக் குகையில் ஒதுங்கிய ஸாதகனுடைய வார்த்தைகள் இவை. அவனிடம் உறுதி இருக்கிறது; தீவிரமான முயற்சி இருக்கிறது; என்றாலும், அவன் பூரண வெற்றி பெறவில்லை. வெற்றி பெற்றதாக எண்ணி, மனிதரிடையே

செல்லப் புறப்படுகிறான். அவர்களை வதைக்கும் சாதாரண ஆசைகள் அவன் மனத்திலே வீசவில்லை, உண்மைதான். இருந்தாலும், அவன் நெஞ்சினுள்ளே, எங்கேயோ ஒரு மூலையில் ஆசைப்புயல் பதுங்கிக் கிடக்கிறது. அது என்ன செய்யுமோ, எப்போது வெளிவந்து சுழன்று அவனை அழுத்துமோ?

இதற்குப் பதில் வேண்டுமானால், ஸன்யாஸியைத் தொடர்ந்து, பொய்யின் ராஜ்யம் என்று அவன் குறிக்கும் மனித சமூகத்திற்குச் செல்லவேண்டும்; தத்துவ விசாரமும் சிறிது செய்யவேண்டும். இரண்டையும், வங்காளக் கவிஞர் ரவீந்திரநாத தாகூருடைய உதவியைக்கொண்டு செய்து முடிக்கலாம். கவிஞர் துணைவரும்போது, தத்துவ விசாரத்தைக் கண்டு மிரள வேண்டுவதில்லை.

நாம் மலைக்குகையில் கண்ட ஸன்யாஸி, இப்போது சாலையருகிலே தங்கி யிருக்கிறான். இது தாகூருடைய '**ஸன்யாஸி**' என்ற நாடகத்தில் இரண்டாம் காட்சி. சாலை வழியிலே ஜனங்கள் கூட்டங் கூட்டமாகப் போகிறார்கள். அவர்கள் ஒவ்வொருவருக்கும் வெவ்வேறு நோக்கம், வெவ்வேறு ஆசை, உணர்ச்சி, மனநிலை. "ஏதோ ஒன்றை இழந்து விடுவோம் என்ற கவலையோடல்லவா இவர்கள் சுழலுகிறார்கள்? எதையோ? இவர்களால் ஒரு நாளும் எட்டமுடியாத ஒன்றையா?" என்று ஸன்யாஸி எண்ணமிடுகிறான். மனித வாழ்க்கையின் இயக்கமெல்லாம் பேதைமையாக அவனுக்குத் தென்படுகிறது.

இரு பெண்களும், ஒரு கிழவனும் வருகிறார்கள். அவர்கள் கிராம மக்கள். ஏதோ பேசுகிறார்கள். பெண்களுக்கு வாலிபப் பருவம்; கிழவனுக்கோ வழுக்கைத் தலை, நரை, திரை, தளர்ந்த நடை. மூப்பைத் தன் வயிற்றில் அடக்கிய வாலிபப் பருவம், வாலிபத்தை ஜீரணித்து ஏப்பம் விட்ட மூப்பைப் பார்த்துப் பரிகசிக்கிறது....

மூன்று குடியானவர்கள் வருகிறார்கள். ஒருவ சொல்லுகிறான்: "அவனுக்குக் கரும்புள்ளி செம்புள் குத்திக் கழுதை மேலேற்றி இந்த ஊர் முழுதும் சவா விடுகிறேனா, இல்லையா, பார்!" ஒருவன் இன்னொருவனை அவமானப் படுத்துவதாம். ஒரு பொய் இன்னொரு பொ மேல் பழிக்குப் பழி வாங்குவதாம்..... **பேதைமை.**

ஸ்தூலத்திலிருந்து சூட்சுமம் விளைந்ததா, சூட்சுமத் திலிருந்து ஸ்தூலம தோன்றியதா என்ற தத்துவ ஆராய்ச் யில் ஈடுபட்டு, ஆராய்ச்சியின் அங்கமான இரைச்சலோ இரண்டு மாணவர்கள் சாலை வழியே போகிறார்க வார்த்தை என்ற புழுவைக் கவ்வி மனத்தை நிரப்பும் தச் சொற்கொத்திப் பறவைகளா உண்மையை அளக் போவது.... **பேதைமை.**

இரு சிறுமிகளும் வழிப்போக்கன் ஒருவனும் உல் சப் பேச்சில் ஈடுபடுகிறார்கள். பிச்சைக்காரன் ஒருவ ஒரு பிடி சோற்றுக்குப் பல்லைக் காட்டுகிறான். போ வீரன் ஒருவன் அவனை வெருட்டுகிறான்.... அத்த யும் **பேதைமை.**

உலகம் எவ்வளவு குறுகியது, எத்தனை விதமா பேதைமை நிறைந்தது என்று ஸன்யாஸி எண்ணுகிற சூன்யமே சத்தியம், அதுவே அறிவு என்று கருதுகிற அப்போது வருகிறாள் வாஸந்தி என்ற சிறுமி. அவள் 'தீ டத்தகாத' வகுப்பைச் சேர்ந்தவள். வாஸந்தி கேட்கிறாள்

"ஸ்வாமி, உங்கள் அருகில் நான் வ ர ல ா ம ா?

ஸன்யாஸி: ஏன் கூடாது, குழந்தாய்?

வாஸந்தி: நான் அருகில் வந்தாலே தீட்டு என்கிற களே?

ஸன்யாஸி: அப்படிச் சொல்பவர்கள் எல்லோரு தீண்டத்தகாதவர்கள்; பிறவிப் புழுதியிலே விழுந்

புரண்டு அழுக்குப் படிந்தவர்கள். இந்தப் பிரபஞ்சத்தி லிருந்து விடுபட்டவன் எவனோ அவனே உண்மையில் தூய்மையானவன் ....

வாஸந்தி : அப்போது என்னை நீங்கள் தொடலாமா ?

ஸன்யாஸி : நான் எதையுந் தொடலாம். ஏனென்றால், என்னை ஒன்றும் தொட முடியாது... நான் ஸன்யாஸி. எனக்குத் தாயில்லை, தந்தை யில்லை, நண்பனில்லை, நான் தனி.

வாஸந்திக்கு இதெல்லாம் ஆச்சரியமாக இருக்கிறது.

அவளைக் கண்டாலே எல்லோரும் ஒதுங்கிச் செல்வது அவளுக்குத் தெரியும். இந்த ஸன்யாஸியின் போக்கோ அதிசயமாயிருக்கிறது. "தன்னை உதறித் தள்ளவில்லை. ஆனால் எப்போதும் இவர் அருகிலேயே இருக்கமுடியுமா ? இருந்தால் எவ்வளவு குதூகலமாயிருக்கும். இருக்க விடுவாரா ? வேறு தன்னை ஆதரிப்பவர் யார் இருக்கிறார் கள் ?" என்றெல்லாம் எண்ணி, வாஸந்தி கேட்கிறாள் : "என்னை விட்டு விட்டுப் போகமாட்டீர்களே ?"

ஸன்யாஸி : விடுவதற்கு என்ன உண்டு ? நான் விடு பட்டவன்.

வாஸந்தி : எனக்குப் புகலிடமாக ...

ஸன்யாஸி : புகலிடமா ? இந்தப் பிரபஞ்சத்தில் புகலிடம் ஏது ? இது ஆழங்காணாப் பிலம். பாழின் வாயி லிருந்து, ஈசலைப் போல் ஜீவராசிகள் வெளி வருகின்றன ; புகலிடம் தேடுகின்றன ; பின்பு பாழின் வாய்க்குள்ளே புகுந்து மறைகின்றன. உன்னைச் சுற்றி உள்ளவை யெல் லாம் பொய்யின் நிழல்கள் ; இவையே வாழ்க்கை யென்ற மாயச் சந்தையைக் கூட்டுகின்றன. சந்தையிலே என்ன விற்கிறார்கள், தெரியுமா ? கானல் நீரும் ஆகாசத் தாமரை யுமே. வந்து விடு, குழந்தாய், வந்து விடு. இந்தப் பிர பஞ்ச வாசனையே வேண்டாம்."

நம் மனத்திலே ஒரு கேள்வி : "எங்கே வருவது ?"

வாஸந்தி : எனக்கு விளங்கவில்லை. இந்த உலகத்திலே ஜனங்கள் சந்தோஷமாகத்தானே இருக்கிறார்கள் ?

இதற்குள்ளே ஸன்யாஸி சாலையிலே வரும் வேறு சில 'பேதைமை' வடிவங்களை ஆராய முற்படுகிறான். வாஸந்தி தூங்கிவிடுகிறாள். ஸன்யாஸிக்குத் திடீரென்று ஓர் எண்ணம் உதிக்கிறது : "தன்னிடம் புகல் தேடும் இந்தச் சிறுமி வாஸந்தியே, தன்னை மறுபடியும் மாயைக்கு அடிமையாக்கும் கருவியாக அமைந்துவிட்டால் ?" அந்த எண்ணத்தை ஒதுக்கித் தள்ளுகிறான். "தானாவது, மாயை வலைக்குள் விழுவாவது !"

வாஸந்தி விழித்துக் கொள்கிறாள். "ஸ்வாமி, என்னை விட்டு விட்டுப் போய்விடாதீர்கள்" என்று கேட்டுக் கொண்டே, ஸன்யாஸியின் மேல் சாய்ந்து, அவன் கையைப் பிரித்துத் தன் முகத்தில் ஒற்றிக்கொள்கிறாள். வாஸந்தி என்ற நிழல், பாழிலிருந்து வெளிவந்து புகலிடம் தேடிப் பாழுக்குள் மறையப் போகும் பொய் வடிவம் (அப்படித் தானே ஸன்யாஸி வாஸந்தியைக் கருதுகிறான்), சூன்யத்தில் நிலைத்தவனாகத் தன்னைக் கருதும் ஸன்யாஸியின் இதயத்தைத் தொட்டுவிடுகிறது. "என்ன மிருதுவான முகம் ! இதன் மென்மைக்கு சத்திய அந்தகாரத்தில் அகண்டத்துவம் எப்படி வந்தது ?" என்று ஸன்யாஸி ஆச்சரியப்படுகிறான்.

வாஸந்தி பேசுகிறாள். ஆனால் இப்போது அவள் பேசுவது, 'தீண்டாதார்' வகுப்பைச் சேர்ந்த, கல்வியறிவு இல்லாத சிறுமி ஒருத்தியின் பேச்சு அன்று. கவி ரவீந்திர தாகூருடைய கருத்துத்தான் வாஸந்தியின் பேச்சு மூலமாக வெளிவருகிறது. வாஸந்தி தாகூராக மாறிவிடுகிறாள். நாடகப் பண்பை இது குலைத்து விடுகிறது. என்றாலும்

வாஸந்தியின் மூலமாக, தாகூர் பேசுவது கவிதை நிரம்பிய வார்த்தை: "அழகு வாய்ந்த பொருள்களே இது வரை நான் காணாத உண்மைகளை எனக்குக் காட்டும் கருவிகள். சத்தியத்தின் மாளிகைக்குத் திறவுகோல் சௌந்தரியமே."

ஸன்யாஸி திகைக்கிறான்: "அழகா, சௌந்தரியமா? இது மனப்பிரமை அல்லவா? ஞானிக்குப் பூவும், புழுதியும், ஓடும் செம்பொன்னும், ஒன்றல்லவா?" என்று நினைக்கும்போதே, தன் ஜீவனில் இன்பச் சோர்வு படிவதையும், இந்திரதனுசின் வண்ணங்கள் படர்ந்த வாழ்க்கைப் பனித்திரை தன்னை 'வா' என்றழைத்துத் தன் கண்முன்னே அசைவதையும் ஸன்யாஸி உணர்கிறான். உடனே பழைய வேதாந்தம் அலைமோதி வருகிறது. எத்தனையோ நாட்கள் வருந்திப் பெற்ற விரக்தி குழந்தை யொன்றின் மலர்முகம் பட்டு அழிவதா? ஸன்யாஸிக்குக் கோபம் வருகிறது; வாஸந்தியிடம் சீறுகிறான். ஏன் என்று அறியாத அந்தச் சிறுமி கண்ணீர் விடுகிறாள். உடனே ஸன்யாஸியின் உள்ளத்தில் பரிவு உதயமாகிறது. "அழாதே, வாஸந்தி, நீ அழுவதை என்னால் தாங்கமுடியவில்லை" என்கிறான்.

சூன்யத்தில் கலந்த ஞானிக்குக் கோபமும் பரிவும் எங்கே யிருந்து வந்தன? ஸன்யாஸிக்கும் இந்தக் கேள்வி தோன்றுகிறது. "கோபம் என்ற விஷப்பாம்பு எங்கே பதுங்கிக் கிடந்தது? அகங்காரத்தின் மூலபலமான கோபம், மதம், மாச்சரியம் முதலிய உணர்ச்சிப் பேய்கள் இன்னும் சாகவில்லையா? பிரகிருதி என்ற மாயாவி தன் மகுடியை ஊதியதும், இவை கூத்தாடத் தொடங்கி விட்டனவே! எது உண்மை, இந்தக் குழந்தையின் களங்கமற்ற முகமா, சூன்யமா? பிரகிருதிக்கு அப்பால், சூன்யத்தையும் கடந்த ஏதோ ஒரு சத்தியத்தை யல்லவா இந்தச் சிறுமியின்

அன்பு தொட்டுக் காட்டுகிறது!" என்றெல்லாம் எண்ண மிட்டுக்கொண்டே "முன்னே பெறமுயன்ற சூன்ய லயமா, இந்த அன்புச் சிறையா, எது சத்தியம் என்று உணர வேண்டும்" என்ற தீர்மானத்தோடு, கலக்கம் படிந்த மனத்தினனாய், ஸன்யாஸி போகிறான். இரண்டாம் காட்சி முடிகிறது.

மலைக்குகையின் அருகிலே உள்ள காட்டுப் பாதையில் ஸன்யாஸியை மறுபடியும் பார்க்கிறோம். அந்தி மயங்கும் வேளை. ஆகாயத்திலே, நட்சத்திரங்கள் ஒவ்வொன்றாய்த் தோன்றிக் கண் சிமிட்டுகின்றன. ஸன்யாஸியின் வார்த்தை களில் பழைய பல்லவி வடிவாகிறது: "பிரகிருதியே, நீ எனக்கு அடிமை. என் முன் நட்சத்திரப் பதக்கம் மார்பிலே மின்ன, நீ நடனமாடுகிறாய்."

இடைச்சிறுமியர் சிலர் பாடிக்கொண்டு போகிறார் கள். பாட்டு ஸன்யாஸியின் காதில் விழுகிறது:

**"காட்டு வெளியினில் எங்கேயோ—குழல்**
**'காதலீ வா' என் றழைக்குது—எந்தன்**
**வீட்டில் அடைத்துக் கிடக்கவும்—இசை**
**வேதனை தாங்கவும் ஓர்கிலேன்—செல்லும்**
**பாட்டை எதுவெனச் சொல்லுவீர்—சென்று**
**பற்றி அவன்மலர்ப் பாதத்தைக்—குழல்**
**பாட்டினில் பேசிய செய்தி என்—உளப்**
**பண்பொ டிசைந்த துணர்த்துவேன்."**

ஸன்யாஸிக்கு வாஸந்தியின் ஞாபகம் வருகிறது. "அவள் எங்கே இருக்கிறாளோ? திரும்பிச் சென்று அவளைத் தேடுவோமா? திரும்பிப் போவதா? மறுபடியும் பிர கிருதியின் மாய வலைக்குள் விழுவதா?"

சிறுமி ஒருத்தி வருகிறாள். ஏழை விறகுவெட்டியின் மகள். தன் தகப்பன் ஏழையென்றோ, விறகு வெட்டி யென்றோ அவள் நினைக்கவில்லை. தகப்பன் தகப்பன்

தானே! காரணங்காணாத அன்பு அவளுடைய களங்கமற்ற உள்ளத்தில் பெருக்கெடுத்து ஓடுகிறது. ஸன்யாஸி இதைக் காண்கிறான்.

தன் இரு பெண்களுடன் அந்த வழியே வந்த குடியான மகள் ஒருத்தி ஸன்யாஸியைக் கண்டு வணங்குகிறாள். அவளுக்குப் பொழுது போவது எப்படி என்று ஸன்யாஸி கேட்கிறான். "பொழுது போவதைக் கவனிக்க நேரம் ஏது? வீட்டுக்காரன் வேலைக்குப் போகிறான், வருகிறான்; குழந்தைகள் இருக்கின்றன, எல்லோருக்கும் கஞ்சி காய்ச்சி ஊற்றவேண்டும்; நூல் நூற்கவேண்டும்; வீட்டைத் தன் உழைப்பால், தன் அன்பால் பாதுகாக்க வேண்டும். பொழுது சொல்லிக் கொள்ளாமல் போய்விடாதா?" இப்படியும் தன் வலிமை அறியாத அன்பு உண்டா என்று ஸன்யாஸி எண்ணுகிறான். "அந்தப் பாட்டு, இடைச் சிறுமி பாடியது, உண்மையாய் இருக்குமோ? மனித உள்ளத்திலே கனியும் அன்பு ஒன்றோடுதான் பரம் பொருள் இசைக்கும் சத்தியகீதம் பொருந்துமோ?" என்ற எண்ணமும் நிழல்போல் அவன் மனத்தில் படர்கிறது.

இருட்டி விட்டது. யாரோ இரு வழிப்போக்கர்கள் வருகிறார்கள்; நண்பர்கள் பிரியப்போகிறார்கள். "பிரிந்தால் என்ன? உலக இயல்பு கூடுவதும் பிரிவதும் தானே? அதனால் என்ன, ஒரு கணப்பொழுதாவது நட்பின் ஒப்பற்ற மாதுர்யத்தை உணர்ந்தோமல்லவா?" என்று அவர்கள் பேசிக்கொள்வது ஸன்யாஸியின் காதில் விழுகிறது. "அந்த ஒரு கணத்திலே, நட்பின் வழியாக இருவரும் கடவுளைத் தொட்டு விட்டார்களா? இது சாத்தியமா?" என்று ஸன்யாஸி ஆலோசிக்கிறான்.

ஸன்யாஸிக்கு வாஸந்தியின் ஞாபகம் மறுபடியும் வருகிறது, உண்மையின் வேகத்தைப்போல், பரம்பொருளின் கருணையைப்போல். வாஸந்தி அன்று அழுத கண்ணீர்த்

துளிகளாக நட்சத்திரங்கள் தோன்றுகின்றன. "தென்றலின் ஸ்பரிசம் வாஸந்தியின் மெல்லிய கரமாய்த்தான் இருக்கவேண்டும். மறப்பதா, எப்படி மறப்பது? எதற்காக மறக்கவேண்டும்?" என்று ஸன்யாஸி (நான்காம் காட்சியில்) தன்னைக் கேட்டுக் கொள்ளும்பொழுது, அவனுடைய பழைய இலட்சியம் அழிகிறது. ஸன்யாஸி புதியதோர் ஆதர்சம் பெறுகிறான். அகண்டம் என்பது அண்டத்திற்கு அப்பாற்பட்டதன்று, அகண்டத்தின் வடிவே இந்த அண்டம், அன்பே சத்தியம், அதுவே சிவம், என்பதை ஸன்யாஸி உணர்கிறான். வாஸந்தியை - அதாவது அன்பின் ஸ்வரூபத்தைத் தேடிக்கொண்டு புறப்படுகிறான். இப்போது ஸன்யாஸியிடம் பழைய மமதை இல்லை, உலகம் பொய் என்ற எண்ணம் இல்லை, ஒரு பொய்ய பல பொய்களைத் தேடி அலைவதே மனித வாழ்க்கை என்ற கருத்து இல்லை. சூன்யத்தில் ஒடுங்க எண்ணிய அவன், இப்போது அன்பிலே பெருக முனைகிறான். வாஸந்தி எங்கே என்பது ஒருவருக்கும் தெரியவில்லை. ஒருத்தி சொல்கிறாள்: "வாஸந்தியா? அவள் இறந்துவிட்டாளே!" "இறந்து விட்டாளா? இருக்கவே இருக்காது" என்கிறான் ஸன்யாஸி: "அவள் இறந்தால் நாம் எல்லோரும் இறந்தவர்கள்."

உண்மை தானே! அன்பு உள்ளவரை மனிதன் அமரனாக வாழ்கிறான். அன்பு மாய்ந்தால் அவனும் மாய்கிறான். ஏதோ ஒன்றினிடம் பற்று இல்லாமல் ஒருவனும் வாழ முடியாது. பாசத்திலிருந்து பூரணமாக விடுபடவும் முடியாது. ஒன்று செய்யலாம்: பாசத்தைத் தன்னலமற்றதாகச் செய்து, சச்சிதானந்தப் பொருளோடு நம்மைப் பிணைக்கும் தெய்வப் பிணையாக அதை அமைத்துக்கொண்டு நாம் வாழ முடியும். அவ்வாறு வாழ்வதே, பிரகிருதியை உள்ளபடி வெல்வது, உண்மையை அறிவது, கடவுளோடு கலப்பது. தாகூர் எழுதியுள்ள '**ஸன்யாஸி**' என்ற நாடகம் வெளியிடும் தத்துவம் இது.

## 4

# கொலு

இன்று மாலை கொலு வைக்க வேண்டுமென்று அழுதழுது வீங்கிய முகத்திலே புன்னகை அரும்ப, என் தங்கை கொலு வைக்கிறாள். ஐந்தாறு பொம்மைகள் - வீணை உடைந்த ஸரஸ்வதி, தாமரை இல்லாத் தாமரையாள், பாம்பில்லாத பிடாரன், ராஜ்யமில்லாத ராஜா, கிரீடமில்லாத ராணி, உருவமே இல்லாத 'மரப்பாச்சிகள்,' கடலை மறந்த சோழிகள், இவற்றைக் கிழிந்த ரத்ன கம்பளத் துணுக்கிலே பரத்தி வைக்கிறாள். குத்துவிளக்கு சுடரில்லாமல் பக்கத்திலே ஏங்கி நிற்கிறது. பொம்மைகளோடு அவள் ஏதோ பேசிக்கொண்டிருக்கிறாள். வார்த்தைகள் காதில் விழவில்லை. காதில் விழுந்தாலும், அவளுடைய உள்ளம் எனக்கு இருந்தாலல்லவா பொருள் விளங்கும்? பொம்மைகளும் எனக்குப் பரிதாபமான ஊமைகளாகப் படுகின்றன.

"இதைப் பார் அண்ணா, ஸரஸ்வதி" என்கிறாள் என் தங்கை.

"ஆமாம், வீணை உடைந்த ஊமை ஸரஸ்வதி" என்கிறேன்.

ஊமையா? பொம்மைகள் ஊமைகளா? என் தங்கை நான் சொன்னதைக் காதில் வாங்கவில்லை. ஆரபிக் கீர்த்தனம் ஒன்றின் பல்லவியை முனகுகிறாள்; பிறகு பாடுகிறாள்: "ஸ்ரீ ஸரஸ்வதி நமோஸ்துதே."

ஊமைகளா, யார் சொன்னது? இதோ தேவி ஸரஸ்வதி என்னை மலர விழித்து நோக்குகிறாள். அவள் உடைந்த வீணை பேசுகிறது. அது என்ன அற்புத ராகமோ? அதன்

சிருஷ்டி ஓங்காரத்தில், திருமகள் பாதத்தின் அடியிலே மாயத்தாமரை மலர்கிறது. அதன் இதழ்களைக் கோத தளிர் அலைகள் அணிவகுத்து நெருங்குகின்றன. அலையின் மேலே மிதந்து வருவது உடைந்த சோழியா? ஆம். இப்போது பூரணத்துவம் பெற்று ஜீவ களையுடன் ஆடி வருகிறது. இந்த சௌந்தரியப் பொய்கைக்கரையிலே பிடாரன் ஒருவன் குழலூதுகிறான். இசையோடு பொருந்தி அசையும் தங்க அரசமர நிழலில், உருவிவிட்ட மின்னலைப்போல் பாம்பொன்று நிமிர்ந்து துவண்டு துள்ளுகிறது. அரசனும் அரசியும் இந்த விந்தையை இமை கொட்டாமல் பார்த்து நிற்கிறார்கள். அரசியின் முகத்திலுள்ள அழகைத் தேக்கி நிற்கின்றன வைரக் கிரீடமும், புன்னகையும். அரசன் முகத்திலே உள்ள கம்பீரத்தின் வடிவாய் பரிவாரங்கள் சூழ்ந்து நிற்கின்றன. பரிவாரங்களா? ஆம். அரசனுடைய பரந்த சாம்ராஜ்யத்தின் சின்னங்கள், கொலுவிலே மரப் பாச்சிகளாய் நின்று இசையிலே உயிர்பெற்ற அதிசயங்கள்.

அந்த ஆரபிப் பாட்டு தாரஸ்தாயி பஞ்சமத்தை எட்டிப் பிடித்தது. தேவி ஸரஸ்வதி பேசுகிறாள்: "கேளடா, உண்மை காணாமல் அலமந்து துடிக்கும் புத்தகப் புழுவே, இந்தப் பிரபஞ்சந்தானடா என்னுடைய புத்தகம். பார்த்தாயா, மனித உள்ளங்களாலானது என் படிக மாலை - வேதனை உதிரம் வடிக்கும் சிவப்பு, அறிவின் வெண்சுடர் வீசும் வைரம், அழகு சமைத்த கோமேதகம், அன்பின் விளைந்த மரகதம், அறம் நிருமித்த வைடூரியம், எல்லா மணிகளும் உண்டு. என்ன வேண்டும்? மணிகள் உடைந்திருக்கின்றன என்று பார்க்கிறாயா, என் வீணையைப் போல். ஆமாம், அவளுடைய கொலுப் பொம்மைகள், உடைந்திருப்பதாகவே தோன்றும்."

தேவி ஸரஸ்வதி நகைக்கிறாள்; அந்த மோகன வெள்ளம் வீணாநாதக் கடலில் சங்கமமாகிறது. வீணையின்

மீட்டொலி அலைபோல் துள்ளி விம்முகிறது. எப்போதோ கண்ட வார்த்தைகள் என் மனத்தில் வடிவாகின்றன:

**"விந்தை விந்தையாக வெனக்கே - பல**
**விதவிதத் தோற்றங்கள் காட்டுவிப்பாள் ;**
**சந்திரனென்றொரு பொம்மை - அதில்**
**தண்ணமுதம் போல ஒளி பரந்தொழுகும் ;**
**மந்தைமந்தையா மேகம் - பல**
**வன்னமுறும் பொம்மையது மழை பொழியும் ;**
**முந்த ஒரு சூரியனுண்டு - அதன்**
**முகத்தொளி கூறுதற்கோர் மொழியிலையே ;**

*　　　　*　　　　*

**ஞால முற்றிலு நிறைந்தே - மிக**
**நயந்தரு பொம்மைக ளெனக்கெனவே**
**கோலமுஞ் சுவையுமுற - அவள்**
**கோடிபல கோடிகள் குவித்து வைத்தாள்."**

கோலமா, சுவையா? பிரபஞ்சப் பொம்மைகளில் இவை ஒன்றையுமே நான் காணவில்லையே!

இருங்கள். வீணை நாதத்தோடு கலந்து கலைமகளின் வார்த்தைகள் கம்பீரமாக ஒலிக்கின்றன:

"அப்படித்தான். கோலமும் சுவையுமில்லாமல்தான் உனக்குப் படும். பிரபஞ்சப் பொம்மைகள் ஊமைகளாகத் தான் தோன்றும். நீல வானமும், பூமி யென்ற இந்தப் பச்சை வெளியும், கிழிந்த ரத்ன கம்பளம் போலவா உனக்கு இருக்கின்றன! அப்படித்தான் இருக்கும். ஆனால் நீதான் பார்த்தாயே, என் உடைந்த வீணை பேசியதை. அதுபோல, ஒருநாள் உடைந்த உள்ளம் நேராகும், கிழிந்த அண்டம் நிறைவுபெறும், வாழ்க்கையெல்லாம் இறைவனுடைய பரிபூரணத்தை எய்திவிடும்...எப்பொழுதா?..."

அந்த ஆரபிக் கீர்த்தனம் சரணத்தில் படிந்து இறைவனுடைய சரணத்தைத் தொட்டு நின்றது.

"தெரியவில்லையா? எப்பொழுதா?...இந்தச் சிறுமியைப் போல், பொம்மையில் பொருளை அறியும்போது, உடைந்த விளிம்பில் விளிம்பில்லா வெளியைக் காணும் போது, நீ குழந்தை உள்ளம் பெறும்போது."

ஆரபிக் கீர்த்தனம் "ஸ்ரீ ஸரஸ்வதி நமோஸ்துதே" என்று பல்லவியில் சுழன்று ஆதார சுருதிப் பிரணவத்தில் கலந்தது.

நான் இந்த உலகத்திற்கு வந்து கண் விழித்தபோது என் தங்கை குத்துவிளக்கை ஏற்றிக்கொண்டிருந்தாள். அதன் மங்கல் ஒளியில் ஸரஸ்வதி பொம்மையின் உடைந்த வீணை என் கண்ணில் பட்டது.

## 5

# தானியமும் பதரும்

களத்து மேட்டிலே இன்று முறங்களுக்கு வேலை அதிகம். பொன் மணிகளைப்போல் குவிந்து கிடக்கும் தானியத்திலிருந்து பதரைப் பிரித்துவிட்டால், மருதவெளியிலே களஞ்சியத்தை நோக்கி நெல்மணிகள் ஆடி அசைந்து செல்வதையும், மக்கள் மனத்திலே அறுவடை வெற்றியின் நிறைவு பொங்குவதையும் காணலாம். காற்றெனும் வானவன் கைகட்டிக் காத்திருக்கிறான். முறங்கள் உல்லாசமாக ஆடுகின்றன. அவற்றிலிருந்து விழும் தானிய அருவியில் பாய்ந்து பதரை மட்டும் எடுத்து வெளியே எறிகிறான் காற்றுத் தேவன். சூன்ய வாழ்வுகளாய், கலங்கிச் சுழன்று தள்ளாடி, பதர்க்குவியல்கள் காட்டு வெளியிலே மிதந்து செல்கின்றன....

உண்மை என்ற முறம் இருந்தால்.... உண்மை என்பது என்ன? பழைமையான கேள்வி; எத்தனையோ முறை எத்தனையோ பேர் கேட்டுக் கேட்டுச் சலித்துவிட்ட முடியா நெடும்புதிர்; மனித அறிவுகொண்டு திட்டமாய் அளக்கவொண்ணாத ஆழம். மகான் இயேசு கிறிஸ்துவின் முன்னிலையில், 'உண்மைக்கு அத்தாட்சியாய் இந்த உலகத்திற்கு வந்தேன்' என்று அவர் சொல்லி வாய் மூடுமுன், போந்தியஸ் பிலாத்து என்பவன் கேட்ட கேள்வி உங்களுக்கு ஞாபகம் இருக்கும். 'உண்மையா? அது என்ன?' என்று உண்மையின் வடிவத்தையே அவன் கேட்டதாக, கிறிஸ்தவ வேதம் சொல்லுகிறது. அவன்தான் என்ன செய்வான்? அவனோ தேசாதிபதி; அந்தக் காலத்தில் ரோம ஸாம்ராஜ்யத்தில் ஒரு பகுதியாயிருந்த ஜூடியா என்ற மாகாணத்தின் தலைவன். இயேசுவைப் புரட்சிக்காரன், சமூகக் கட்டுப்பாட்டை உடைத்தெறிய

முயலும் துரோகி, சோம்பேறிகளோடு திரிந்து மத விரோதமாய்க் கிளர்ச்சி செய்து உண்மையை அழிக்க முற்பட்டவன், என்றெல்லாம் யூத மதத் தலைவர்கள் குற்றஞ் சாட்டி, பிலாத்திடம் முறையிட்டார்கள். விசாரணையின்போது இதற்குச் சமாதானம் கூறும் வகையிலே இயேசு பேசிய வார்த்தைகள் பிலாத்திற்கு விசித்திரமாய் இருந்தன. "உண்மையைச் சொல். ஏன் பேசாமல் இருக்கிறாய்? உனக்கு நான் மரண தண்டனை விதிக்கலாம். உன்னை விடுதலை செய்யலாம். எதைச் செய்யவும் எனக்கு அதிகாரமுண்டு" என்கிறான் பிலாத்து. முகத்திலே கருணை ததும்ப, கனிந்த - ஆனால் தீர்மானம் தொனிக்கும் - குரலில் இயேசு திரும்பிப் பேசுகிறார்: "அதிகாரமா? உனக்கேது அதிகாரம்? அதிகாரம் என்பது இறைவனிடமிருந்து வருகிறது. அப்படி உனக்கு வந்திருந்தாலொழிய, உன்னால் என்னை என்ன செய்துவிட முடியும்?" பிலாத்தின் மனத்திலே ஏதோ ஒன்று, தீரம் நிறைந்த இந்தக் கருணை வடிவம் ஒரு குற்றமும் செய்திராது என்று சொல்லுகிறது. இந்த உள்ளுணர்வைக் கொழுந்தை நம்புவதா, நம்பாமல் இருப்பதா? இயேசுவின் சொற்களுக்கோ பொருள் காண முடியவில்லை; யூத மதத் தலைவர்களின் கூச்சலுக்கோ சாட்சி ஒன்றும் இல்லை. பிலாத்து என்ன செய்வான், மயங்குகிறான். மௌனம் - இயேசு பேசாமலும் இருக்கிறாரே - உண்மையை வெளியிடுமா? பேச்சு - யூதத் தலைவர்கள் பேசிக் கொண்டுதானே இருக்கிறார்கள் - உண்மையை மறைக்குமா? கடைசியாக "எப்படியாவது போங்கள். இந்த இயேசு நிரபராதியானால், இவனைச் சிலுவையில் இடும் பாவம், யூதர்களே, உங்களைச் சேரும். அழைத்துச் செல்லுங்கள், என்ன வேண்டுமானாலும் செய்யுங்கள். இனி எனக்குப் பொறுப்பொன்றும் இல்லை" என்று கையைக் கழுவி விடுகிறான்.

பிலாத்துக்குப் பொறுமை இல்லை; எதிரே நின்ற உண்மையை உணர முடியவில்லை; உணர்ந்திருந்தால், அவனும், எத்தனையோ பேச்சைக் கேட்டு மனம் சலித்த மனோதத்துவ ஞானி ஒருவன் சொன்னதை, அதை ஒப்புக் கொண்டிருப்பான். "பேசுவது எதற்காக என்று தெரியுமா? உள்ள நிலைமையை வெளியிடவன்று, மறைப்பதற்காகவே" என்கிறான் அந்த மனோதத்துவ ஞானி. நம்முடைய கவிஞர் சொல்வது நமக்குத் தெரியுமே! "உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்" என்று அவர் பேசும்போது, ஒன்றுக்கும் கலங்காத துறவியும் பொய்ம்மையைக் கண்டு கலங்குவதைப் பார்க்கிறோம். இவ்விரு ஞானியரும் கண்டதென்னவோ ஒன்றுதான். வாழ்க்கை என்ற களத்திலே இவர்கள் சென்றார்கள். ஞானியரும், பதரும் ஒன்றாகக் கலந்து நடப்பதைக் கண்டார்கள். பதரிலே பெரும் பகுதி, உள்ளொன்றும் புறமொன்றுமாய் வளைய வரும் பொய்ம்மை வடிவங்கள் என்பதைத் தெளிந்தார்கள். "ஐயோ, இவர்களையும் மனிதர்களாகக் கொள்வதா?" என்று மனங்கசிந்தார் ஒருவர். "இந்தப் பதர்களோடு பழகிப் பதராக ஆகிவிடக் கூடாதே" என்று அஞ்சினார் இன்னொருவர்.

உள்ளதை - அது வெளியே உள்ளதோ, உள்ளத்தில் உள்ளதோ - அதை உள்ளபடி உரைப்பது, இதைத் தானே கட்டளைக் கல்லாகக் கொண்டு ஞானியர் இருவரும் மனிதனை மதிப்பிட்டார்கள். ஆனால் 'உண்மை' என்று பேசும்போது 'வாய்மை' என்ற சொல்லின் எல்லையைத் தாண்டியே நம்முடைய சிந்தனை செல்கின்றது. உண்மையான வேலைக்காரன் என்று ஒருவனைப் பாராட்டும்போது, உண்மை பேசும் வேலைக்காரன் என்பது தானா நம்முடைய கருத்து? இல்லை. எந்த வகையிலே எஜமான

னுடைய கருத்தை நிறைவேற்றுகிறான் என்பதைக் கொண்டு, வேலைக்காரனுடைய தராதரத்தை அளவிடுகிறோம். பொய்பேசவே ஒரு வேலைக்காரனை நான் நியமித்திருந்தால், அந்தப் பொறுப்பை அவன் நிறைவேற்றும் போது, பொய் பேசும் என் வேலைக்காரன் உண்மையான வேலைக்காரனாகிறான். எவன் தன் கடமையிலிருந்து விலகிச் செல்கிறானோ அவன் உண்மையானவன் இல்லை. ஆண்டான் கருத்தை ஒட்டி நடப்பவன் உண்மையான வேலைக்காரன். மாணவனுடைய அறிவு, குணம் இவற்றை வளர்ப்பதையே நோக்கமாகக் கொண்டவன் உண்மையான ஆசிரியன். தன்னுள் வாழ்வாயுள்ள அழகையும், தன் அனுபவத்தையும் சொல்லிலோ, வண்ணத்திலோ, சிலையிலோ வாழ்வாக்க முயல்பவன் உண்மையான கலைஞன். ஒரே வார்த்தையில், ஏதாவது ஒரு தருமத்தைத் தன்னுடையதாகக் கொண்டு அதன் இலட்சியத்திற்குக் கட்டுப்பட்டு அதற்கு உண்மையாய் நடப்பவன் உண்மையான மனிதன். இதல்லாமல் கூட்டத்தோடு கூடிக் கூவியும், நோக்கமற்ற செய்கையில் இயந்திரத்தைப்போல் ஈடுபட்டும் வருபவர்கள் உண்மையுள்ளவர்களல்ல, உண்மையில் மனிதர்கள் அல்ல. அவர்கள் வாழ்க்கை சுக்கானும், நங்கூரமும் இல்லாத படகைப் போல் திசைதடுமாறிக் குறிக்கோளற்றுச் சுழன்று வருகிறது. அவர்கள் வெறும் பாவைகள்.

உண்மை என்னும்போது இன்னொரு கருத்தும் உதயமாகிறது. அன்று ஒரு பட்டியிலே நடந்த சம்பவம். யாரோ ஓர் ஏழை. அவனுக்கும் மற்றொரு ஏழைக்கும் ஏதோ மனத்தாங்கல். அன்றிரவு, மந்தை வெளியிலே, ஒருவன் மற்றவனைக் கொலை செய்து விட்டான். கொலை செய்தானே, இந்த ஏழை, இவனிடம் உள்ளொன்று, புறமொன்றில்லை. இதயத்திலே குமைந்தது கோபக் கனல். அது ஜ்வாலையாகி, செய்கை உலகில் கொலையாக

மாறிவிட்டது. ஆனால் இவனை உண்மையானவன் என்று சொல்கிறோமா? ஏன் சொல்லவில்லை? உள்ளேயிருந்து தூண்டும் எண்ணங்களும் உணர்ச்சிகளும் எப்படியிருந்த போதிலும், அவற்றின்படி நடந்துவிட்டோம் என்பதால் மட்டும் உண்மையுள்ளவர்களாகிவிட முடியாது. எண்ணங்களும், உணர்ச்சிகளும் ஏதாவது சிறந்த இலட்சியத்தின் விளைவாக அமைந்து, வாழ்க்கை அதோடு ஒன்றி இயங்கும் பொழுதுதான், உண்மை பாவம் மனிதனிடம் தோன்றுகிறது.

சிறந்த இலட்சியம் என்பது என்ன? இலட்சியம் என்பது குறிக்கோள், திடமான நோக்கம். ஓரளவுக்காவது இந்த நோக்கம் மனிதனுடைய நற்குணங்களிலிருந்து தோன்றினால், அதை இலட்சியம் என்கிறோம். பணம், பணம் என்று வேறு சிந்தனையில்லாமல், பணத்தைக் குவிப்பதிலேயே தன்னை அழித்துக் கொள்ளும் உலோபி ஒருவனுக்கு வாழ்க்கையில் திடமான நோக்கம் இல்லை என்று சொல்ல முடியுமா? தன் ஆதிக்கத்தை எப்படியாவது பெருக்க வேண்டும் என்று தனது சைனியத்தைப் பிற நாடுகளின்மேல் ஏவிச் சூறையாடும் அரசன் ஒருவன், இவனுக்குக் குறிக்கோள் இல்லையா? ஆனால் உலோபியின் பணத்தாசையை, இந்த அரசனுடைய மண்ணாசையை இலட்சியம் என்று குறிப்பது நிடையாது. அன்றொரு நாள் வயதான ஆசிரியர் ஒருவரிடம் பேசிக்கொண்டிருந்தேன். அவரை நான்கு மாதங்களுக்குள் மூன்று இடங்களுக்கு அதிகாரிகள் மாற்றிவிட்டார்கள். நான் காலைது இடத்திற்கு ஏன் இதுவரை மாற்றவில்லை என்று எனக்கு வியப்பு; மாற்றிவிடப் போகிறார்களே என்று அவருக்கு பயம். "என்ன செய்வது? வயிறு இருக்கிறதே, 'சேவித்தும் சென்றிரந்தும்...' உங்களுக்குத் தெரியாததா?" என்று தளர்ச்சியுடன் பேசினர். அவரை

எனக்கு நன்ருகத் தெரியும். வயிற்றுப் பிழைப்புக்காகக் கடனைத் தொலைக்கும் குறுகிய மனப்பாங்கு அவருக்கில்லை என்பதை நான் உணர்ந்தவன். ஆகவே "இதென்ன பேச்சு? உண்மையா இது?" என்றேன். முகத்திலே வெட்கக் குறி படர, "இல்லை. என் வயிறு மட்டும் என்று சொன்னது தவறு. ஏழெட்டு ஜீவன்கள் என்னை நம்பி இருக்கின்றனர். அவைகளைக் காப்பாற்றுவது என்னுடைய கடமையல்லவா?" என்று சொன்னுர். "அவ்வளவு தானு?" என்று கேட்டேன். கொஞ்ச நேரம் மௌனமா யிருந்துவிட்டு, "உங்களிடம் என்ன மறைப்பு? நீங்கள் எதிர் பார்ப்பது தெரியும். அடிக்கடி என்னை இடம் விட்டு இடம் மாற்றுவதால், மாணவர்களோடு நெருங்கிப் பழகி அவர்களுக்குச் செய்யவேண்டிய கடமையை என்னுல் செய்ய முடியவில்லையே என்பதுதான் என் கவலையா யிருக்கவேண்டும். ஆனுல் அந்த உணர்ச்சி தற்போது எனக்கில்லை. பொதாகி விட்டது. இலட்சியத்தில் நம்பிக்கை குறைந்துவிட்டது" என்ருர். இந்த ஆசிரியர் வார்த்தை களில், படிப்படியாக எப்படி நோக்கம் இலட்சியமாகிறது, இலட்சியம் சிறந்த இலட்சியமாகிறது என்பதைக் காண லாம். என் வயிறு வளர்க்கவேண்டும் என்ற நோக்கம், என் குடும்பத்தைப் பாதுகாக்கவேண்டும் என்ற சிறந்த நோக்கமாக, சாதாரண இலட்சியமாக மாறி, பிறகு மாண வர்க்காக வாழவேண்டும் என்ற ஆசிரிய தருமத்தின் சிறந்த இலட்சியத்தின் முன் மறைந்து விடுகிறது. தன் நன்மை, தன் நன்மையைவிடத் தன் குடும்பத்தின் நன்மை, தானும் தன் குடும்பமும் எவ்வாருயினும் மாணவர் நன்மை - இலட்சியம் எப்படிச் சிறந்ததாகிறது என்ப தற்கு பதில் இந்தக் கோவையில் இருக்கிறது. ஆகவே, இலட்சியத்தில் சுயநலம் எவ்வளவுக்குக் குறைகிறதோ, அவ்வளவுக்கு அது சிறந்த தாகிறது. சுயநலமே உருவா யுள்ள நோக்கம் எதுவும் இலட்சியமாகாது.

ஆனால் மனித வாழ்க்கையைப் பொறுத்தமட்டில் சுய நலத்துக்கு வித்தான 'தான்' என்ற உணர்ச்சி சாகாவரம் பெற்ற பிராணி. அதைக் கொன்றுவிட்டோம் என்று நினைக்கும்பொழுது அந்த நினைவிலேயே வேறொரு உருவத்தில் நின்று நம்மை அது பரிகசிக்கும். 'தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்', 'தியாகி' என்று நாம் சொல்லும் ஒருவனிடம்கூட, 'தான்' என்ற இந்தப் பிராணி மறைந்து வாழ்கிறது என்று அமெரிக்க ஆசிரியன் எமர்ஸன் சொன்னான். "பொதுநல ஊழியரிடம் மறைந்து வாழும் 'தான்' என்ற சக்தியை எடுத்துவிட்டால் அவர்கள் ஜீவனற்ற, செயல் திறமை மழுங்கிய பேடிகளாகி விடுவார்கள்" என்பதும் எமர்ஸன் கண்ட உண்மை. சுயநலம் சூரபதுமனைப் போன்றது. சாதாரணமாக, மனிதனுடைய தீமைக்கெல்லாம் வித்தாயும், தாரகமாயும் அது விளங்கிறது. மனிதனுடைய நல்லுணர்ச்சிகளை விலங்கிட்டுச் சிறையிடுகிறது, சூரபதுமன் தேவர்களைச் சிறையிட்டதுபோல. சூரபதுமன் எத்தனையோ வடிவத்தில் கந்தவேளுடன் போர் புரிந்ததாயும், கடைசியாக அவனைச் சங்கரித்தபொழுது, அவனையே தன் கொடியாகவும் வாகனமாயும் கந்தவேள் கொண்டான் என்றும், புராணம் கூறும். சூரபதுமன் முற்றிலும் அழிந்துவிடவில்லை; முருகனுக்குக் கொடியாகவும், வாகனமாகவும் இருந்து அடியார்க்கருள உதவி வருகிறான்; என்றாலும், முருகனுடைய வேல் பட்டுச் சூரபதுமன் அழிந்தான் என்றும் சொல்லுகிறோம். சுயநலம் என்ற சூரபதுமனை எப்போது அழித்து வெற்றி பெறுகிறோமென்றால், அதைப் பிறர் சேவைக்குக் கருவியாக்கும்பொழுதுதான், கருவியைப் பற்றிய உணர்வே நம்மிடம் அற்றுப் போகும்பொழுதுதான். இந்த வகையிலே வெற்றி பெற்றவர்களே உண்மை என்பதைப் பூரணமாகப் பெற்றவர்கள். வாழ்க்கை முழுதும் தன்னலமற்ற உன்னதமான இலட்சியத்தின் வெளியீடாக அமையும்பொழுது

உண்மை என்ற தத்துவம் வீரமாக உயர்கிறது. வீரனிடம் இரண்டு குணங்கள் உண்டு: ஒன்று, தனது இலட்சியத்திலே அளவு கடந்த நம்பிக்கை. மற்றொன்று, தன் தருமத்திற்குப் புறம்பானதோ, அதோடு முரண்படுவதோ, அது வேறு வகையில் எவ்வளவு சிறந்ததாய் இருந்தபோதிலும் அதனிடம் அலட்சிய பாவம். அம்புரோஸ் பியர்ஸ் என்ற அமெரிக்க ஆசிரியன் எழுதிய சிறுகதையொன்றிலே இந்த உண்மையைக் காணலாம். அமெரிக்காவில், பத்தொன்பதாம் நூற்றாண்டில் நடந்த உள்நாட்டுப் போரில், கார்டர் ட்ரூஸ் என்பவனும் அவன் தகப்பனும், வெவ்வேறுகட்சியில் சேர்ந்துகொள்ளுகிறார்கள். ட்ரூஸ் ஒரு போர் வீரனாகிறான். அவன் பட்டாளம் நாற்புறமும் மலை சூழ்ந்த ஒரு பள்ளத்தாக்கில் தங்கியிருக்கிறது. மலைச்சரிவின்மேல் நெளிந்து சென்ற ஒற்றையடிப் பாதையின் வளைவு ஒன்றிலே அவனுக்குப் பாரா வேலை. களைத்திருந்தபடியால் தூங்கிவிடுகிறான். கண் விழித்தபொழுது, தன் எதிரே இருந்த குத்துக்கல் ஒன்றின்மேல் சிறந்த சிற்பி ஒருவன் செதுக்கிய சிலை போல், ஒரு குதிரையும் அதன்மேல் போர்வீரன் ஒருவனும் நிற்பதை கார்டர் ட்ரூஸ் காண்கிறான். குதிரை வீரன் எதிரி என்றும், கீழே தன் பட்டாளம் தங்கியிருப்பதை வேவு பார்க்கிறான் என்றும் ட்ரூஸ் ஒரு நொடிப் பொழுதிலே அறிகிறான். அவன் கடமை குதிரை வீரனைச் சுட்டு வீழ்த்துவதே. கடமையை நிறைவேற்ற அவன் துப்பாக்கி உயர்கிறது. அதுவரை வேறுபுறம் பார்த்து நின்ற குதிரை வீரன், முகத்தை கார்டர் ட்ரூஸ் பக்கம் திருப்புகிறான். ட்ரூஸின் கை பதறுகிறது. துப்பாக்கி கீழ் நோக்குகிறது. மறு கணம் ட்ரூஸின் முகத்திலே ஒரு தீர்மானம்; துப்பாக்கி மறுபடி உயர்கிறது. குதிரைவீரன் குதிரையோடு பள்ளத்தாக்கில் விழுகிறான். சில நிமிஷங்களில் அங்கே வந்த காப்டன், ட்ரூஸை நோக்கி "என்ன நடந்தது இங்கே? யாரைச் சுட்டாய்?" என்று கேட்கிறான்

பதிலில்லை. "ஏன் தயங்குகிறாய்? அதிகாரியின் கேள்விக்கு உடனே பதில் தரவேண்டியது போர்வீரன் கடமை. யாரைச்சுட்டாய்?" "என் தகப்பனை" என்கிறான் கார்டர் ட்ரூஸ்.

உண்மை பரிபூரணமாயிருக்கும்போது எந்த இலட்சியத்தை ஒட்டி அது எழுந்துள்ளதோ அதற்குப் புறம்பான எதற்கும் அதனருகில் இடமில்லை. தந்தையைக் காக்கவேண்டியது மகன் கடமை, பட்டாளத்தின் நன்மைக்காக தனக்கிட்ட பணியை நிறைவேற்றவேண்டியது போர்வீரன் கடமை; கடமை-முரண் ஏற்பட்டால், போர் வீரனாக இருக்கும் நிலையிலே போர்வீரனுடைய கடமையைத் தான் நிறைவேற்றுவான் உண்மையான போர்வீரன். இந்த உண்மையை நம் முன்னோர்கள் வெகு தெளிவாகக் கண்டார்கள். போர் முனையிலே குருவாகிய துரோணனும், பாட்டனாகிய பீஷ்மனும் எதிரே நிற்க, அவர்களுக்கு விரோதமாய் காண்டீபம் வளைப்ப தெப்படி என்று கலங்கிய அர்ஜுனனுக்கு அல்லவா கீதையை பகவான் உபதேசம் செய்தான்! "உனக்கு எதிரே உள்ள தருமத்தைத் தொடர்ந்து செல். வேறு கடமைகளைப்பற்றி நினைந்து கலங்காதே" என்ற கீதாசாரியன் மொழிகள், உண்மை பாவத்தின் சிகரமான கர்மவிரதத்தை இலட்சியமாகக் காட்டுகின்றன.

இந்த அருமையான தத்துவத்தையே கம்பர் விபீஷணன் மூலமாக நமக்குத் தெளிவுபடுத்துகிறார். விபீஷணனைத் துரோகி என்று பேசுவதில் இக்காலத்து ஆராய்ச்சியாளர் சிலர் ஈடுபடுகிறார்கள். இவர்களுடைய வாதத்தை எல்லாம் இந்திரசித்தன் வாயிலாகக் கம்பரே நமக்குத் தருகிறார். நிகும்பலைப் போர்க்களத்திலே விபீஷணனைக் கண்டதும் இந்திரசித்தன் பேசும் வார்த்தைகள் உங்களுக்கு ஞாபகமிருக்கும். விபீஷணனைத் துரோகி என்று

இந்திரசித்தனை விட அழுத்தமாக வேறொருவரும் பேசிவிட முடியாது இந்திரசித்தன் சொல்வதைக் கேட்போம்; விபீஷணனிடம் பேசுகிறான்: "என்ன எச்சில் வாழ்க்கை உன்னுடையது! எதற்காக இந்த மனிசரைப் போற்றி மானம் இழக்கிறாய்? கைலையங்கிரியை ஒரு கையாலும் இலங்கைக் கொற்றத்தை ஒரு கையாலும், அலட்சியமாய்த் தாங்கி, தேவர்கள் குற்றேவல் செய்ய மூவுலகாண்ட ராவணேசுவரனுடைய சிம்மாதனத்தில் வீற்றிருக்கக் கனவு காண்கிறாயா? இராமன் அம்புபட்டு இராவணன் புழுதியில் விழுந்தபின், அண்ணன் மாண்டதற்கு அழுவாயோ அல்லது ஆனந்தபாஷ்பம் சொரிந்து இந்த மனிசர்களை வாழ்த்துவாயோ? அரக்கர் யாவரும் அழிந்த பின், இலங்கையில் என்ன அரசு நடத்தப் போகிறாய்? பிணங்களும், பேய்களும், நரிகளுமே உன் பரிவாரங்கள், வசையே உன் புகழ், அவமானமே உன் கொடி, அடிமை வாழ்வே உன் கொற்றம். இதைவிட உயிர் விடலாம். சிற்றப்பனா நீ? கும்பகருணன் அல்லவா என் சிற்றப்பன்! நீ மனிசருக்கு அடிமை. அரக்கர்குலம், என்ற நன்மரத்திலே தோன்றிய புல்லுருவி."

"ஊருளதொருவன் நின்றாய் நீ யுளை யுறைய
நின்றோ(டு)
ஆருளர் அரக்கர் நிற்பார் அரசு வீற்றிருக்க ஐயா"

"மனிசருக் கடிமையாய் நீ இராவணன்
செல்வமாள்வாய்
இனியுனக் கென்றோ மானம் எங்களோ(டு)
அடங்கிற்றன்றோ."

"எழுதியே ரணிந்த திண்டோள் இராவணன்
இராமனம்பால்
புழுதியே பாயலாகப் புரண்ட நாள் புரண்டு
மேல் வீழ்ந்(து)

அழுதியோ நீயுங்கூட ஆர்த்தியோ இவனை
வாழ்த்தித்
தொழுதியோ யாதோ செய்யத் துணிந்தனை
விசயத்தோளாய்."

இவை இந்திரசித்தன் வார்த்தைகள். விபீஷணனுடைய பதில் 'உண்மை', 'வீரம்' என்ற தத்துவங்களுக்கு இலக்கணம் வகுக்கிறது. விபீஷணன் சொல்கிறான்: "மகனே, இந்திரசித்தா, தோல்விக்களைப்பின் சோக வெறியிலே ஏதேதோ பேசுகிறாய். நான் அடிமைதான். மனிதருக்கன்று. அரக்கருக்குமன்று. நான் தருமத்திற்கும் சத்தியத்திற்கும் அடிமை. அவையே என் உடன்பிறப்பு; இராவணன் இல்லை. என்றைக்குக் கற்புத் தெய்வத்தை மனம் நோக அடித்தீர்களோ, அன்றே எனக்கும் உங்களுக்கும் உள்ள உறவு அறுந்தது. அதனால் விளையும் கடமையும் மாண்டது. சுற்றத்தாரையும் இலங்கையையும் நீயே காப்பாற்று. புகழ்பெறு. பழியும் நரகமும் எனக்கே வரட்டும். தருமத்தின் வழியே நடக்கிறேன் என்ற மன அமைதியே எனக்குப்போதும். வேறு பயன் ஒன்றும் நான் விரும்பவில்லை, எதிர்பார்க்கவில்லை."

" அறந்துணை யாவதல்லால் அரு நரகமைய நல்க
மறந்துணையாக மாயாப் பழியொடும் வாழ
மாட்டேன்
துறந்திலேன் மெய்ம்மை எய்தும் பொய்ம்மையே
துறப்பதல்லால்
பிறந்திலேன் இலங்கை வேந்தன் பின்அவன்
பிழைத்தபோதே."

" பெண்டிரில் திறம்பினாரைத் துறந்தது
பிழையிற்றோ"

" உண்மையே புகழும் பூண்க துறக்கமும் உமக்கே யாக
... ... ... ... ... ... ...
எம்மையே பழியும் பூண்க நரகமும் எமக்கே யாக"

" அறத்தினைப் பாவம் வெல்லாதென்னும தறிந்து
ஞானத்
திறத்தினதுறும் என்றெண்ணித் தேவர்க்குந்
தேவைச் சேர்ந்தேன்
புறத்தினிற் புகழேயாக பழியொடும் புணர்க போதச்
சிறப்பினிப் பெறுக தீர்க என்றனன் சீற்றம்
தீர்ந்தான்."

இந்திரசித்தனும் கும்பகருணனும் தம் சுற்றத்தாரைக் காக்க உயிரையும்விட முனைகிறார்கள். அந்த அளவுக்கு, சுயநலம் அவர்களிடம் இல்லை. இலட்சியம் ஒன்றுக்காக எந்த விதமான தியாகமும் செய்ய அவர்கள் பின் வாங்க வில்லை. ஆனால் அவர்கள் இலட்சியத்திலேயோ சுயநலம் பதுங்கிக் கிடக்கிறது. தம் சுற்றத்தாருக்காகத் தானே அவர்கள் வாழ்கிறார்கள்? விபீஷணனோ பயனொன்றை யும் கருதாமல், தன்னைப்பற்றியோ, தன் சுற்றத்தாரைப் பற்றியோ எண்ணுமல் நீதியைத் தொடர்ந்து செல்கிறான். இலங்கை அரசை அடையவே விபீஷணன் சூழ்ச்சி செய் கிறான் என்று சொல்வதற்குக் கம்பர் காவியத்தில் ஆதாரம் இல்லை. கும்பகருணனிடம் விபீஷணன் பேசும் வார்த்தை களைக் கவனித்தால் இது உண்மை என்பது புலப்படும்:

" எனக்கு அவன் தந்த செல்வத்து
இலங்கையும் அரசுமெல்லாம்
நினக்கு நான் தருவன்; தந்து உன்
ஏவலின் நெடிது நிற்பேன்."

இதைக் கும்பகருணனே ஒப்புக்கொள்ளுகிறான்:

" உலைவிலாத் தருமம் பூண்டாய் உலகுள தனையும்
உள்ளாய்
நலைவன் நீ அறத்துக்கெல்லாம் . . . " .

என்று வாழ்த்துகிறான். சுயநலமே இல்லாத உண்மை

யான கர்ம வீரத்தின் வடிவமாக விபீஷணன் அமைந்திருக்கிறான். இதைத் தமது கவித்திறமையால் விளக்கிய கம்பர் வீரத்தின் பண்பு இது என்பதற்குச் சூத்திரமும் வகுத்திருக்கிறார் :

" திறப்பெரும் படைக்கலம் நிறத்தி னேருற
மறப்பயன் விளைந்திடும் வன்மை யன்றரோ
இறப்பினும் திருவெலாம் இழப்ப எய்தினும்
துறப்பிலர் அறம்எனல் சூரர் ஆவதே."

இந்த வகையிலே சூரர்களாய் உள்ளவர்கள் தம் இலட்சியத்திற்குப் புறம்பான மற்றைய இலட்சியங்களுக்கோ, கடமைகளுக்கோ தலைவணங்குவதில்லை. இந்தப் பான்மை வீரத்தோடு ஒன்றி வளர்வது. இலட்சியத்திடம் உள்ள பக்தியால் ஏற்பட்ட அலட்சியம் என்று இதைச் சொல்லலாம். மனைவி யசோதரை, மகன் ராகுலன், தன் அரசு இவற்றைத் துறந்து சென்ற புத்த பகவானின் அலட்சியம் ; உண்மையை அறிவதே தன் வாழ்க்கையின் நோக்கம் என்று கூறி அதீனியர்கள் விதித்த மரண தண்டனையைக் கலங்காமல் ஏற்றுக்கொண்ட சாக்ரடீஸ் என்ற கிரேக்க தத்துவ ஞானியின் அலட்சியம் ; "என் கண்ணை நீங்கள் அவித்து விடலாம். ஆனால் அண்ட கோளத்தின் பிரகாசத்தையோ, சத்தியத்தின் ஒளியையோ அணைக்கமுடியாது" என்று கூறி, தான் கண்ட உண்மைக்கு உண்மையாய் நின்ற கலிலியோ என்ற விஞ்ஞானியின் அலட்சியம் ; "அலெக்ஸாண்டரா நீ, ஸாம்ராஜ்ய அதிபனா ? சக்ரவர்த்தியா ? நல்லது. உன்னிடம் ஒன்றும் தேவையில்லை. வெயில் என்மேல் படவிடு. நகர்ந்து நில்" என்று பேசிய டயோஜினிஸ் என்ற கிரேக்கத் துறவியின் அலட்சியம் ; "அரசே, சங்கீத மென்பது கலை. ஆத்மாவின் எழுச்சியிலே தோன்றுவது. தங்கள் உத்தரவுக்காக சங்கீதம் தோன்றாது, காத்திருங்கள்" என்று அரசர்க்கரசன்

அக்பரிடம் பேசிய தான்சன் என்ற கலைஞனின் அலட்சியம்-இவை எல்லாம் உண்மை பாவம் வீரமாகப் பொலியும் பொழுது தன்னலம் சாம்பலாக, அதிலிருந்து உயிர்பெறும் உன்னதமான அலட்சியத்தின் வகையைச் சேர்ந்தவை.

இத்தகைய வீரம் படைத்தவர் வாழ்க்கை உண்மை பாவத்துக்கு எல்லை வகுக்கிறது. உண்மை என்ற முறத்தைக் கொண்டு மனிதர்களை தானியம் வேறு பதர் வேருகப் பிரிக்கும்போது இவர்கள் தானியப்பகுதியிலே தலைசிறந்தவர்களாகிருர்கள். இலட்சியம் சிறிது தன்னலம் கலந்ததாய், ஆகவே அந்த அளவுக்குத் தாழ்ந்ததாய், அமையும் பொழுது வாழ்க்கையில் உண்மை பாவம் குறைந்து விவரிக்கிறது. இந்த அளவுக்கு உண்மை உடையவர்களும் தானியப்பகுதியில் இடம் பெறுகிருர்கள். ஆனல் இலட்சியம் ஒன்றும் இல்லாமல், ஆகவே உண்மையில்லாமல், எதிலும் கருத்தில்லாமல் 'நான், எனது' என்று உழன்று வருபவர்கள் வண்ணுத்திப் பூச்சிகள். அவர்கள் வாழ்க்கை வாழ்க்கையன்று. வாழ்க்கைக் களத்திலே அவர்கள் வெறும் பதர்கள்.

## 6

# மண்ணுலகத்து ஓசைகள்

கவிஞன் ஏன் பாடுகிறான் என்று என்னையே கேட்டுக் கொண்டேன். இதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. முக்கியமான கேள்விகளுக்கு விடைதேடி உலகம் முழுதும் சுற்றிய பிறகு நம்மிடந்தானே நாம் திரும்பி வரவேண்டி யிருக்கிறது. பாருங்கள், "கடவுள் இருக்கிறாரா?" "சாவுக்குப் பிறகு வாழ்க்கை உண்டா?" "அமைதி பெறுவது எப்படி?" என்றெல்லாம் கேட்டுக்கொண்டால், கிரேக்க ஞானி சொன்னது போல, "உனக்குள்ளேயே சமாதானம் தேடிக் கொள்" என்றுதானே முடிவு கட்டவேண்டி யிருக்கிறது! ஆகவே என்னையே நான் கேட்டுக்கொண்டேன், "கவிஞன் ஏன் பாடுகிறான்?" என்று. என் மனத்தில் குழப்பமும் அந்தகாரமும் நிறைந்திருந்தன. வழி யொன்றும் புலப்படவில்லை. வரையில்லாமல் வளைந்து வளைந்து சென்ற எண்ணச் சுழல்களிலே அலைந்து, அகப்பட்ட வார்த்தைகளைக் கொத்திக் கொத்திக் கிளறி உண்மை காணமல் தத்தளித்தேன்.

அப்போது கவிஞன் குரல் காதில் விழுந்தது:

**"பலாவின் கனிச்சுளை வண்டியிலோர் வண்டு**
**பாடுவதும் வியப்போ?"**

நல்லது. பலாப் பழத்தின் தேனை நுகர்ந்த வண்டு பாடுவதில் வியப்பொன்றும் இல்லைதான். ஆனால் கவிஞன் என்ற வண்டுக்குத் தேன் உதவும் பலாப் பழம் எது? கவிஞன் சொன்னான்:

**"நிலாவையும் வானத்து மீனையுங் காற்றையும்**
**நேர்பட வைத்தாங்கே-**

குலாவு மமுதக் குழம்பைக் குடித்தொரு
கோகல வெறி படைத்தோம்."

இருக்கலாம். நிலாவும், நட்சத்திர ஒளியும், காற்றும் ஒன்ருகச்சேர்ந்து அமுதக் குழம்பாவது அவற்றின் தன்மை யாலா? இயற்கைக்கு அழகு என்பது இருக்கிறதா? இயற்கையின் அழகு என்ற ஒன்று இருந்தால், அது என் கண்ணிலும் ஏன் படவில்லை? கவிஞனுக்கு மட்டும் தோன்றுவானேன், அமுதக் குழம்பாவானேன்? ஒரு வேளை, அழகுத் தத்துவத்தை மட்டும் காண இயலாத அறிசயக் குருடாய் நான் இருக்கலாம். அனேகமாய் எல் லோரும் அப்படித்தான் இருக்கிறார்கள். "அழகே உண்மை" என்று ஆங்கிலக் கவிஞன் கீட்ஸ் சொன்னன்; அதைக் கவிஞர்களாலேயே அனுபவ பூர்வமாக ஒப்புக் கொள்ள முடிகிறது. அழகாவது, மண்ணுங்கட்டியாவது! இராமலக்ஷ்மணர்களுடைய பாதம் பட்டவுடன் "காயெரி கனலும் கற்கள் கள்ளுடை மலராக" மாறிவிடுகின்றன என்று கம்பர் சொல்லவில்லையா? அது போல, கவிஞனு டைய பார்வை விழுந்தவுடன் பொருள்கள் அழகு பெற்று விடுகின்றன. கவிஞனுடைய மனத்திலிருந்து பெருக்கெடுத் தோடும் அழகுணர்வு அவன் காணும் பொருள்களுக்கு சௌந்தரிய முலாம் பூசிவிடுகிறது. பிரபஞ்சத்தின் அழகு தான் கவிஞன் பாடுவதற்குக் காரணம் என்று சொல் வதைவிட, அவன் மனமே காரணம் என்று சொல்லிவிட லாம். அதாவது காரணம் காணமல் மயங்கலாம்.

இப்படி நான் எண்ணுகிறேன் என்று கவிஞனுக்கு எப்படித் தெரிந்ததோ? அவன் சொன்னன்:

"மண்ணுலகத்து நல்லோசைகள் காற்றெனும்
வானவன் கொண்டு வந்தான்
பண்ணி லிசைத்தவ் வொலிக ளனைத்தையும்
பாடி மகிழ்ந்திடுவோம்"

மண்ணுலகத்து நல்லோசைகளா? ஆம்.

**“நண்ணிவரு மணியோசையும் பின்னங்கு**
**நாய்கள் குரைப்பதுவும்**
**எண்ணுமுன்னே ‘அன்னக் காவடிப்பிச்சை’யென்**
**றேங்கிடுவான் குரலும்.”**

இருட்டி ஏழெட்டு நாழிகை இருக்கும். தெருவிலே காற்றுக்காகக் கவிஞன் உட்கார்ந்திருக்கிறான். தெருவா, மனித வாழ்க்கை என்ற கடலின் ஒரு அலை. தூரத்திலிருந்து மணிச் சத்தம் நெருங்கி வருகிறது. நாய்கள் குரைக்கின்றன. யாரோ வருகிறார்கள், யார், என்று எண்ணுமுன்னே ஏக்கக் குரல் காதில் விழுகிறது: “அன்னக் காவடி பிச்சை.” இப்படியும் ஒருவன் உயிர் வாழ முனையவேண்டுமா? பல்லைக் காட்டிப் பஞ்சப்பாட்டுப் பாடி, மனிதனுய் உள்ள பெருமையை அடகு வைத்து வயிற்றை நிரப்பிக் காணும் சுகந்தான் என்ன? ஆனால் “இடும்பைகூர்” வயிறு கேட்கிறதா? அதன் ஆட்சியி லிருந்து எவ்வாறு தப்புவது? அட, கடவுளே! கடவுள் இருக்கிறானு?

**“இரந்தும் உயிர் வாழ்தல்வேண்டின், பரந்து**
**கெடுக உலகியற்றியான்.”**

இவ்வாறு செல்லும் கவிஞனுடைய சிந்தனையை வீதிக் கதவை யாரோ அடைக்கும் சத்தம் சிதைக்கிறது. வயிற்றுக்கொடுமை தாங்காமல் ஒருவன் ஏங்கியபோ இவன் கதவை அடைக்கிறானே! எது பெரிது? மானத்தைச் சுட்டெரிக்கும் வயிற்றுக்கொடுமையா, மானத்தையே பொய்யாக்கும் மனிதனுடைய கொடுமையா?

இதற்குள்ளே கீழ்த்திசையில் சங்கொலி விம்முகிறது. யாரோ ஒருவன் காந்தவிளக்கு, கொட்டு மேளம், சங்க நாதம் முதலிய மயான மரியாதைகளோடு கடைசிப் பிரயாணத்தைத் தொடங்கி விட்டான். சங்கொலி சொல்லும் செய்தி இது. ஆனால் வீதிக்கதவை அடைத்து (கதவையா

அடைத்தான், மனத்தையே அடைத்துத் தாளிட்டுப் பைசா ஜவானைக் காவலாக வைத்துவிட்டான்!) அன்னப் பிச்சை போடும் கஷ்டத்திலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டானே அந்தப் புண்ணியவான், அவனுக்கு இது காதில் விழவில்லையே! கடைசிப் பிரயாணம் எல்லோருக்கும் உண்டு, மயானம் ஒவ்வொரு கணமும் நெருங்கி வருகிறது என்ற உண்மை அவன் உள்ளத்தில் தைக்கவில்லையே!

கவிஞனுக்கு இது அதிசயமாக இருக்கிறது. ஆனால் தெருவிலுள்ள வேறு ஒருவரும் இதைக் கவனித்ததாகத் தெரியவில்லை. அந்த வீட்டுத் திண்ணையில் அவர்கள் கூடி ஏதோ வம்பு பேசுகிறார்கள். பயனற்ற பேச்சு, ஒருவருக்கும் தெரியாததைப்பற்றி ஒவ்வொருவனும் அழுத்தமாகப் பேசுகிறான். ஒருவருக்கும் வேண்டாததைப்பற்றி "உண்மை விளம்பி" ஓங்கி அடிக்கிறான். ஸ்ரீமான் "பெரியவாள் சொல்றபடி," மிஸ்டர் "நையாண்டி", உயர்திருவாளர் "விபூதிப் பகட்டு", நண்பர் "நமுட்டு விஷமம்", தோழர் "வெள்ளைக்காரனுக்குத்தான் தெரியும், ஸார்" இவர்கள் ஒன்றாகக் கூடி ஒன்றையும் பற்றிப் பேசாமல் பேசி வருகிறார்கள். "வாதுகள் பேசிடு மாந்தர் குரல்," இதுவும் கவிஞன் காதில் விழுகிறது.

இவர்கள் எல்லோரும் மறைந்து விடுவார்கள். ஆனால் மனிதவாழ்க்கை இதோடு நின்றுவிடுமா? இல்லையென்று சொல்கிறது பக்கத்து வீட்டிலிருந்து கேட்கும் குழந்தையின் அழுகை. பிச்சைக்காரனும், உலோபியும், "வாதுகள் பேசிடு மாந்த"ரும், ஏழ்மையும் பெருமையும், தாழ்வும் உயர்வும், கொடுமையும் கருணையும் கலந்த வாழ்க்கை ஊர்வலம் பகலிலும் இரவிலும் ஓயாமற் படர்ந்துகொண்டிருக்கும். அதிலே ஒருவனாகத் தோன்றிய கவிஞன், அதன்

ஒவ்வொரு அம்சத்தையும் கூர்ந்து கவனிக்கிறான். ஒவ்வொன்றோடும் ஒன்றுகிறான். பாடுகிறான் :

**“ மண்ணுலகத்து நல்லோசைகள் காற்றெனும்**
**வானவன் கொண்டு வந்தான்;**
**பண்ணி லிசைத்தவ் வொலிக ளனைத்தையும்**
**பாடி மகிழ்ந்திடுவோம்.**
**நண்ணிவரு மணியோசையும் பின்னங்கு**
**நாய்கள் குரைப்பதுவும்,**
**எண்ணு முன்னே “அன்னக் காவடிப் பிச்சை”யென்**
**றேங்கிடுவார் குரலும்,**
**வீதிக் கதவை யடைப்பதுங் கீழ்த்திசை**
**விம்மிடு சங்கொலியும்,**
**வாதுகள் பேசிடு மாந்தர் குரலும்**
**மந்தை யழுங் குரலும்,**
**ஏதெது கொண்டு வருகுது காற்றிவை**
**எண்ணி லகப்படுமோ,**
**சீதக் கதிர்மதி மேற்சென்று பாய்ந்தங்கு**
**தேனுண்ணுவாய் மனமே.”**

சரி, வாழ்க்கையின் ஒவ்வொரு பகுதியிலும் ஐக்கியப்பட்ட மனம், எல்லையற்ற பரிவு, இவையே மண்ணுலகத்து ஓசைகளை “கவிதை இசைகளாக” மாற்றும் தரிசனவேதி என்றால் அதுவும் நம்மிடம் இல்லையே? கவிஞனிடமல்லவா இருக்கிறது!

கவிஞன் ஏன் பாடுகிறான்? இயற்கை அழகன்று, மண்ணுலகத்து ஓசைகள் அல்ல, அதற்குக் காரணம். அழகும், பரிவும் படைத்த கவிதை உள்ளமே பாட்டாக அவதரிக்கிறது. கவிஞன் ஏன் பாடுகிறான் என்றால் கவிஞனாக இருப்பதனால் தான். குயில் ஏன் பாடுகிறது?

# 7

# ஆண்டாள்

பாரதியார் பாடியது உங்களுக்கு ஞாபகமிருக்கும்:

"காக்கைச் சிறகினிலே நந்தலாலா - உன்
கரியநிறம் தோன்றுதடா நந்தலாலா."

காக்கைச் சிறகில் கண்ணனுடைய நிறத்தையும், பார்க்கும் இடமெல்லாம் அவன் மரகத வடிவையும், கேட்கும் ஒலிகளில் அவனுடைய கீதத்தையும் தெளிவது சிலருக்குத் தான் முடியும். கவிஞனுக்கு அது முடிந்தது :

"பார்க்கும் இடங்களெல்லாம் நந்தலாலா - உன்
பச்சை நிறம் தோன்றுதடா நந்தலாலா
கேட்கும் ஒலியில் எல்லாம் நந்தலாலா - உன்
கீதம் இசைக்குதடா நந்தலாலா."

இதை விட அபூர்வமான அனுபவத்தையும் பாரதி வெளியிடுகிறார் :

"தீக்குள் விரலை வைத்தால் நந்தலாலா - உன்னைத்
தீண்டுமின்பம் தோன்றுதடா நந்தலாலா."

வேதனையிலே-அது தீயினால் ஏற்பட்டால் என்ன, துக்கத்தால் ஏற்பட்டால் என்ன-எந்த விதமான வேதனையிலும், வேதனையில் மட்டுமா, எந்த அனுபவத்திலும், கடவுளைத் தீண்டும் இன்பம், பக்தியில் அழுந்திய உள்ளத்துக்குத் தான் கிட்டும்.

இதை ஆண்டாள் என்ற வைணவ பக்தையின் வாழ்க்கையில் காண்கிறோம். அவளுடைய வாழ்க்கையைப் பற்றி சரித்திர பூர்வமான செய்தி நமக்குக் கிடைக்கவில்லை. சுமார் ஐயாயிரம் வருஷங்களுக்குமுன், ஸ்ரீவில்லிபுத்தூரில்

வாழ்ந்தாள் என்று வைணவ குருபரம்பரைச் செய்தி சொல்கிறது. வேறு ஆதாரம் இல்லாத நிலையில், இதை நாம் நம்பாமல் இருக்கலாம். ஸ்ரீவில்லிபுத்தூரில், நந்தவனத்தில் அயோனிஜையாய் அவள் அவதரிக்க, பெரியாழ்வார் என்ற பக்தர் கண்டெடுத்து வளர்த்ததாயும், விவாகப் பருவம் வந்ததும் "மானிடவர்க்கென்று பேச்சுப் படில் வாழகில்லேன். சர்வேசுவரனுக்குத்தான் நான் உரியவள்' என்று ஆண்டாள் சொன்னதாயும், பிறகு திருவரங்கப் பெருமானை மணந்து அவன் திருமேனியில் கலந்துவிட்டதாயும் வைணவ ஐதிகம். சரித்திர ஆராய்ச்சிக் கண்ணுக்கு இதெல்லாம் வெறும் கற்பனையாகத்தான் படும்.

ஆனால் 'திருப்பாவை', 'நாச்சியார் திருமொழி' என்று வழங்கப்படும் ஆண்டாளுடைய கவிமலர்களின் வனப்பையும், வாசத்தையும் உணர்ந்தால், பழைய கதை உண்மையே என்று கருதத் தோன்றும். உண்மை என்பது கேவலம் நிகழ்ச்சிகளாலான கோவை அன்று. இங்கே பிறந்தார், அங்கே இருந்தார் என்பன போன்ற செய்திகளால்மட்டும் உண்மையை அறிந்துவிட முடியாது. நிகழ்ச்சிகளுக்கு அடிப்படையான மனநிலை, ஆத்ம பக்குவம் இவற்றை உணர்வதே உண்மையை அறிவது. கவிதை என்பது ஆத்மாவின் மொழிபெயர்ப்பு; ஆகவே ஆண்டாளுடைய கவிதையின் மூலமாக அவளுடைய வாழ்க்கையின் உண்மைத் தத்துவத்தை, அதன் தனிப்பண்பை அறியமுடியும். எப்படி என்று பார்க்கலாம்.

மார்கழி மாதம். விடியற்காலம். பனி வெள்ளத்தில் உலகம் முழுகிக் கிடக்கிறது. பனிப்படலத்தின் உள்ளே எங்கிருந்தோ கீசு கீசென்று ஆனைச்சாத்தன் பேசுகிறது. தூரத்தில் குமுறுகின்ற கோயிற் சங்கு கட்டியம் கூற, கீழ் வானத்தில் ஒளி பவனி வருகிறது. கழியும் பனி

மூட்டத்தினூடே, தெரிந்தும் தெரியாததுமாய், எருமைகள் மேய்ச்சல் காட்டை நோக்கி ஊர்ந்து செல்கின்றன. இதையெல்லாம் ஆண்டாள் காண்கிறாள். உறக்கத்தில் அழுந்தியுள்ள தன் நெஞ்சையும், உலகத்தையும் தட்டி எழுப்புகிறாள் :

"இனித்தான் எழுந்திராய்
ஈதென்ன பேருறக்கம் !
அனைத் தில்லத்தாரும்
அறிந்தேலோ ரெம்பாவாய் !"

உண்மைதானே ! கடவுளை அறிய முற்படாமல் மாயப் பெருந்துயிலில் உலகம் அழுந்திக் கிடக்கிறது. தூக்கத்தை விட்டு எழுந்து செய்வதென்ன ? எதற்காக எழ வேண்டும் ? ஆண்டாள் சொல்கிறாள் :

"மாயனை மன்னு
வடமதுரை மைந்தனை,
தூய பெரு நீர்
யமுனைத் துறைவனை,
... ... ...
தூயோமாய் வந்து நாம்
தூமலர் தூவித்தொழுது,
வாயினல் பாடி
மனத்தினல் சிந்திக்க,
போய பிழையும்
புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும்
செப்பேலோ ரெம்பாவாய்!"

இந்தப் பாட்டு, 'திருப்பாவை' என்ற நூலின் முப்பது பாட்டுக்களில் ஒன்று. 'தை நீராடல்' என்ற பழைய தமிழ் வழக்கத்தை ஒட்டிய பக்திச் சித்திரமாக இந்த நூல்

அமைந்திருக்கிறது. கலியாணம் ஆகாத பெண்கள் மார்கழி மாதப் பௌர்ணமியிலே தொடங்கி, வைகறையில் சுனையிலே நீராடி நோன்பு நோற்பது பழைய வழக்கம். நோன்பைப்பற்றிய பல செய்திகள் திருப்பாவையில் உள்ளன. தன்னையும் உலகத்தவரையும் நோன்பு நோற்கும் சிறுமியராகக் கருதி, மற்றப் பெண்களை வீடு வீடாய்ச் சென்று தானே துயிலெழுப்புவதாகக் கற்பனை. இதோ ஒருத்தி தூங்குகிறாள்; ஆண்டாள் அவளை எழுப்புகிறாள் :

"தூமணி மாடத்துச்
சுற்றும் விளக்கெரிய,
தூபம் கமழத்
துயிலணை மேல் கண்வளரும்
மாமான் மகளே,
மணிக்கதவம் தாள் திறவாய் !"

தமிழ் நாட்டுப் பழக்க வழக்கங்கள் மட்டுமல்ல, தமிழ் நாட்டு வளமும், இயற்கைக் காட்சிகளும் பாட்டில் உருப் பெறுகின்றன. மார்கழிப் பனிக்கு முன், வடகிழக்கி லிருந்து நமது நாட்டை நோக்கி மழை அதிர்ந்து வருவதைப் பாருங்கள் :

"ஆழி மழைக் கண்ணா !
ஒன்று நீ கை கரவேல்
ஆழியுள் புக்கு
முகந்து கொடு ஆர்த்தேறி
ஊழி முதல்வன்
உருவம் போல் மெய்கறுத்து,
பாழியந் தோளுடைப்
பற்பநாபன் கையில்
ஆழி போல் மின்னி
வலம்புரிபோல் நின்றதிர்ந்து

**தாழாதே சார்ங்கம்**
**உதைத்த சரமழைபோல்**
**வாழ உலகினில்**
**பெய்திடாய்."**

மழையிலே மலர்ந்த இயற்கை வளத்தைப் பார்ப்போம் :

**" ஓங்கு பெருஞ் செந்நெ**
**லூடு கயல் உகள,**
**பூங்கு வளைப் போதில்**
**பொறி வண்டு கண்படுப்ப,**
**தேங்காதே புக்கிருந்து**
**சீர்த்த முலைபற்றி**
**வாங்கக் குடம் நிறைக்கும்**
**வள்ளல் பெரும் பசுக்கள்**
**நீங்காத செல்வம்**
**நிறைந்தேலோ ரெம்பாவாய் !"**

இயற்கை வளத்தைப் பற்றி நிறைந்த உள்ளத்தோடும், தெளிந்த பார்வையோடும் ஆண்டாள் பேசிய போதிலும் அவளுடைய கருத்தை முழுதும் கவிந்து நிற்பது கடவுளை அடையவேண்டும் என்ற பேராவல் **தான்.** கடவுளைப் பற்றிய நினைவே இல்லாமல், சுகதுக்கத் தூக்கத்தில் ஆழ்ந்த நம்மை, யாரோ ஒரு பெண்ணைப் பரிகாசம் செய்வது போல், பரிகசிக்கிருள் :

**"..........பண்டு ஒரு நாள்**
**கூற்றத்தின் வாய்**
**வீழ்ந்த கும்பகருணனும்**
**தோற்றும் உனக்கே**
**பெருந்துயில்தான் தந்தானோ !"**

மார்கழி நோன்பைப் போலவே, மன்மதனை வழிபடும் பழைய வழக்கமும், தன் பக்தி பரவசத்தை வெளியிட

ஆண்டாளுக்கு உதவுகிறது. நெல்லும், கரும்பும், அவலும், அரிசியும் படைத்து மன்மதனை வணங்குகிறாள். அவனை வேண்டுகிறாள் :

"கருவுடைமுகில் வண்ணன்
 காயா வண்ணன்
கருவிளை போல் வண்ணன்
 கமல வண்ணத்
திருவுடை முகத்தினில்
 திருக் கண்களால்
திருந்தவே நோக்கெனக்
 கருள் கண்டாய்."

ஆனால், அந்தப் பாக்கியம் கிட்டவில்லை. பக்கத்திலே மாந்தோப்பில் குயில் கூவுகிறது. அதனிடம் பேசுகிறாள் :

"வெள்ளை விளிசங்கு
 இடங்கையில் கொண்ட
விமலன் எனக்கு உருக்
 காட்டான்;
உள்ளம் புகுந்து என்னை
 நைவித்து நாளும்
உயிர் பெய்து கூத்தாட்டுக்
 காணும்
கள்ளவிழ் சண்பகப்
 பூமலர் கோதிக்
களித்திசை பாடும்
 குயிலே!
மெள்ள விருந்து
 மிழற்றி மிழற்றாது என்
வேங்கடவன் வரக்
 கூவாய்!"

'என்ன வெல்லாமோ புலம்புகிறாயே, என் வேதனையை நீ உணரவில்லையா? ஒன்று, அவனைக் கூவி அழைத்து வந்துவிடு; இல்லையென்றால் அவன் திருடிச் சென்ற என் நெஞ்சையாவது என்னிடம் திரும்பக் கொணர்ந்துவிடு. இரண்டில் ஒன்று சாதிக்காவிட்டால், உன்னைத் துரத்தி விடுவேன்' என்று சீறுகிறாள். பிறகு,

> "என்றும் இக்காவில் இருந்து இருந்து
> என்னைத் ததைத்தாதே நீயும் குயிலே!"

என்று கெஞ்சுகிறாள். மாறி மாறி வரும் குலவலும் கோபமும், கெஞ்சுதலும் பரிவும், ஆண்டாளின் மனம் உணர்ச்சி வசப்பட்டு நிலைதடுமாறித் தத்தளிப்பதைக் காட்டிவிடுகின்றன. கிளர்ந்தெழுகின்ற மழை மேகங்களைத் தன் காதலனுக்குத் தூதாக அனுப்புகிறாள் :

> "கார்காலத் தெழுகின்ற
> கார்முகில்காள்! வேங்கடத்துப்
> போர்காலத் தெழுந்தருளிப்
> பொருதவனார் பேர்சொல்லி
> நீர்காலத்து எருக்கிலம்
> பழ இலைபோல் வீழ்வேனை
> வார்காலத்து ஒரு நாள் தம்
> வாசகம் தந்தருளாரே!"

காட்டிலே, காயா மலர்கள் நீல இதழ்களைப் பரக்க விழித்து அசைகின்றன. கேட்கிறாள் :

> "கருவிளை யொண் மலர்காள்!
> காயா மலர்காள்! திருமால்
> உருவொளி காட்டுகின்றீர் எனக்கு
> உய்வழக் கொன்று ரையீர்."

இதன்பின், எங்கே பார்த்தாலும் இறைவன் திருவுருவம் உதயமாகிறது. யாரை எங்கே தூது அனுப்பு

வது? கண் முன்னே அவன் எங்கும் தோன்றுகிறான் - குயிலின் பாட்டில், மயிலின் அற்புத நடனத்தில், வண்டின் புலப்பத்தில், சுனையில், தாமரையில், கொன்றையின் பொன்மலரில், காலையில், கரிய குருவிக் கணங்களின் ஆரவாரத்தில். கூட்டிலிருந்து அவள் செல்வமாக வளர்க்கும் கிளி,

"கோவிந்தா, கோவிந்தா
என்றழைக்கும்;
ஊட்டக் கொடாது
செறுப்பனாகில்
உலகளந்தான் என்
றுயரக் கூவும்!"

கடவுட் காதல் கொழுந்துவிட்டெழுந்து எரிகிறது. உலகத்திலே உள்ள எந்தப் பொருளும், பெறக்கூடிய எந்த அனுபவமும், இந்த வேதனையிலிருந்து தன்னை விடுவிக்காது என்பதை உணர்கிறாள். உண்மையான துறவுநிலை பக்தியின் மூலம் கிட்டிவிடுகிறது. ஆனால், இந்தத் துறவைத் தனக்களித்த கடவுளுறவு முற்றுப்பெறவில்லையே என்று அவள் உள்ளம் பொங்குகிறது. எப்படியாவது கடவுளைத் தீண்டி அவனோடு கலந்துவிட வேண்டும் என்ற ஏக்கம் வளர்ந்து வெறியாகி விடுகிறது:

"கண்ணன் என்னும் கருந்தெய்வம்
காட்சிப் பழகிக் கிடப்பேனை,
புண்ணிற் புளிப் பெய்தாற் போல்
புற நின்றழகு பேசாதே
பெண்ணின் வருத்த மறியாத
பெருமான் அரையில் பீதக
வண்ண ஆடைகொண்டு என்னை
வாட்டம் தணிய வீசீரே!"

கண்ணனைக் காண்கிறாள் - குருந்த மரத்தில் ஏறி நின்று தன் துகிலைத் தரமாட்டேன் என்று புன்னகை புரியும் மோகன வடிவமாக. கோபியாக மாறிவிடுகிறாள். அவனிடம் கெஞ்சுகிறாள். பிறகு ஏசுகிறாள். 'அன்று குரக்கினத் தலைவனை நண்பனாகக் கொண்டு இராவணனை வதைத்தாய். இன்று குரங்காகவே மாறிவிட்டாய்' என்று, நெடுநாளைத் தொந்தத்தால் ஏற்படும் சுதந்திரத்தோடு, பேசுகிறாள். இந்தக் காட்சி மறைகிறது. வெண் சங்கை ஊதி நிற்கும் நாராயணன் வடிவம் அவள் முன் தோன்றுகிறது. அவனிடத்தில் உள்ள காதல் - வெறி, பாஞ்ச சன்னியம் என்ற அந்தச் சங்கைப் பார்த்து,

"கருப்பூரம் நாறுமோ
கமலப்பூ நாறுமோ ?
திருப்பவளச் செவ்வாய்தான்
தித்தித் திருக்குமோ ?
மருப்பொசித்த மாதவன்தன்
வாய்ச்சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன்
சொல்லாழி வெண் சங்கே !"

என்று அவளைக் கேட்க வைக்கிறது. சங்கின் பேரில் பொறாமையாகவும் அது பரிணமிக்கிறது :

"பதினாறுமாயிரவர் தேவிமார்
பார்த்திருப்ப
மதுவாயில் கொண்டாற்போல்
மாதவன்தன் வாயமுதம்
பொதுவாக உண்பதனைப்
புக்கு நீ உண்டக்கால்
சிதையாரோ உன்னோடு
செல்வப் பெருஞ்சங்கே."

கடைசியாக அவனை மணந்துவிட்டதாகக் கனவு கண்டு

விழித்துத் தன் தோழியிடம் அதைப் பாடி ஆறுதல் பெற முயல்கிறாள். அந்தப் பத்துப் பாட்டுக்களும் துன்பக் கடலில் ஊறிய அலகில்லாப் பேரின்பத்தில் தோய்ந்த அதிசயங்கள்.

ஆண்டாளின் கனவு பலித்ததோ என்னவோ, ஒன்று நிச்சயம். அவள் கவிதையில் பக்தியின் பரவசம் பேசுகிறது. இறைவனை இடைவிடாமல் நாடி நின்ற ஓர் ஆத்மாவின் ஏக்கமும், எங்கும் கடவுள் மயமாகக் கண்ட அதன் உறுதியும், கடவுளை அடையாவிட்டாலோ என்ற வேதனைத் தீயிலே வினைகளை எரித்து அவனுடன் கலந்த பக்தி வலிமையும் ஆண்டாளின் பாட்டுக்களில் தேங்கி நிற்கின்றன. இவ்வற்புத உணர்ச்சிகளை நமக்கு அறிவிக்கும் சின்னங்களாக, தமிழ் நாட்டு வாழ்க்கையும், இயற்கைச் செய்திகளும் பயன்படுகின்றன. கூண்டில் அடைபட்ட கருடனைப் போல் எல்லையற்ற பெருவெளியை நாடி நிற்பதே மனித தத்துவத்தின் உன்னதமான நிலை என்றால், ஆண்டாளுடைய பாடல்கள் அந்த உன்னத நிலையின் சித்திரம். வாழ்க்கை அனுபவத்தைச் சொற்களின் மூலமாக வேகத்தோடும், அழகுணர்ச்சியோடும் வெளியிடுவதே கவிதை என்றால், அவளுடைய பாடல்கள் சிறந்த கவிதை. ஆகவே, கடவுட் காதலும் கவிதையும் நமக்களித்த தெய்வமாக, ஆண்டாளை வழிபடுவதில் குற்றமென்ன?

# 8

# கைதி

மாலையின் மங்கிய ஒளியில், ஆற்றங்கரைமேல வளைந்து சென்ற ரஸ்தாவிலே, அவன் வந்து கொண்டிருந்தான், அந்தக் கைதி. புழுதியும், துன்பமும் படிந்த முகம், மெலிந்து வற்றிய உடல், கையிலே விலங்கு. அவனருகே, இரு காவலாளிகள் நடந்தனர்; அவனோ. . ., அவன் நடக்கவில்லை; முனகி, முனகி, மனித நத்தைபோல் ஊர்ந்து சென்றான். அவன் வாழ்க்கைப் பொருள் முழுதும் பளபளவென்று மின்னி, அவனைப் பிணித்த அந்த இரும்பு விலங்குதான் என்று எனக்குத் தோன்றியது. அவன்பின் ஊசலாடிய ஆலம் விழுதுகளினூடே பரந்த செவ்வானத் திரைமுன், மனித வாழ்க்கையின் முத்திரையாக விளங்கினான் அவன்.

வங்கதேசப் பாடலொன்று என் நினைவில் எழுந்தது:

"கைதியே! தெறிக்க முடியாத பார விலங்கினைச் செய்தது யார்? சொல்."

கைதி சொல்வான் :—"நான்தான், வேறு யார்? வெகு கவனமாய், வேறு சிந்தனையின்றி, என் உலைக் கூடத்தில், இவ் விலங்கைச் செய்தேன். இதனால் உலகை யெல்லாம் சிறைப் படுத்தலாம், எல்லையற்ற சுயேச்சை பெறலாம் என்று நினைத்தேன். இரவும், பகலும், எந்த நேரமும் இதைச் செய்வதில் ஈடுபட்டேன். எத்தனை தரம் உலை மூட்டினேன்! எத்தனை தரம் சம்மட்டி ஓங்கினேன்! ஓய்வில்லை; ஒழிவில்லை. ஒரே கவலை; ஒரே இலட்சியம். சங்கிலி செய்து முடிந்தது. அதன் கணுவெல்லாம் ஒன்றாய்

கோத்தாயிற்று. உடைக்க முடியாத சங்கிலிதான்; ஆனால் உலகுக்கன்று, எனக்கே விலங்காய் முடிந்தது."

வாழ்க்கையிலே நாம் ஒவ்வொருவரும் கைதியே. உலகப்பொருள்களிலே நமது மனம் புலன் வழியாக ஈடுபடுகிறது. நாம் நினைப்பதென்ன? இப்பொருளை யெல்லாம் வசப்படுத்தினால், உலக முழுதையும் சிறைப் படுத்தி விடுவோம்; பின் நம் புலன்கள் பூரண சுயேச்சையும், நம் மனம் எல்லையற்ற ஆனந்தத்தையும் பெற்றுவிடும் என்பதே நம் நினைவு. உலகப் பொருள்களைப் பெறுவதையும் அவற்றைப் புலன்கள் மூலமாக இன்ப உணர்ச்சியாக மாற்றுவதையுமே இலட்சியமாகக் கொண்டு விவகரிக்கிறோம். உலகப் பொருள்களுக்கு அளவில்லை; அவற்றைப் பெறமுயலும் நம் சக்திக்கு அளவுண்டு. புலன்கள் விளைக்கும் இச்சைக்கு முடிவில்லை; இவ்விச்சையைச் சாந்திசெய்யும் என்று நாம் கருதும் உலகின் சக்திக்கு முடிவுண்டு. ஆகவே நமக்கு ஓய்வில்லை; சுயேச்சையுமில்லை. புலன்கள், உலகப் பொருள்கள் இவை இரண்டும் சேர்ந்து நமக்கு விலங்கு பூட்டுகின்றன. நாம் கைதிகள். எவ்வளவுக்கு உலகத்திலுள்ள பொருள்களில் நமது மனம் செல்கிறதோ, அவ்வளவுக்கு நமது விலங்கு நீள்கிறது. எவ்வளவுக்கு நமது புலன்கள் அடங்கவில்லையோ அவ்வளவுக்கு நமது விலங்கு வலிமை பெறுகிறது. நமக்குச் சாந்தியில்லை; சுதந்திர மில்லை; ஆனந்தமில்லை; நாம் கைதிகள்.

உலகப் பொருள்கள், அவற்றைத் தொடர்ந்து இயங்கும் நமது புலன்கள் - அந்த இரும்பு, இந்தச் சம்மட்டி - இவைகொண்டு மனமென்ற உலைக் கூடத்திலே இச்சையென்ற பார விலங்கைச் செய்யா திருப்பவன் எவனோ, அவனே பிரும்ம ஞானி; உண்மையான விடுதலை பெற்றவன்; எல்லையற்ற ஆனந்தம் அடைபவன். நாமோ... நாம் கைதிகள்...

9

# இலக்கியம் பொழுதுபோக்கா ?

எங்கள் ஊரிலே இரண்டு வருஷங்களுக்கு முன் கம்பர் திருநாளைக் கொண்டாடினோம். என் வாழ்க்கையில் அதை ஒரு அபூர்வமான அனுபவம் என்று நிச்சயமாகச் சொல்லுவேன். அவ்வளவு உற்சாகம், கவிதையில் அவ்வளவு உறுதியான மோகம், அதற்குமுன் ஒரே காலத்தில் அத்தனை பேரிடத்தில் நான் கண்டதில்லை. தமிழிலும், இலக்கியத்திலும் எனக்குப் புதியதொரு நம்பிக்கை பிறந்தது. ஆனால், மறுநாள், - மறுநாள் ஒன்று எந்த நிகழ்ச்சிக்கும் வரத்தானே செய்கிறது - ஒரு பெரியவர் என்னைக் கண்டார்.

"என்ன, நேற்று அமர்க்களப்படுத்திவிட்டீர்களாமே" என்றார்.

"ஆமாம்" என்று பெருமையோடு தலையசைத்து விட்டு, "ஏன், நீங்கள் வரவில்லையா ?" என்று கேட்டேன். என் குரலிலே கொஞ்சம் இரக்கம் தொனித்தது. அதை அவர் பாராட்டியதாகத் தெரியவில்லை. சொன்னார் :

"உங்களுக்கென்ன, சிறுபிள்ளை. மாசா மாசம் சம்பளம் வருகிறது உங்கள் தலைவர் முதலியாரவர்களுக்கோ கேட்கவேண்டாம். பணம் இறகு முளைத்துக் கிடக்கிறது. உங்களுக்கென்ன கவலை ? கம்பனும் படிக்கலாம், காளிதாஸனும் படிக்கலாம். எங்களுக்கு இதற்கெல்லாம் நேரமேது ? வயிறு ஒன்று இருக்கிறதல்லவா ? வீண் பொழுது போக்கச் சாத்தியமில்லை.. ஏன், நான் சொல்வதிலே கோபமோ ?" என்றார்.

நான் பதில் சொல்லவில்லை. இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன், கிரேக்கநாட்டிலே, ஏதென்ஸ் நகர்ப்புறத்தில் ஒரு சோலையிலே, தத்துவஞானி ஒருவன் தன் மாணவர் சிலரிடம் பேசிய வார்த்தைகள் என் ஞாபகத்திற்கு வந்தன. பிளேதோ என்ற அந்தத் தத்துவஞானி சொன்னான்: "புதியதொரு உலகை நிர்மாணம் செய்தால், அதிலே கவிஞர்களுக்கு இடந்தரமாட்டேன்." ஏன் தெரியுமா? உண்மைக்கு மாறான பொய்க் கனவுகளைக் கவிஞன் எழுப்புகிறான்; அதோடு, அவற்றை நம்பும்படியாகவும் செய்துவிடுகிறானாம். சிந்தனைப் படியில் நின்றுகொண்டு, சத்தியத்தின் பெயரால், இலக்கியத்தின் சிகரமான கவிதையை விலக்கவேண்டும் என்றான் பிளேதோ. கவிதையிலும் இலக்கியத்திலும், நேரத்தைச் செலவிடுவது குற்றம் என்று வயிற்றின் பெயரால் பேசுகிறார் எங்களூர்ப் பெரியவர். சத்தியம் இருக்கட்டும், அதைக் கண்டது யார்? வயிறு ஒன்று இருக்கிறதே, பெரியவர் சொல்லுகிறபடி, அந்தப் பிரச்னையை கவனிப்போம்.

'வேதாந்தம்' பேசவில்லை; உண்மையைச் சொல்லுகிறேன்: வயிற்றுப் பிழைப்பென்று துல்லியமாகக் குறிக்கக் கூடியது நாழி அரிசியிலும், நாலு முழத் துண்டிலும் அடங்கிவிடும். இதை நான் எழுதும்போது, கீழேயிருந்து தச்சன் ஒருவனுடைய உளிச்சத்தம் கேட்கிறது. எனக்கு ஒரு 'பங்கா'வும், மேஜையும் செய்கிறான். அவை எதற்காக, ஐயா? கொஞ்சம் சிந்தித்தால் போதும், ஒன்று தெரிந்துகொள்ள: நாம் ஒவ்வொருவரும் நம்மை அறியாமலே 'மனிதப் பிழைப்பு'க்காகப் பாடுபடுகிறோம், வயிற்றுப் பிழைப்புக்காக மட்டுமன்று. ஒருவனை 'மிகவும் தாழ்த்திப் பேசவேண்டுமானால், "சீ, அவன் மனிதனா?" என்பதைவிட நீங்கள் என்ன சொல்லிவிடமுடியும்?

ஆமடா, தம்பி! நீ வேலை செய்வதெல்லாம், நெற்றி வேர்வை நிலத்தில் விழ நீ உழைப்பதெல்லாம் உன்

வயிற்றை நிரப்ப மட்டுமா? இல்லவே இல்லை. சிந்து பூந்துறை மாடன் கோயிலில் இன்றிரவு 'கொடை'; களக் காட்டான் 'வில்லடிக்க'ப் போகிறான்; நல்ல நிலவு இன்றைக்கு; பாட்டு என்னமா யிருக்கும்! நீ போக வேண்டும். பணம் வேண்டும். கீழக் கோடி வீட்டு நாட் டாண்மைக்காரர் மகளை அன்று வேலிப் புறத்திலே நீ பார்த்தாய். ஆம், எனக்குத் தெரியும், அவளும் உன்னைப் பார்த்தாள் கடைக்கண்ணாலே. 'பரிசம்' போடவேண்டும்; பணம் வேண்டும். ஒப்புக்கொள்ளுகிறேன். ஏரைப் பிடி; உனக்கு வெயிலேது, மழையேது? ஆனால் வயிற்றுப் பிழைப்பென்று மட்டும் சொல்லாதே.

பெரியவரே, உண்மையில் வயிறு வளர்க்கப் பாடுபடுவ தாலா உமக்கு நேரமில்லை? இங்கே பாரும். உமது வயிற்றுக் கஞ்சிக்கு வழியில்லையா உம்மிடம்? இருக் கிறது. ஆனால் உம்முடைய தம்பி நோயாளி; அவன் குடும்பத்தைக் காப்பாற்றுவது உமது பொறுப்பு. உம் முடைய பையன் சீமைக்குப் போகவேண்டும் என்று பிடி வாதம் செய்கிறான்; உமக்கும் அவனை அனுப்ப ஆசை தான்; அதற்குப் பணம் வேண்டும். பள்ளிக்கூடத்தை நடத்த ஒப்புக் கொண்டுவிட்டீர், அதற்கு ஏதாவது செய் யாமல் இருக்கலாமா? செய்ய வேண்டும், ஐயா, செய்ய வேண்டும். ஆனால் பெரியவரே, இதெல்லாம் கேவலம் வயிற்றுப் பிழைப்பா?

அதோ ஸாவ்கார் வருகிறார். அவருக்குந்தான் நேர மில்லை. அவருடைய கவலை யெல்லாம் ஒன்றரை லக்ஷ ரூபாய் இரண்டு லக்ஷமாக வளர இத்தனை நாளாகிறதே என்பதுதான். எத்தனை கணக்குப் புத்தகங்கள் எழுதி முடிக்க வேண்டும்; அடேயப்பா, எவ்வளவு தொல்லை! ஒன்றரை 'லகாரம்' இரண்டாகிறது இலேசா? கம்பனா, கவிதையா, இலக்கியமா? அட, ராம், ராம், கேவலம் வயிற்றுப் பிழைப்புக்கே அவருக்கு நேரமில்லையே!

ஒன்று நிச்சயம். நாம் பாடுபடுவதெல்லாம், வயிற்றுக்காக மட்டுமன்று, மனிதனாய் வாழவேண்டும் என்பதற்காகத்தான். அதோ வயலிலே உழுகிறானே, அவனுக்கு மாடன் கோயில் கொடை நினைவு, நாட்டாண்மைக்காரர் மகள் மயக்கம். பெரியவருக்குத் தன் மக்களின் படிப்புக் கவலை. ஒன்றரை லக்ஷ ரூபாயைப் பூதம் போல் பாதுகாக்கும் ஸாவ்காருக்கு இரண்டு லக்ஷத்திலே கண். நாளைக்குள் இந்தத் தச்சனுடைய உளியும், சோம்பலும் 'பங்கா'வை உருவாக்க முடியுமா என்பதுதான் தற்போது என் கவலை. கால் வயிற்றுக் கஞ்சிக்குக் கூட வழியில்லாமல் அவதிப்படுகிறானே அவன்கூட வயிற்றை மாத்திரம் கும்பிடவில்லை. அன்றைய தினம் கடைத்தெரு முனையில் இரண்டு பிச்சைக்காரர்கள் பிரமாதமாய்ச் சண்டையிட்டார்கள். எதற்காக என்று நினைக்கிறீர்கள்? கப்பரைச் சோற்றுக்காக வன்று! அன்னக்காவடி, நிலைப்பட்டியினியை 'மருவாதிக் குறைவாய்'ப் பேசிவிட்டானும். கதை எப்படி? ஆனால் இது கதையில்லை. வயிற்றுக் கொடுமை பெரிதுதான்; ஆனாலும் அதைவிடப் பெரிய கொடுமை இந்த ஒரு கொடுமைதான் உலகத்திலே உண்டு என்று பேசுவது; அது பொய்யுங்கூட.

மனிதனாக வாழவேண்டும் என்பதுதான் உண்மையான பிரச்னை. இதைப்பற்றி நீங்கள் (நீங்கள் என்றால் நீங்களா? நானும்) சிந்திப்பதில்லை. எந்தச் சமூகத்தில் பிறந்து வளர்கிறோமோ, அதன் கட்டுப்பாடுகள், சம்பிரதாயங்கள் இவற்றில் ஊறி, மனத் தெளிவில்லாமல், காரண காரியத் தொடர்பை ஆழ்ந்து கவனியாமல், செய்கையில் ஈடுபட்டுக் காலத்தைக் கழிக்கிறோம். இதை வாழ்க்கை என்றும் நம்புகிறோம். உண்மையான வாழ்க்கை இதுவா? மனிதன் என்ற முறையிலே நமது தனிப்பண்பை வளர்த்து, தெளிவான, உன்னதமான இலட்சியங்களை நாடி வாழ்வதே மனித வாழ்க்கையாகும்.

மனிதனுடைய தனிப் பண்பை இலக்கியம் வளர்க்கிறது. காலையும், மாலையும் வாசற்படிகளாக அமைந்த இந்தக் காலச் சத்திரத்திலே நாம் தங்கியிருக்கின்ற சில நாட்களில், நம்மையெல்லாம் துன்பத்திலோ, இன்பத்திலோ, வெறியிலோ, அமைதியிலோ ஆழ்த்தும் சக்திகள் தாம், இலக்கியம் பேசுகின்ற பொருள். நம்முடைய ஆசைகள் (அவற்றிற்கு எல்லைதான் உண்டா ?), நம்மைத் தெய்வ நிலைக்கு உயர்த்தும் நல்லுணர்ச்சிகள், பிசாசுகளாக்கும் மிருக வேகம், மனித முயற்சியின் பெருமை, அதன் பேதைமை, அழகின் மந்திர சக்தி, இத்தனைக்கும் மேலே, இதையெல்லாம் போர்த்தியுள்ள சாவு நிழல்—இவற்றின் குரல்தான் இலக்கியம். இதைக் காதில் வாங்கினால் போதும் ; நம் மிதயத்தோடு கலந்து விடும் ; மனிதப் பண்பு தானாகவே வளரும். நம்முடைய வாழ்விலே இலட்சியம் உதயமாகும்.

மனிதத் தத்துவத்தின் மகோன்னத நிலைகளால் ஆன தெய்வ நாட்டிற்கும், அதன் மிகத் தாழ்ந்த படிகளால் சமைந்த நரகத்திற்கும் இலக்கியம் நம்மை அழைத்துச் செல்லுகிறது. ஆனால் இரண்டிலிருந்தும் நம்முடைய தினசரி வாழ்க்கைக்குத் திரும்பும்பொழுது ஆத்ம உணர்ச்சி விரிவடைந்தவர்களாய் வருகிறோம்.

இலக்கியம் பொழுது போக்கா ? பொழுது போக்கானால், போகின்ற பொழுதை அமர நிலையில் கழிக்கின்ற பொழுது போக்கு. பொழுது செல்லுவதைத் தடுக்க முடியாது : அதோடு செல்லும் நாம் ஒன்று செய்யலாம், அது போகின்ற பாதையை இலட்சிய உலகை நோக்கிச் சிறிது திருப்பலாம்.

# 10

# மெய்ப் பொருள் உறவு - பாரதி

மெய்ப் பொருள் அறிவு பெற்ற ஞானி என்றவுடன் ஏகாந்தத்தின் சித்திரம் மனத்திலே உதயமாகிறது. நிர்மானுஷ்யமான காடு, பர்ணசாலை, இல்லாவிட்டால் குகை, பக்கத்திலே ஒரு புண்ணிய நதி, சுனை - இவை யெல்லாம் முதலில் தோன்றுகின்றன. அதன் பின் ஜடா மகுடதாரியான முனிவர் வருகிறார். தவத்தால் மெலிந்து சருகான உடல். ஆசையையும், ஐம்புலன்களையும் வென்ற ஆத்ம சக்தி கண்ணிலே ஒளி வீசுகிறது. ஆத்மானுபூதிச் சொற்கள் நம் காதிலே விழுகின்றன:

**"சாதிகளும் துகளாகிய பின்**
**பேசா அனுபூதி பிறந்ததுவே."**

இதன் நடுவே பாரதியாரின் குரல் கேட்கிறது;

**" இரும்பைக் காய்ச்சி உருக்கிடுவீரே ;**
**யந்திரங்கள் வகுத்திடுவீரே ;**
**கரும்பைச் சாறு பிழிந்திடுவீரே ;**
**கடலின் மூழ்கி நன்முத் தெடுப்பீரே."**

இவ்வாறு பேசிய கவிஞர், நம்மைப் போலவே வீட்டில் அடைபட்டு, வீதிக்கரையில் ஒதுங்கியவர். மெய்ப் பொருளை நாடி, மனித வாசனை இல்லாத காட்டுக்குச் சென்றவர் அல்ல. அவரைச் சுற்றி மண்ணுலகத்து ஓசைகள் - நாயின் குரைப்பு, அன்னக்காவடி பிச்சை என்ற ஏக்கக் குரல், வீதிக் கதவையும், அதோடு இதயத்தையும் சேர்த்து யாரோ அடைப்பது, கீழ்த்திசையில் விம்மிடு சங்கொலி, வாதுகள் பேசிடு மாந்தர் குரல், மதலை அழுங்

குரல், மனித வாழ்க்கையின் அலங்கோலம், அதன் வீரியம். இவராவது மெய்ப்பொருளை உணர்வதாவது? சந்தைக் கடையில் சாதனையா? அவர் பேச்சும் அப்படித்தானே இருக்கிறது :

**" அரும்பு வேர்வை உகுத்துப் புவிமேல்**
**ஆயிரம் தொழில் செய்திடுவீரே."**

சரிதான். உலைக் கூடத்திலே ஓங்கும் சம்மட்டியின் பேச்சு இது. பிறகு சொல்லுகிறரே:

**"சிந்து நதியின் மிசை நிலவினிலே**
**சேர நன்னாட்டிளம் பெண்களுடனே**
**சுந்தரத் தெலுங்கினில் பாட்டிசைத்துத்**
**தோணிகள் ஓட்டி விளையாடி வருவோம்."**

அப்படியா, நல்லது. நிலவா, தோணியா, பாட்டா, பெண்களா ? ஆம்.

**"காணி நிலம் வேண்டும் — பராசக்தி**
**காணி நிலம் வேண்டும் —**
**. . . . . . . . . அந்தக்**
**காணி நிலத்திடையே — ஓர் மாளிகை**
**கட்டித் தர வேண்டும் . . ."**

போதுமா ?

**"முத்துச் சுடர்போலே—நிலாவொளி**
**முன்பு வரவேணும்—அங்கு**
**கத்தும் குயிலோசை—சற்றேவந்து**
**காதிற் படவேணும். . ."**

அப்புறம் ?

**" பாட்டுக் கலந்திடவே—அங்கேயொரு**
**பத்தினிப் பெண்வேணும்—எங்கள்**
**கூட்டுக் களியினிலே. . ."**

போதும் போதும். தாயுமானவரோ, பட்டினத்தடிகளோ இதைக் கேட்டால் சிவ சிவ என்று காதைப் பொத்திக் கொண்டு ஓடி விடுவார்கள். நாமோ, புலன்களுக்குக் கடிவாளம் போடாமல் அவற்றின் போக்கின்படியே விடும் இந்த பாரதி எந்த மெய்ப்பொருளைக் கண்டிருக்கமுடியும் என்று எண்ணுகிறோம்.

இந்த எண்ணம் தவறு. எங்கும் பரந்துள்ள அகண்ட சக்தியோடு ஐக்கியமாகி நிற்பதே மெய்ப்பொருள் அறிவு நிலை. இதை எத்தனையோ வழிகளில் சாதிக்கலாம். இதோ என் முன்னால் பிரகாசமான விளக்கு. என்னைச் சுற்றிலும் அதன் ஒளி வட்டம். விளக்கை அணைத்து விடுகிறேன். ஒளியின் எல்லைகள் மாய்கின்றன. நான் காணும் பொருள்களும் மறைந்து விடுகின்றன. இருள் தானாகவே என்னைச் சூழ்ந்து விடுகிறது. இதைப்போலவே, என்னுடைய இந்திரியங்களையும், மனத்தையும் அவித்து விட்டால், விவர்த்தமான இந்தப் பிரபஞ்சம் மறைந்து விடுகிறது. அதன் எல்லைக்கு அப்பாலுள்ள அகண்ட சைதன்யம் தானாகவே என்னுள்ளே பரவ, நான் அதனோடு கலந்து விடுகிறேன்; நான் என்ற தத்துவமே அழிந்து போகிறது. இந்த இந்திரிய நிக்ரஹ மார்க்கம் பாரதிக்குத் தெரியாமல் இல்லை.

**"பொய்யுறு மாயையைப் பொய்யெனக் கொண்டு**
**புலன்களை வெட்டிப் புறத்தில் எறிந்தே**
**ஐயுறவின்றிக் களித்திருப் பாரவர்**
**ஆரியரா மென்றிங் கூதேடா சங்கம்."**

உலகத்தை ஒதுக்கிய துறவியின் வார்த்தைகளாகத் தோன்றும் இவை பாரதி பாடியது.

**"மோகத்தைக் கொன்றுவிடு—அல்லா லெந்தன்**
**மூச்சை நிறுத்திவிடு;**

*தேகத்தைச் சாய்த்துவிடு—அல்லா லதில்*
*சிந்தனை மாய்த்து விடு.''*

இதுவும் பாரதியாரின் பாட்டுத்தான். ஆனல் அவருடைய வழி இதுவன்று.

இந்த உடல் ஊனத்தைச் சடலம், உப்பிட்ட பாண்டம், வரையோட்டுக்குக்கூட உதவாது; புலன்களோ மெய்யறிவை அழிக்கும் விஷப் பாம்புகள்; அவை தீண்டுவதால் ஆசைவாய்ச் சென்ற சிந்தையராகி, அல்லற் படுகிறேம்; மனமோ மாயை படியும் திரை; பிரபஞ்சமோ மாயை;—இது பழைய பல்லவி. பாரதி சொல்கிருர் :

*“உடல் நன்று. புலன்கள் மிகவும் இனியன.*
*உயிர் சுவையுடையது. மனம் தேன்.*
*அறிவு தேன். உணர்வு அமுதம்.”*

ஏன் தெரியுமா ?

*“மனம் தெய்வம், சித்தம், தெய்வம்*
*உயிர் தெய்வம்;*
*காடு, மலை, அருவி, ஆறு,*
*கடல், நிலம், நீர், காற்று,*
*தீ, வான்,*
*ஞாயிறு, திங்கள், வானத்துச்*
*சுடர்கள்—எல்லாம் தெய்வங்கள்.''*

ஏனென்ருல்,

*“இவ்வுலகம் ஒன்று;*
*ஆண், பெண், மனிதர், தேவர்—*
*... ... ... ...*
*ஞாயிறு, வீட்டுச்சுவர், ஈ, மலையருவி,*
*இன்பம், துன்பம், பாட்டு,*
*வண்ணான், குருவி,*
*மின்னல், பருத்தி, இஃதெல்லாம் ஒன்று. ''*

ஒரே மெய்ப்பொருள்தான் இவற்றில் எல்லாம் வியாபித்து நிற்கிறது.

"ஆதித் தனிப்பொரு ளாகுமோர்—கடல்
ஆகும் குமிழி உயிர்களாம்—அந்தச்
சோதி அறிவென்னு ஞாயிறு—தன்னைச்
சூழ்ந்த கதிர்கள் உயிர்களாம்—இங்கு
மீதிப் பொருள்க ளனைத்துமே—அதன்
மேனியில் தோன்றிடு வண்ணங்கள்."

வண்ணத்தின்' நீதியை அறிந்தால் மெய்ப்பொருளை அறியலாம். ஆகவே, மெய்ப் பொருளை உணரவேண்டும் என்ற தாகம் பாரதிக்கு ஏற்பட்டதும்,

"... ... இறைவனே, இவ்
வளியிலே, பறவையிலே, மரத்தினிலே
முகிலினிலே, வரம்பில் வான
வெளியிலே கடலிடையே மண்ணகத்தே
வீதியிலே வீட்டில் எல்லாம்
களியிலே கோவிந்தா நினைக்கண்டு
நின்னோடு நான் கலப்ப தென்றோ?"

என்று பிரார்த்தித்தாரே அல்லாமல், "புலன்கள் என்ற கள்வர் என்னுட் புகுந்து, நடலைப் படுத்திட அஞ்சி நின்னை யடைந்தேன். என்னைக் காப்பாற்று!" என்று ஓல மிடவில்லை.

எதற்காக அஞ்ச வேண்டும்? பார்க்குமிட மெல்லாம் நீக்கமற நிறைகின்ற பரிபூரணானந்தம்; கண்ணை மூடிக் கொள்வானேன்?

"நெரித்த திரைக்கடலில் நின்முகம் கண்டேன்
நீல விசும்பினிடை நின்முகம் கண்டேன்
திரித்த நுரையினிடை நின்முகம் கண்டேன்
சின்னக் குமிழிகளில் நின்முகம் கண்டேன்."

கேட்கும் ஒலியில் எல்லாம் இறைவனுடைய கீதம் இசைக்கிறது. காதை எதற்காகப் பொத்திக் கொள்வது? தீண்டும் பொருளில் எல்லாம் இறைவனைத் தீண்டும் இன்பம் கிட்டுகிறது. உடலை உணர்ச்சியற்ற தாக்குவானேன்? அண்ட சராசரங்கள் அனைத்தும், அவற்றின் இயக்கம் யாவும்,

**"காலப் பெருங்களத்தின் மீது, எங்கள்**
**காளி நடம் ... ..."**

ஆகவே, பயமென்னும் பேய்தன்னை அடித்து விரட்டிவிட்டு, மனிதப் பண்பின் பல்வேறு சக்திகளையும் வளர்க்க வேண்டும் என்றார் பாரதி. வியனுலகனைத்தையும் அமுதெனப் பருகும் வேத வாழ்வினைக் கைப்பிடித்தார். அனந்தமாந் தொழில் செய்தால் அமரனுவாய் என்றார். புல்லாகவோ, பூண்டாகவோ பிறவாமல் மனிதனாய்ப் பிறந்தேனே என்று மனம் நோகவில்லை. புல்லும் பூண்டும், காக்கையும் குருவியும் மனிதனும் ஒரே ஜாதிதானே!

**"நோக்குந் திசையெல்லாம் நாமன்றி வேறில்லை**
**நோக்க நோக்கக் களியாட்டம்"**

என்று கூறி,

**"ஸ்ரீதரன் யான் சிவகுமாரன் யானன்றோ?—**
**நான் புதியன், நான் கடவுள்,**
**நலிவிலாதோன்—"**

என்று எக்களித்தார்.

இதனால்தான் பாரதி கவிஞனாக முடிந்தது. கவிதை என்பது மனிதப் பண்பின் பல்வேறு அம்சங்களை, வண்ணங்களை, வார்த்தை வலையிலே தேக்குவதுதானே. மனிதனுக்கு மனிதன் உள்ள உறவையும், மனிதனுக்கும் மனித வாழ்க்கையின் அரங்கான இப்பிரபஞ்சத்திற்கும் உள்ள உறவையும், பொய் என்று அகற்றி விட்டால் கவிதை

ஏது? இவ்வுறவுகளை உண்மையென்றும், உண்மைக்கு உண்மையான மெய்ப்பொருளை அடைய உதவும் சாதனங்கள் என்றும் பாரதி கருதியதால்தான் அவருடைய கவிதையில் மெய்ப்பொருள் அறிவு நிலையைக் காண்கிறோம். இந்த நிலையை அடைவதற்கு உலகத்தில் உள்ள சகல ஜீவராசிகளையும் தானாகவே கருத வேண்டும். அதாவது, கடவுள் நிலையிலே நின்று அவற்றைக் காண முயலவேண்டும். இதைத்தான் பாரதி வேண்டுகிறார்.

**"என் கண்ணை மறந்து விருகண்களையே**
**என்னகத்தில் இசைத்துக் கொண்டு**
**நின்கண்ணாற் புவியெல்லா நீயெனவே**
**நான் கண்டு நிறைவு"**

கொள்ள வேண்டும் என்று இறைவனை வணங்குகிறார். இதைச் சாதிக்கும் வழி அன்பை வளர்ப்பதுதான் என்று பாரதியின் முரசு பேசுகிறது.

**"ஒன்றென்று கொட்டு முரசே—அதில்**
**ஓங்கென்று கொட்டு முரசே**
**அன்பென்று கொட்டு முரசே—அதில்**
**யார்க்கும் விடுதலை உண்டு."**

உண்மைதான். அன்பின் தத்துவம் பிறர்க்காக நம்மை மறப்பதே; நாம், பிறர், என்ற பேதமில்லாமல், பிறர்க்காக வாழ்கிறோம் என்ற நினைவுகூட இல்லாமல் நம்மை இழந்து விடுவதே. நம்முடைய அன்பு ஓங்கி வளரும்போது, எல்லா ஜீவன்களிடமும் அது வெள்ளமாகப் பாயும்போது, நாம் அவற்றோடு கலந்து, அவற்றுள்ளே உறையும் மெய்ப்பொருளை உணர்ந்து விடுகிறோம். அன்பை வளர்ப்பது முக்கியம். அதற்கு நம்முடைய வாழ்க்கையே பயிற்சிக் கூடம். தந்தை, தாய், உடன்பிறந்தார், சுற்றம், மனைவி, மக்கள்—இவர்களிடத்திலே இயல்பாகவே நமக்கு

ஊறும் அன்பைப் பெருக்க வேண்டும். பலவிதமான மனித உறவுகளில் ஜனிக்கும் அன்பின் பல்வேறு வகைகளில், ஆணுக்கும், பெண்ணுக்கும் இடையே தோன்றும் காதல்தான் ஆழத்திலும் வேகத்திலும் சிறந்தது. ஆகவே அதைக் கொண்டுதான் அன்பின் அகண்ட பரிமாணத்தை எளிதில் பெறமுடியும் என்பது பாரதியின் நம்பிக்கை. மனிதனுடைய பெருமை யெல்லாம் காதலிலிருந்து வந்துள்ளது.

**"காதலினால் மானுடர்க்குக் கவிதை யுண்டாம்**
**கானமுண்டாம் சிற்பமுதற் கலைகளுண்டாம்**
**காதலினாற் சாகாம லிருத்தல் கூடும்**
**கவலைபோம், அதனாலே மரணம் பொய்யாம்"**

என்று பாரதி சொல்லுகிறார். ஆகவேதான் மெய்ப் பொருள் நாட்டம் என்ற கடவுட்காதலை அவர் வெளியிடும் போது, அவர் சொற்களின் வேகமும், துடிதுடிப்பும் நமது நெஞ்சில் பாய்கின்றன:

**"வார்த்தை தவறிவிட்டாய்—அடி கண்ணம்மா**
**மார்பு துடிக்குதடி!**
**பார்த்த இடத்திலெல்லாம்—உன்னைப் போலவே**
**பாவை தெரியுதடி!**
**மேனி கொதிக்குதடி—தலை சுற்றியே**
**வேதனை செய்குதடி!**
**வானிலிடத்தை யெல்லாம்—இந்த வெண்ணிலா**
**வந்து தழுவுது பார்.**
**மோனத் திருக்குதடி—இந்த வையகம்**
**மூழ்கித் துயிலினிலே.**
**நானொருவன் மட்டிலும்—பிரிவென்பதோர்**
**நரகத் துழலுவதோ?"**

இதைப் போலவே கடவுளோடு கலந்த மெய்ப்பொருள் அறிவு நிலையை, காதலனை அடைந்த ஒருத்தி பேசுவது

போல், பாரதி வெளியிடும்போது, அந்த நிலையின் சொல்லுக் கடங்காத் துரியானந்தம் அவர் சொற்களில் ததும்புகிறது:

"உச்சி குளிர்ந்ததடீ — ஸகியே
உடம்பு நேராச்சு.
மச்சிலும் வீடுமெல்லாம் — முன்னைப்போல்
மனத்துக் கொத்ததடீ.
இச்சை பிறந்ததடீ — எதிலும்
இன்பம் விளைந்ததடீ
அச்சம் மொழிந்ததடீ — ஸகியே
அழகு வந்ததடீ.
எண்ணும் பொழுதிலெல்லாம் — அவன்கை
இட்ட விடத்தினிலே
தண்ணென் றிருந்ததடீ — புதிதோர்
சாந்தி பிறந்ததடீ."

மெய்ப் பொருள் அனுபவம் இங்கே காதலாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. வேறு எத்தனையோ விதங்களில் அதை வெளியிடலாம். பாரதியும் அதைச் செய்திருக்கிறார். கடவுளைத் தோழனாகவும், குருவாகவும், சீடனாகவும், தாயாகவும், தந்தையாகவும், குழந்தையாகவும், வேலைக்காரனாகவும், ஆண்டானாகவும் நமக்குக் காட்டியிருக்கிறார். இந்த மாதிரியான கற்பனைகளின் மூலமாகத்தான் அவாங்மனகோசரமான அகண்ட சைதன்ய அனுபவத்தைப் பற்றிப் பேச முடியும். தூண்டிற் புழு, சுடர் விளக்கு, கூண்டுக்கிளி, குழந்தையின் விளையாட்டுப் பொம்மை, பெண்மைக் குணம், தழல், எத்தனை எத்தனையோ பொருள்கள், மனித அனுபவங்கள், எல்லையில்லாத பேரின்பத்தைச் சுட்டிக் காட்டும் ஸங்கேதங்களாக பாரதிக்கு அமைகின்றன. மெய்ப்பொருள் அறிவு நிலை இலக்கியத்தின் தவிர்க்க முடியாத இலக்கணம் இது. ஆனால் ஸங்கேதங்களாக

பாரதி உபயோகிக்கும் பிரபஞ்சப் பொருள்களும், சாதாரண மனித வாழ்க்கைச் செய்திகளும், அனுபவங்களும், அவருக்குக் கேவலம் ஸங்கேதங்கள் அல்ல. ஏனென்றால் அவற்றிலேயே மெய்ப்பொருள் தங்கியுள்ளது என்பதல்லவா அவர் சித்தாந்தம். கயிற்றைக் காட்டிப் பாம்பை அவர் உணர்த்தவில்லை. அணுவைக் காட்டி அகண்டத்தைத் தெளிவாக்கவில்லை. அணுவைக்கொண்டு அதனுள்ளேயே கிடக்கும் அகண்டத்தை நமக்குத் தர முயல்கிறார்.

பொய்கை ஆழ்வாரும், பூதத் தாழ்வாரும் கடவுளைக் கண்டார்கள். இந்த வையகத்தைத் தகளியாகவும், கடலையே நெய்யாகவும், கதிரவனைச் சுடராகவும் அமைத்து, அந்த விளக்கொளியில் பரம்பொருளைக் கண்டதாகப் பொய்கை ஆழ்வார் சொல்லுகிறார். பூதத் தாழ்வாரோ அன்பே தகளியாகவும், ஆர்வமே நெய்யாகவும், இன்புருகு சிந்தை இடுதிரியாகவும் ஞானச்சுடர் விளக்கேற்றி, இறைவனை அறிந்தார். பாரதியைப்பற்றி நினைக்கும்போது இவ்விரண்டு ஆழ்வார்களின் ஞாபகமும் வருகிறது. பிரபஞ்சத்தின் சௌந்தரிய விசாலமே பாரதியின் விளக்கு. மனிதப் பண்பின் மலரான அன்பே சுடர். இந்த ஒளியிலே அவர் கண்டது என்ன ? எல்லாப் பொருளையும் ஊடுருவி நிற்கும் ஒருமை; மனித வாழ்க்கையின் குறைகளை நிறைவாக்க எப்போதும் இயங்கிவரும் பெருங் கருணை; அண்டகோளச் சுழல் நடுவிலே, அசையா நெஞ்சுடன் வாழ்வதற்காகப் பரம்பொருளைத் தொடக் கைநீட்டும் மனிதனுடைய பெருமை-இவையே, முன்னிக்கவிதை வெறி மூண்டே நனவழிய, பாரதி என்ற கவிஞருக்குத் தோன்றிய நெட்டைக் கனவு.

## 11

# அகத்தியரைப் பற்றி

"**பு**த்தகத்தை புரட்டிப் புரட்டிக் கண்டது என்ன? வெளியிலே வா. காட்டுக் குருவி இதோ பாடுகிறது, கேள். இது பேசுகின்ற ஞானம் எந்தப் புத்தகத்திலே உண்டு?" என்று ஆங்கிலக் கவிஞன் வர்ட்ஸ்வர்த் சொன்னான். இருக்கலாம். ஆனால் இதைக் கவிஞன் எழுதி வைக்காமல் போயிருந்தால் நமக்கு எப்படித் தெரியப் போகிறது? காட்டுக் குருவி பாடிக் கொண்டுதான் இருக்கும்; ஆனால் அதன் பாட்டு நம்முடைய காதில் ஏறுமா? அப்படியே காதில் விழுந்தாலும், நம்முடைய இதயம் இந்த உலகத்தின் தெய்விக இனிமையைச் சுவைக்குமா? சந்தேகந்தான். மில்டன் சொன்னது போல், ஆத்மாவின் ஜீவத் துடிப்பல்லவா புத்தகங்களில் உள்ள புதையல்! இதை வேண்டாம் என்று ஏழைகளாகிய நாம் எப்படி ஒதுக்கித் தள்ளமுடியும்?

என்றாலும், காகிதமும் அச்சு மையும், அட்டையும் கலிக்கோவும் ஒன்று சேர்ந்தாற் போதும், புத்தகமாகி விடும் என்ற துணிவோடு தர்மாத்மாக்கள் சிலர், மை தீட்டிய காகிதக் குப்பையைத் தலையிற் சுமத்தினால், தலை மாத்திரமா, நம்முடைய அறிவே நசுங்கி விடுகிறது. "எங்கே பார்த்தாலும் புத்தகங்கள்; ஆனால் என்னால் படிக்க முடியவில்லையே, படிக்கும் சக்தியை இழந்து விட்டேனே!" என்று கிழவன் ஒருவன் ஏங்கியதாக ஆங்கில ஆசிரியர் அகஸ்டின் பிரல் கற்பனை செய்கிறார். "எங்கே பார்த்தாலும் புத்தகங்கள். ஆனால் **அவற்றைப்** படிக்க முடியவில்லையே, புத்தகங்கள் என்றால் அறியாமை பவனி

வர உதவும் காகித வாகனங்களா ?'' என்று இக்காலத்துப் புத்தகங்களைப் பார்த்து மலைக்கும் நமக்கு 'என்னால் படிக்க முடியவில்லையே' என்று வருந்திய கிழவன் பித்துக் கொள்ளி என்று தோன்றும். “ இந்தப் புத்தகங்களைப் படிக்காவிட்டால், என்ன குடி-முழுகிப் போகிறது, அப்படித் தான் என்ன, அவற்றில் அறிவு வெள்ளம் 'பொங்கித் ததும்பிப் பூரணமாய் ஏகவுருவாய்க் கிடக்கிறதா?' என்னவோ, விளம்பரத்தில் மிதந்துவரும் ஓட்டைக் கப்பல்கள், இவற்றில் ஏறுவதா ?'' என்றெல்லாம் எண்ணுவது சரிதான். ஆனால் என்ன வேண்டுமானாலும் நினைத்துக் கொள்ளுங்கள், புதிதாக ஒரு தமிழ்ப் புத்தகத்தைப் பார்த்து விட்டால் என்னால் படிக்காமல் இருக்க முடியவில்லை.

இதோ, அகத்தியரைப் பற்றி ஒரு புத்தகம். அகத்தியர் என்ற பெயரே ஏதோ ஒரு மந்திரம் போல் சரித்திர ஆராய்ச்சி எல்லைக்கு அப்பாலுள்ள புராதன காலம் என்ற தேசத்திற்கு நம்முடைய மனத்தைத் தூக்கிச் செல்கிறது. அந்த நாட்டு இருளை, தமிழ் இலக்கியத்திலே அங்கங்கே உள்ள சில குறிப்புக்களும், கர்ண பரம்பரைச் செய்திகளும் போக்க முயல்கின்றன. அந்த மங்கிய ஒளியில், குமரி முனைக்குத் தெற்கே சுமார் நூறு காத தூரத்தில், தென் மதுரை நகரமும், முதற் சங்கமும், இருட்டில் ஆடும் நிழல்கள்போல், உருவில்லாமல் மனக் கண் முன்னே அசைகின்றன. திடீரென்று கடல் சீறியெழுந்து, தென்மதுரை நகரத்தை விழுங்குகிறது ..பல நூற்றாண்டுகள் கடந்து கபாடபுரம் வருகிறோம். அங்கே ஒரு தமிழ்ச் சங்கம். நாட்டின் வடக்கெல்லையாகப் பஃறுளியாறு நடந்து செல்கிறது. மறுபடியும் கடல் பொங்கி வருகிறது; அதே பயங்கர நாடகம்; கபாடபுரமும், பஃறுளியாறும், இடைச் சங்கமும் மறைகின்றன. இன்னும் பல நூற்றாண்டுகள் மாயமாய்க் கழிகின்றன. மதுரையில்

நிற்கிறோம்; இப்போதுள்ள மதுரை தான்; ஆனால் நம்மைச் சுற்றி எங்கும் இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன் ஏற்பட்ட தமிழ் நாகரிக மலர்ச்சி. இங்கேயும் ஒரு தமிழ்ச் சங்கம். வைகைக் கரையில் தமிழ் வளர்கிறது.

இம்மூன்று சங்கங்களிலும் அகத்தியர் தோன்றுகிறார். இதில் அதிசய மொன்றுமில்லை. தமிழில் வழங்கும் கதைகளின் போக்கிலே மனத்தை விட்டால், எத்தனையோ இடங்களில், பல்வேறு காலங்களில், அகத்தியரைச் சந்திக்கலாம். பொதிகைச் சாரலில் அவர் குரல் கேட்கிறது. தண்டகாரண்யத்தின் இருளிலே இராமலக்ஷ்மணர்கள் அங்கேயுள்ள அவருடைய ஆசிரமத்திற்குப் போகிறார்கள். இப்போது தெலுங்கர் வசிக்கும் ஆந்திர தேசத்தில், எப்போதோ தெரியாது, வாதாபி, வில்வலன்என்ற இருவரைத் தம்முடைய மந்திர சக்தியால் அகத்தியர் வதைக்கிறார். பரமசிவனுடைய திருக்கலியாண மகோற்சவத்திற்காக (அது எப்போது நடந்தது, முகூர்த்தப் பத்திரிகையின் ஏட்டுப்பிரதி யாரிடமாவது உண்டா?) இமயமலைக்குப் போகிறார்; கலியாணத்திற்கு முந்தியே தெற்கே வந்து விடுகிறார். தெற்கிலோ, வடக்கிலோ, திசையொன்று மில்லாப் பெரு வெளியிலோ, சிவபெருமான் திருநடனத்தைக் கண்டு, ஆடும் பிரானுடைய உடுக்கிலிருந்து சிதறிய ஒலிகளைத் திரட்டித் தமிழ் மொழி ஆக்குகிறார். தலை கீழாகத் தொங்கும் தம் பிதிருக்களை எந்தக் காட்டிலோ காண்கிறார்; எப்போதோ உலோபாமுத்திரையை மணக்கிறார். எங்கேயோ, எப்போதோ கடலைக் குடிக்கிறார். ஆனால் எங்கும், எப்போதும், தமிழ் முனிவராகக் காட்சி அளிக்கிறார்.

இக் கதைகளையே (காது, மூக்கு, கொஞ்சம் அதிகமாகவோ குறைவாகவோ இருக்கலாம்) வடமொழி இலக்கியத்திலும் காண முடியும். இவை தவிர, வேறு கதைகளையும் காணலாம். ரிக்வேதம், மகாபாரதம், ராமா

யணம், வாயு புராணம், மச்ச புராணம், பிரமாண்ட புராணம், இவை ஒவ்வொன்றிலும் அகத்தியரைப்பற்றி ரஸமான செய்திகள் உள்ளன. சரித்திர ஆராய்ச்சி முறையில் கல்வெட்டுக்களைப் பரீட்சை செய்யத் தொடங்கினால், ஜாவா, காம்போஜம், மலாய் முதலிய பிரதேசங்களிற்கூட அகத்தியர் சஞ்சரித்தார் என்று தோன்றும். அதோடு சில கேள்விகளும் உதயமாகலாம் :

அகத்தியர் என்ற ஒருவர் உண்மையில் இருந்தாரா? பல அகத்தியர்கள் வெவ்வேறு காலங்களில் பல்வேறு இடங்களில் இருந்தார்களா?

அகத்தியர் என்ற பெயரை, சில சரித்திர ஆசிரியர் சொல்வதுபோல், ஒரு கூட்டத்தார் தாங்கி வந்த குடிப் பெயராகக் கொள்ளலாமா?

அகத்தியரைப் பற்றிய கதைகள் எல்லாம், நிகழ்ந்ததை அப்படியே கூறும் உண்மை வரலாறுகளா, அல்லது, ஏதோ ஒரு நிகழ்ச்சியை அல்லது உண்மையை அடிப்படையாகக் கொண்ட கற்பனைகளா?

இன்னும் எத்தனையோ கேள்விகள். இவற்றிற்கெல்லாம் சமாதானம் சொல்லுவதற்குள் பொழுது விடிந்து விடும்; அதற்குள் உலகமும் அஸ்தமித்துவிடும்.

ஒன்று நிச்சயம். அகத்தியர் என்ற பெயரைச் சுற்றி எத்தனையோ கதைகளைத் தமிழன் அமைத்துவிட்டான். அகத்தியர் என்ற ஒருவர் உண்மையில் இந்தத் தமிழகத்தில் வாழ்ந்து, புலமையும், புகழும் பெற்றிருக்கலாம். ஆனால் அவரைப்பற்றிய உண்மையான வாழ்க்கை வரலாற்றை காலகதி சிதைத்து விட்டது; கதைப் பாசி மூடி விட்டது. தற்போது அகத்தியர் என்ற பெயரால் எஞ்சி நிற்பது தமிழனுடைய தமிழ்க் காதல் எத்தனையோ நூற்றாண்டுகளில் எடுத்த அர்ச்சாவதாரம்; சரித்திரத்திற்கும் கற்பனைக்கும் இடையே உருவில்லாமல் தட்டுப்படும் ஒரு

கனவு; 'என்றுமுள தென்தமிழ் இயம்பி இசைகொண்ட' இலட்சியப் புகழ் வடிவம்.

இந்த நினைவோடு, அகத்தியரைப்பற்றிய இலக்கியக் குறிப்புக்களையும், கதைகளையும் திரட்டுவதில் பயனுண்டு. இவற்றைத் தொகுத்து வைப்பதையே சரித்திர ஆராய்ச்சியின் முடிவு என்று எண்ணுவது தவறு. ஆனால் அப்படியும் சிலர் எண்ணுகிறார்கள். அதோடு நில்லாமல், தங்கள் கற்பனைகளை, கலப்பற்ற உண்மைகளாகவே கருதி வெளியிடுகிறார்கள்.

இதோ பாருங்கள், அகத்தியரைப் பற்றி, புலவர் தரும் செய்தி :

"இனி அமிழ்தினுமினிய நந்தமிழ் மொழிக்கு எவ்வாற்றானும் ஆக்கந்தேடி அம்மொழிக்கு உயிராதாரமாய் இவர் உற்றிருந்தமையால், அவ்வியைபு தோன்ற அகத்தியர் என இவர் அழைக்க நின்றார் எனினுமாம. என்னே இயைபு? எனின், 'அகர முதல் னகர இறுவாய்' என்ற ஆன்றோர் இயலுரை வழுவாமல், அகரத்தை முதலிலும், னகரத்தை இறுதியிலும் தமிழ் மொழி அமையப்பெற்றிருத்தல் போல், அதனைப் பேணிய இவர் பெயரும் அவ்வாறே முதலில் அகரமும், முடிவில் னகரமும் முடியக் கொண்டுள்ளமை அறிக."

எப்படி இருக்கிறது? தமிழ் கொஞ்சம் கரடுமுரடாய் இருக்கிறது என்று நினைக்கிறீர்கள்! அதற்கென்ன செய்வது? தமிழ் முனிவரைத் தேடிக் கொண்டு பொதிகை மலைக் காட்டுக்குள் போகும்போது, பாதை கரடுமுரடாய்த் தானே இருக்கும்! 'அவ்வியைபு' அகத்தியரைப் பற்றிப் பேசும் தமிழ் நடையிலும் தோன்ற வேண்டாமா? தவிரவும், இது ஆராய்ச்சி; ஆகவே "உயர்ந்த" தமிழில் அமைய வேண்டாமா? என்ன மலைக்கிறீர்கள், ஆராய்ச்சி தான். 'இடுப்பு'ம், 'இரும்பு'ம், இகர முதலாய், புகர இறுதியாய் அமைந்திருத்தலின் இடுப்புக்கும், இரும்புக்

கும் தொடர்புளது என்பது போதரவில்லையா? 'இவ் வினையபு' நீதி தவறினால் 'குடகு' நாட்டில் 'குரங்கு' என்ற கோபுர வஸ்துவைப் பார்க்க முடியுமா, காவிரிக் கரையிலே காட்டுக் கரி அகப்படுமா, கப்பல் கடல் மேலே மிதக்குமா?.........

இப்படியும் புத்தகங்கள் வெளிவருகின்றன. இருந்தாலும், எனக்கு மட்டும் புத்தகங்களைப் படிக்காமல் இருக்க முடியவில்லை. என்ன செய்வது?

# 12

# மூன்று அனுபவங்கள்

## I

நாடகமேடை இளவரசி குக்குட கான குயிற்குரலி, அரசிளங்குமரியாக ஏதோ ஒரு நாடகத்தில்—எந்த நாடகமானால் என்ன ?—நடிக்கிறாள். அரசிளங்குமரி என்றால் அரண்மனை நந்தவனத்தில் தோழியருடன் பூக்கொய்ய வேண்டுமென்பது நாடகப் பிரபஞ்சத்தின் மாறாத விதியாக இருந்த அந்தக் காலம். 'இழைக்கின்ற' அவ்விதி முன்செல்ல, பின்பாட்டுக்காரரின் கட்டைக் குரல் திரைக்குப் பின் 'இரங்கி ஏங்க' 'வரும், வரும்' என்று 'தழைக்கின்ற உள்ளத்த'ராகி ஆரவாரிக்கும் மகாஜனங்கள் முன், ஸ்ரீமதி கு. கா. குயிற்குரலி பிரசன்னமாகிறாள்; ஆம், பாடிக்கொண்டுதான் :

> **"காட்சி கண்காட்சியே-சிங்கார நந்தவனத்தின்**
> **மாட்சி நல்லாட்சியே."**

குயிற் குரலியின் குரல் கீச்சிட்டுத் தாவுகிறது. அதைட் பிடிக்கப் பின்பாட்டுக்காரர் மூக்கும், ஆர்மோனியக்காரர் விரலும், தாளக்காரருடைய சமயோசித சாதுரியமும் முயல்கின்றன. 'ஆகா'..., 'பேஷ் பேஷ்', 'என்ன போடு போடுகிறாள்', 'இதான் அய்யா பாட்டு' என்ற கோஷங்கள் சுருட்டுப் புகைப்படலத்தைப் பிளக்கின்றன. தரைப் பகுதியிலே உற்சாகவெள்ளம் கரைபுரண்டு சுழல்கிறது. 'வெந்தூர் சேலாண்டி', 'பண்டித நோதியாள் மேரு', 'மதிச்சியத்துலே', 'வண்ணான் வந்தானே' என்ற கூச்சல்களுக்கிடையே 'ஒன்ஸ்மோர்' என்று கரடிப்பிரகிருதி ஒன்று ஓயாமல் உறுமுகிறது. ஸ்ரீமதி குயிற்குரலி வெற்றிலைக்காவி மின்னும் மோகனப் புன்னகையுடன்,

மறுபடியும் சோலையின் காட்சியின் மாட்சியை சங்கீத ஆட்சியோடு விவரிக்கத் தொடங்குகிருள். வேதனை தாங்காமல், கொட்டகையைவிட்டு நழுவி விடுகிறேன்.

## II

மூங்கிற் பாய்க் கொட்டகை. வரிசை வரிசையாய்க் கொட்டகையை அலங்கரித்த சிறிய மடக்கு நாற்காலிகளில், ஒன்ரும் இரண்டாம் வகுப்புப் பெரியவர்கள், ஒற்றைக்காலில் உட்காரும் நவீன பகீரதயோகம் பயின்று கொண்டிருக்கிருர்கள். மூன்ரும் வகுப்பு ஏழைகளில் நான் ஒருவன். எங்களுக்கென்று பதின் மூன்ரும் பசலி விரிப்பு போடப்பட்டிருக்கிறது. வர்ணம் மங்கி, ஏகலை வன் நாய்போல் சல்லடைக் கண்ணுய்த் துளைக்கப்பட்டு, என் கடன் பணிசெய்து கிடப்பதே என்று தத்துவம் பேசித் துவண்டது அந்த விரிப்பு. ஆனல் இதையெல்லாம் கவனிக்க நேரமில்லை. சுருதியின் அலையொலி தூண்டவே, கொட்டகையின் மூங்கில் தூண்மேல் என் உடலைச் சார்த்திவிட்டு, காதில் வந்து அமர்ந்தது என் ஆத்மா. அன்று புல்லாங்குழல் கச்சேரி.

இதோ குழல் நாதம். அடேயப்பா, என்ன ஜிலு ஜிலுப்பு! அந்த தாரஸ்தாயி ஸட்ஜமத்தில் தான் எவ்வளவு நீளமான கார்வை! சுருதியைத்தான் எப்படி சிக்கெனப் பிடித்துத் தன்னை இழந்து விடுகிறது! கனவு உலகில் விரிந்த, பெயர் தெரியாத நாதக் கடல் ஒன்றை நோக்கிச் செல்லும் ஜீவநதிபோல் பொங்கும் அந்தக் கார்வை சரே லென விரிந்து ஸ்வரஜாலங்களாகத் துள்ளிப் பெருகு கிறது. "என்னராகமோ" என்று தயக்கத்துடன் கேட் கும் என் அறிவை ஒதுக்கித் தள்ளிவிட்டு, இசை வெள் ளத்தில் பாய்ந்துவிடுகிறேன். அவ்வளவுதான். மூங்கிற் பாய் கொட்டகையும், கோணல் தூண்களும், பணக்காரர் தலைப்பாகைகளும், ஜரிகை துப்பட்டாக்களும், அழுக்

கடைந்து மங்கிப்போன ஜமக்காளமும் மறைந்து விடுகின்றன. பழைய நினைவுகள்-எத்தனை ஜன்மங்களிலிருந்தோ-உருவில்லாமல் வந்து கவிகின்றன. புதிய ஆதர்சங்கள்-எந்தப் பிறப்பில் அவை முற்றுப்பெறுமோ-பனிப்படலத்தில் ஆடும் காலை ஒளியைப்போல் மங்கலாக மெல்ல அசைந்து எங்கேயோ அழைக்கின்றன. காதின் மூலமாகப் பெற்ற பிரகிருதி இசைகள்-காற்றின் சலசலப்பு, பிற்பகல் மோனத்தில் குயிலின் கானம், மரங்களின் முனகல், மகளிர் சிரிப்பு, குழந்தைகளின் குதூகலம்,-கண்கள் கண்ட பல காட்சிகள், பலவகை நறுமணங்கள், புலன்கள் வரித்த இன்பம், இவையெல்லாம் ஒன்ருக உதயமாகின்றன. உணர்ச்சிகள், மனநிலைகள், கணக்கில்லாமல் அடுக்கடுக்காய் ஒன்றையொன்று தழுவி, இது அது என்று பிரிக்க முடியாமல் ஒரே அனுபவமாகப் பின்னி என் இதய வெளியை நிறைக்கின்றன. இராகக் குழைவுகளும், சஞ்சாரக்கிரம வளைவுகளும், நடை வீச்சுக்களும் அமைத்த மேடையில் ஏறி பூரணத்வம் என்ற வானவளைவை ஜீவன் தொட்டுவிடுகிறது. மறுபடியும் அந்த மேடை சுருதியில் கரைந்து மறையும்போது மனித வாழ்க்கையின் அனுபவமெல்லாம் பெற்றுவிட்ட உணர்ச்சியுடன், கிழிந்த ஜமக்காளத்தில் கிடக்கும் இந்தப் பைத்தியக்கார உடலுக்கு என் ஆத்மா திரும்பிவிடுகிறது...

இது இரண்டாம் அனுபவம்.

## III

கச்சேரி முடிவடையும் தருணம். ஜனங்கள் இருந்த நிம்மதியில், கோயிலுக் கருகே புரண்ட கடலின் பிரணவ நாதம் தெளிவாகக் கேட்டது. அதன் சாயைபோல் தம்புராவின் 'ட்ருலும் தொம்' இழைந்தது. எதையோ எதிர்பார்ப்பதுபோல், பாடகர் பிடில்காரரைப் புன்னகையுடன் பார்த்தார். அர்த்தபாவத்துடன் பிடில்காரர் தலை யசைத்

தார். இதைக் கவனித்த மிருதங்க வித்வான் 'நீ நாம ரூப முலகு' என்ற மங்கள கீர்த்தனத்தை எதிர்பார்த்து, 'தீம்' என்ற ஒலி விரலால் சுருதியைத் தொட்டுப் பார்த்துக் கொண்டார்.

அதுவரையில், கற்சிலைபோல், தம்மை மறந்து இசையிலே ஈடுபட்டு வந்த கிழவர் ஒருவர் திடீரென்று தம் நினைவு பெற்றவர்போல் பேசினார் :

" இருந்தாலும், முருகன் பேரில் ஒரு தமிழ்ப் பாட்டு இல்லாமலா கச்சேரியை முடிக்கிறது ? "

'கூடாது' என்று கடல் குமுறியதும், 'தவறுதான்' என்று தம்புரா விம்மியதும் பாடகர் காதில் விழுந்திருக்க வேண்டும் ; ஏனென்றால், ஒருகண நேரத்திற்குத் தம்புராவின் கார்வையில் ஆழ்ந்து, பிறகு கடலையொத்த கம்பீரமான குரலில் பாடத் தொடங்கினார்:

**"வானத்தின் மீது மயிலாடக் கண்டேன்**
**மயில் குயிலாச்சுதடி."**

தெளிந்த தமிழ்ச் சொற்கள் ; தாரஸ்தாயி ஸட்ஜமும், மத்ய ஸ்தாயி காகலி நிஷாதமும் பின்னிய கமக ஊஞ்சலில் ஆடி, மத்ய ஸ்தாயி பஞ்சமப் பொய்கையில் துள்ளி விழுந்தன. என் மன உலகத்தில், எல்லையற்ற வான வெளி பரந்தது. அதன் நீலப் படலத்திலே, அந்தியும், வைகறையும், இந்திர தனுசும், சூரியனும், சந்திரனும், தாராகணங்களும் ஒன்றாக ஆடி, பிரும்மாண்டமான மயில் தோகையாய் விரிந்தன. மயிலின் அலகு அண்ட நிழற் பின்புறத்தில் உள்ள ஒளியை, அடிப்படையான சத்திய தத்துவத்தைத் தொட்டது. அந்தத் தத்துவம்தானே வார்த்தைக்கு அப்பாற்பட்ட இசை வடிவாய் எங்கும் நிறைந்தது. அண்ட நடனம் ஆடும் மயிலாகி, மயில் குயிலாகி, குயிலின் குரல் பிரணவ விந்நியாசமாகப் பரிணமித்துவிட்டது.

நான் என் நினைவு பெற்ற பொழுது, கச்சேரி முடி

வடைந்து ஜனத்திரள் கலைந்துகொண்டிருந்தது. கனவுக்கும் நனவுக்கும் இடையே உள்ள அற்புத நிலையில் நானும் வெளியே வந்தேன். பால்போன்ற நிலவு வெண் மணற் பரப்பின்மேல் தூங்கியது; தூங்காமல் நித்தியத்துவம் தேடி அலையும் ஞானியைப்போல், கடல் எதையோ தேடி, தரையைத் தொட்டு மயங்கியது. "வானத்தின் மீது..." என்ற சொற்களைத் தொட்டுத்தொட்டு என் நினைவு அலைபொங்கி எக்களித்தது.

## IV

கலை என்பது மனித அனுபவத்தின் பிரதிபிம்பம். இது சொற்களால் அமைந்தால் கவிதை; ஒலிகளால் அமைந்தால் இசை!* சொற்களும் ஒலிகளும் ஒன்றாகக் கலந்து அனுபவ வெளியீட்டுக் கருவிகளாக அமையும் போது இரண்டு கலைகளின் சம்மேளனத்தைப் பெறுகிறோம். சாதாரணமாக, இவ்விரண்டு கலைகளும் சம அளவில், அதனதன் தனிச் சக்தி குன்றாமல் கலப்பதில்லை. சிறந்த கவிதையோடு இசை கலக்கும்போது, கவிதை ஓங்கியும், இசை குறைந்துமே விவரிக்கின்றன. கம்பனுடைய பாட்டு ஒன்றை இசையோடு பொருத்திப் பாடும் போது, கவிதைக் கலையின் அழுத்தமும் போக்கும் இசைக் கலையை எவ்வாறு கட்டுப்படுத்துகின்றன என்பது தெளிவாகும்.

---

* சொல்லும் ஒலிதான்; வரிவடிவம் பிறகு அதற்கு அமைந்தது. ஒரு பொருளையோ, கருத்தையோ நேரடியாகக் குறிக்கும் சங்கேத ஒலியையோ, ஒலித்தொகுதியையோ சொல் என்கிறோம்.

ஒலிகள் என்ற சொல், இசையைப் பொருத்தமட்டில், ஸ்வரங்களையும், ஸ்வரத்தொகுதிகளையும், தாளவாத்ய தத்தகாரங்களையும் குறிக்கிறது. ஸ்வரம் கேவலம் ஒலி, காதிற்கு ரஞ்சகமாய் அமைந்தது. ஆனால் ஒரு ஸ்வரமோ, பல ஸ்வரங்களின் சேர்க்கையோ மனநிலைகளைப் பிரதிபலித்து, கேட்போர் மனத்தில் அந்நிலைகளைத் தோற்றுவிக்கும் சக்தி வாய்ந்தவை,

**"பொன்னின் ஒளி பூவின்வெறி சாந்து பொதிசீதம்**
**மின்னின் நிழலன்னவள்தன் மேனிஒளி மான**
**அன்னமும் அரம்பையரும் ஆரமுதும் நாண**
**மன்னவர் இருந்தமணி மண்டபம் அடைந்தாள்"**

என்ற பாடலை நாட்டை இராகத்தில் அமைப்பதாக வைத்துக்கொள்வோம். பாடலில் நான்கு அடிகள்; இந்த வரம்புக்குள்ளேதான் நாட்டை இராகம் சஞ்சரிக்கவேண்டும். பாட்டின் சொற்கள் பெரும்பாலும் கண்ட நடையில் செல்லுகின்றன.

**தீம் த கி ட தீம் த கி ட தீம் த கி ட தீம் த ,,**
**பொன் னி னொ ளி பூ வின் வெ றி சாந் து பொ தி சீ தம் ..**

சொற்களைச் சிதைக்காமல் பாடவேண்டுமானால் நாட்டை இராகமும் பெரும்பாலும் கண்ட நடையில்தான் செல்ல வேண்டும்.

**தீம் த கிட தீம் த கிட தீம் த கிட தீம் த ,,**
**பொன் னி னொளி பூ வின் வெறி சாந் து பொதி சீ தம் . .**
**ஸா ஸ நிப பா ப மக கா க மக கா ஸா.**

ஆகவே நாட்டை இராகத்தின் பல்வேறு நடைகளும் வண்ணங்களும் அவற்றின் மூலம் உணர்த்தக் கூடிய எத்தனையோ வகை பாவங்களும் நமக்கு கிடைக்காமல் போய் விடுகின்றன. கம்பனுடைய அருமையான கவிதைக்கு இசை கையாளாக நின்று உதவுகிறது. அவ்வளவுதான்.

ஏதாவது ஒரு இராகத்தைப்பற்றிச் சிந்தனை செய்து அதன் முழு வடிவையும் கருவியாகக் கொண்டு, அதன் மூலம் தன் அனுபவத்தை வெளியிடக் கலைஞன் முயன்றால், முயன்று வெற்றிபெற்றால், தனி இசை சிருஷ்டி ஒன்றை நாம் பெறுவோம். இதற்கு இசைய, சொற்களை அமைத்தால், இசையின் கட்டுப்பாடுகளும், அதன் தனிப் போக்கும், சொற்களின் சுதந்திரத்தைக் குறைத்துவிடக் காண்போம். இந்த நிலையில் இசை அமைப்புக்கேற்ற

சொற்களைத்தான் கையாள முடியும். கார்வை ஸ்வரங் களுக்கு நெடில்கள்; தாள ஆவர்த்த முடிவில் உயிர் மெய் நெடில் அல்லது 'ன்', 'ம்' போன்று கார்வை வாங் கக் கூடிய மெய்கள்; இசை நடைக்குத் தகுந்த வார்த் தைகள்; இராகத்திற்கோ சொற்கட்டிற்கோ ஏற்றபடி அடிவரும் மோனையும் எதுகையும்-இவ்வளவு கட்டுப் பாட்டுக்குள்ளே சொற்கள் இயங்கவேண்டும்; அதோடு இசை உணர்த்தும் பாவத்தைத் தழுவிய கருத்தமைந்த சொற்கள் வேண்டும். இப்படி வார்த்தைகளுக்கு விலங் கிட்ட பிறகு அவற்றிடம் உயர்ந்த கவிதையை எதிர்பார்க்க முடியாது. ஏதோ இசையின் சக்தியைக் குறைக்காமல், வார்த்தைகள் வாய்த்துவிட்டால், அதுவே பெரிய காரியம்.

இசையிலே முதலில் தன் அனுபவத்தைத் தேக்கிப் பிறகு இசைக்கும் அனுபவத்திற்கும் பொருத்தமான வார்த்தைகளைக் கலைஞன் தேடுகிறானா, அல்லது சிறந்த சொல் தொகுதியிலே தன் அனுபவத்தை அமைத்து அதன் பாவத்தைக் கூர்மையாக்க இசையைத் தேடுகிறானா என்பதுதான் கேள்வி. முன்னதைச் செய்பவன் சிறப் பாக இசைக் கலைஞன். பின்னதைச் செய்பவன் சிறப் பாகக் கவிஞன். இசையிலும் கவிதையிலும் ஒருங்கே பயிற்சியும் திறமையும் உடைய ஒரு சிலருக்கு, அவர்கள் வெளியிடும் அனுபவம் ஒரே காலத்தில் இசை வடிவாக வும், சொல் வடிவாகவும் அமையும். அந்த அபூர்வமான வாய்ப்பினால், சிறந்த நுணுக்கமான இசையும், சொல்லின் மந்திர சக்தி பூரணமாகப் பெற்ற கவிதையும் ஒன்றாகக் கலந்து இரு கலைகளின் அற்புத சம்மேளனம் கிட்டும். இதோ பாருங்கள், நந்தனார் சரித்திரக் கீர்த்தனையி லிருந்து ஒரு பாடல்:

**"கண்டா மணி ஆடுது**
**கண்டு பிணி வாடுது."**

கோயில் மணியின் ஓசை பக்தன் காதில் விழுகிறது. அப்போது அவனுக்குப் பிறவித் துன்பமே நீங்கிவிட்டது என்ற அனுபூதி ஏற்படுகிறது. இதுதான் பாட்டின்கருத்து. இக்கருத்து ஒவ்வொரு சொல்லுக்கும் உள்ள தொனிப் பொருளாலும் கேட்பவர் கற்பனையைத் தூண்டும் சக்தியாலும் அழுத்தம் பெறுகிறது. 'ஆடுது' என்ற சொல்லைப் பாருங்கள். மணியின் அசைவு மனக்கண்முன் தோன்றுகிறது. மணி ஒலி காதில் விழுவது போன்ற உணர்ச்சி நமக்கு ஏற்படுகின்றது. இதுபோலவே பிணி என்பது 'நோய்'; ஆனால் இங்கே 'பிறவி நோய்' என்ற தொனிப் பொருளில் பிணி என்ற சொல் ஆட்சி பெறுகிறது. சொற்களில் அதிகமாக வரும் ணகர ஒலியும், 'டாமணி' 'ஆடுது' என்ற 'தாதக' பிரயோகமும் மணி ஒலியையே பிரதிபலிக்கின்றன.

பாட்டு கானடா இராகத்தில் அமைந்திருக்கிறது. 'ரிபகா' என்ற கானடா சஞ்சாரம் முதல் அடியிலேயே பிரயோகமாகிறது. கானடா இராகத்தில் தொனிக்கும் தீர்மானமும், கனிவும் பாட்டின் சொற்களுக்கு அழுத்தம் தருகின்றன. இறைவன் அருள் கிடைத்துவிட்டது என்ற நம்பிக்கை-இது வார்த்தைகளிலேயே இருக்கின்றது-இதையும், வார்த்தைகளில் இல்லாத "நமக்குக் கூடவா இந்தப் பேறு?" என்ற உருக்கத்தையும் பாட்டில் அமைந்துள்ள கானடா இராக சஞ்சாரம் வடிவாக்குகிறது.

அருமையான பாடல், கவிதைப் பண்பும், பாவமும், நிறைந்த தமிழ், தமிழ் நாட்டிலே தலைமுறை தலைமுறையாக வளர்ந்துவந்த இசைக் கலையின் மேன்மையும் நுட்பமும் வாய்ந்த இசை, இவை இரண்டும் ஒன்றாகச் சேர்ந்து சமைத்த கலைக்கலவையே இந்தப்பாடல். இது கிடைத்தால் தமிழ்ச் சொற்களின் மூலமாக இசையின் அகண்டத்தையும், இசையின் மூலமாகச் சொற்களின் விஸ்தாரத்தையும்

அளந்து, இரண்டின் மூலமாகவும் கலைஞன் பெற்ற அனுபவத்தை நாமும் பெற்றுவிடலாம்.

இதற்குச் சாட்சி தொடக்கத்திலே நான் குறித்துள்ள என் மூன்றும் அனுபவம். சொற்களே இல்லாமல் இசைக் கலை தனியாக இயங்கி, அனுபவத்தின் பிரதிபிம்பமாக அமைந்து கலைஞன் மனநிலையில் நமக்குப் பங்குதரக் கூடும் என்பதற்கு என் இரண்டாம் அனுபவமே அத் தாட்சி. சாகித்தியம் எனக்குப் புரியாத பாஷையில் இருக்கும்போது இசை உயர்ந்ததாய் இருந்தால் எனக்குக் கிடைக்கும் அனுபவம் இத்தகையதுதான். என் முதல் அனுபவமோ, அதைப்பற்றிப் பேசுவானேன்? என் காதில் விழுந்தது தமிழ், உண்மைதான்; ஆனல் கலைத் தமிழில்லை. "காட்சி கண் காட்சியே......" இத்யாதிச் சொற்களைத் தமிழ் அகராதியில் காணலாம். இந்த ஒரு காரணத்தினுல் ஸ்ரீமதி குயிற்குரலி பாடியது தமிழ் என்று சொல்லலாம். அவ்வளவுதான். பாடியது என்று சொன்னேன்? அப்படித்தான் பலர் நினைத்தார்கள். ஆனல் அவள் பாடவில்லை; கூச்சலிட்டாள். அந்தப் பாட்டில்-அட, கடவுளே அது பாட்டா?-தமிழும் இல்லை, இசையும் இல்லை; ஆகவே அனுபவத்தின் பிரதிபிம்பமாக, சொல்லும் ஒலியும் அமையவில்லை; அங்கே கலையுமில்லை, இரு கலைகளின் சம்மேளனமும் இல்லை.. அதைப்பற்றிப் பேசுவானேன்?

## 13

# குயிலும் தாமரையும்

"செந்தாமரை வேண்டுமே!" என்று அந்த இளைஞன் முனகினான்.

பக்கத்திலே இருந்த மாமரக் கிளையில் அமர்ந்து செந் தளிர் கோதிக்கொண்டிருந்த இளங்குயில் தலையை நிமிர்த்தி, செறிந்த இலைகளினூடே அவனை வியப்புடன் நோக்கியது.

"செந்தாமரை யல்லவா வேண்டும்! இங்கே இந்த வட்டாரத்திலே ஒரு செந்தாமரைப் பூ கூட அகப்பட வில்லையே! என்ன செய்வது? செந்தாமரைப் பூ வந்தால் தான் என்னோடு பேசுவாளாம்! மனிதனுடைய சுகம் எவ்வளவு அற்பமான பொருள்களைச் சார்ந்து நிற்கிறது! எத்தனையோ அறிஞர்கள் எழுதிய நூல்கள், ஆயிரக் கணக்கான தத்துவ விசாரணைகள், இவைகளை எல்லாம் கரைத்துக் குடித்துவிட்டேன். என்றாலும் ஒரு செந்தா மரைப்பூ இல்லாத குறை என் வாழ்வையே சூனியமாக்கி விடும்போல் இருக்கிறதே" என்று கண்ணிலே சோகம் ததும்ப அந்த இளைஞன் பேசினான்.

இது குயிலின் காதில் விழுந்தது. "அடடா, இதோ இருக்கிறானே உண்மையான காதலன்! நானும் நாள் தவறாமல் காதலைப் பற்றிப் பாடிவந்திருக்கிறேன். ஓடைக் கும், சோலைக்கும், வெயிலுக்கும் எத்தனை தடவை இவன் யார் என்று தெரியாமலேயே இவனைப்பற்றிப் பேசி வந்திருக்கிறேன்! நான் சொல்வதைக் கேளாமல் திரியும் இந்த வண்டினிடம் எத்தனை தடவை இவனைப் பற்றிப் பாடியிருக்கிறேன்! இவன்தானா என் பாட்டுடைத் தலைவன்? இந்திர நீலமொத்த இருண்ட குஞ்சி, ஒளிவீசும் சுந்தர முகம், ஆம், அவன் விரும்பும் செந்தாமரை

இதழை ஒத்த செவ்விதழ். ஆனால் மனத்திலே உள்ள தாபத்தினால் முகத்தின் சோபை மங்கிவிட்டது; அழகிய விசாலமான நெற்றியில் துன்பமல்லவா தன் முத்திரையைப் பதித்துவிட்டது!'' என்று எண்ணமிட்டது சோலைக் குயில்.

"நாளைக் காலை தாமரைப் பூவுடன் அவளைப் பார்க்க வேண்டும். அதை மறக்கவும் முடியவில்லையே! அவளை மறப்பதா? செந்தாமரை மட்டும் கிடைத்துவிட்டாலோ? அவள் முகம் மலரும்; என் உள்ளமும் குளிரும். செந்தாமரையா என்று ஆவல் குழையும் வியப்புடன் நான் கொண்டு செல்லும் பூவை மலர விழித்து நோக்குவாள்; கடலினும் பெரிய அந்த விழிச் சுழலில் விழுந்து இன்பத்தின் எல்லை காண்பேன். பூவை ஏற்றுக்கொள்வாள்; இன்ப நாட்டின் முடியரசு எனக்குக் கிடைத்துவிடும். ஆனால் செந்தாமரை கிடைக்கவில்லையே, என்ன செய்வேன்? என் நெஞ்சு வெடித்துவிடும்போலிருக்கிறதே!'' என்று அரற்றினான் அந்த இளைஞன்.

"இவனே உண்மையான காதலன்'' என்று சொல்லிக்கொண்டது குயில். "நான் பாடும் பாட்டே இவனுடைய அனுபவம். என்னுடைய இசைக்களிப்பே இவன் காதற் சோகம். காதல் என்பது உண்மையிலே அதிசயமான பொருள்தான். முத்தும், பவளமும், கனக மணியும் கொண்டு சந்தைக் கடையிலே காதலை விலைக்கு வாங்கவா முடியும்? எடைக்கு எடை பொன் தருவதாகச் சொல்லி, தராசிலே அதை நிறைபோட முடியுமா? அன்பு என்பது அங்காடிப் பண்டமா?'' என்று அந்தக் குயிலின் சிந்தனை ஓடியது.

"நாளைக்குத் தைப்பூசம். ஆற்றங்கரை மணற்பரப்பிலே நிலவின் மந்திரத்தில் கட்டுண்டு, எல்லோரும் இன்பவெறி கொள்ளுவார்கள். அவளும் போவாள். அவள் மெல்லிய தாமரைப்பாதம் தவிட்டு மணலில் அழுந்து

வதை, அதைக் காணச் சகியாமல் அவள் காற்சிலம்பு புலம்புவதை, நான் அனுபவிக்கமுடியாதே! தூரத்தி லிருந்து நாதஸ்வரம் நிலவைப் பிழிந்து இசையாக்கும். ஆற்றங்கரை அரசமரம் இதைக் கேட்டு மெய்சிலிர்க்கும். நிலவொளி தேங்கும் அவள் விழிகளில் காதல் படரும். எத்தனையோ பேர் சுற்றிலும் இருப்பார்கள். இருந்தும் என்ன? காதற் சக்கரத்தின் மந்திர வட்டத்திற்குள் நாங் கள் தனித்து நிற்போம். இரண்டு உள்ளங்கள் ஒன்ற கும் விந்தையை நீலவானம் கண்டு அதிசயித்து நிர்மல மாகும்... ஆனல் இதெல்லாம் செந்தாமரை கிடைத்தால் அல்லவா?'' என்று காதலன் புலம்பினன்.

''இவன் ஏன் வருந்துகிருன்?'' என்று பச்சைப் புல்லுக்கும் மஞ்சள் வெயிலுக்கும் இடையே நின்று தலை யைத் தூக்கிய பச்சோந்தி கேட்டது. பிறகு பச்சைக்குள் மறைந்தது.

''ஏனே?'' என்று முரன்றது, வெயிலின் பொன் இழையைத் தொடர்ந்து சென்ற வண்ணத் தும்பி.

''ஏன்?'' என்று மெல்லிய குரலில் சண்பகப்பூ மாந் தளிரைக் கேட்டது.

''ஏனு? செந்தாமரை வேண்டுமாம்'' என்றது குயில்.

''செந்தாமரையா? நல்ல வேடிக்கை'' என்று புதருக் குள்ளிருந்து நகைத்தது பச்சோந்தி. பச்சோந்தியே இப் படித்தான்; கொஞ்சம் கசப்பாகத்தான் பேசும்.

குயில் இதைக் காதில் வாங்கவில்லை. காதலனுடைய துயரத்தின் இரகசியம் அதற்குத் தெளிவாகத் தெரியும். மாமரத்தில் மௌனமாய் அமர்ந்து, காதலின் மருமத்தைப் பற்றி எண்ணமிட்டுக் கொண்டிருந்தது.

ஏதோ முடிவிற்கு வந்ததுபோல் சரேலென்று சிறை விரித்து, சோலையில் படர்ந்த அந்தி இருளில் நிழலென மிதந்து பொய்கைக் கரையை அடைந்தது.

பொய்கையிலே இருந்த தாமரை மலர்கள் இதழ் கூப்பிக் கொண்டிருந்தன.

"தாமரைக் குளமே, தாமரைக் குளமே! எனக்கு ஒரு செந்தாமரைப் பூ தருவாயா? தந்தால் நாளை பொழுது புலரும்போது தாமரைச் சிறுமியருக்குத் திருப்பள்ளி யெழுச்சி பாடுவேன்" என்றது குயில்.

பொய்கைக்குத் தூக்கக் கலக்கம். "நான் என்ன செய்வேன், குயிலி அக்கா. என் குழந்தைகள் எல்லோரும் வெண்தாமரைகள். நானே சொல்லிக்கொள்ளக் கூடாது. இருந்தாலும் எவ்வளவு அழகாய் இருக்கின்றன பார்த்தாயா? கடல் நுரையும், கயிலைப் பனியும் தோற்று விடுமடி, அவ்வளவு வெண்மையாய் இருக்கின்றன. ஞானியர் உள்ளம் இப்படித்தானடி இருக்கும்! செந்தாமரையா? இரு. என் அக்காளை, மையமலைச் சாரல் மடுவைப் போய்க் கேட்டுப்பார், இல்லை என்று சொல்லமாட்டாள்" என்று பேசிக்கொண்டே பனிப் போர்வையை இழுத்துப் போர்த்திக்கொண்டு வெண்தாமரைகளை அணைத்தபடி, பொய்கை தூக்கத்தில் ஆழ்ந்துவிட்டது.

மையமலைச் சாரலுக்கு விரைந்தது குயில்.

"அடியம்மா, இந்த நேரத்தில் வந்தாயே" என்றது மையமலைச் சுனை.

"செந்தாமரைப் பூ ஒன்று வேண்டும். அதற்காக வந்தேன், இருந்தால் கொடு. காலையிலே நீ அலை துள்ளி எக்களிப்பில் ஆழ்ந்தும்படி ஒரு பாட்டுப் பாடுவேன்" என்றது குயில்.

சுனையின் முகத்திலே முறுவல் அரும்பியது.

"உன் பாட்டுக்கு என்னால் வெகுமதி தரமுடியுமா? உனக்கில்லாத செந்தாமரையா? ஆனால் என்னிடம் இல்லையே. நீலோற்பலம் வேண்டுமானால் கேள். இதோ இருக்கின்றன. இந்த நிலவிலே கண்விழித்து இரவு முழுதும் தூங்காமல் என்னைப் பாடாய்ப் படுத்தும்

நீல அற்புதங்களடி! யாரோ ஊர்வசியாம், மேனகையாம், யாருக்குத்தான் இவ்வளவு அழகான கண்கள் உண்டு? வான நீலந்தான் என்னுள்ளே புகுந்து நீலோற்பலங்களாய் மலர்ந்திருக்கவேண்டும்.''

"ஆமாம். ஆமாம். ஆனால் செந்தாமரை யல்லவா..." என்று குயில் இழுத்தது. சுனை வருத்தத்துடன் தலை அசைத்தது. "செந்தாமரை என்னிடம் இல்லை. அரண்மனைத் தோட்டத்தருகில் தாமரைக்குளம் உண்டே, அங்கே கேட்டுப் பார்த்தாயா?''

சுனை பேசி முடிக்குமுன் குயில் பறந்து சென்றது. 'பக்கத்திலே இருக்கும் குளத்தைக் கவனியாமல் அலைந்து விட்டேனே' என்று எண்ணமிட்டுக் கொண்டே விரைந்தது. எங்கிருந்து முதலில் புறப்பட்டதோ அந்த மாமரத்தருகே குயில் வந்து சேர்ந்தது. பக்கத்தில் இளைஞன் வீடு. அதற்கப்பால் கோயிற்குளம். குளத்தங்கரையைக் குயில் அடைந்ததும் குளத்தின் நீர்ப் பரப்பிலே மிதந்த நிலவு, தாமரை மலர் ஒன்றுகூட இல்லை என்பதைத் தெளிவாகக் காட்டியது. குயிலுக்குத் தாங்கொணாத வருத்தம். குளத்திற்கும் மிகுந்த வேதனைதான்.

தாமரைக்குளம் பேசியது: "என்ன செய்வேனடி? என் தாமரை எல்லாம் செந்தாமரைதான். புறாவின் காலைவிடச் சிவந்தவை. கடல் இதயத்துள்ளே ஊசலாடும் பவளக்கொடியும் ஐப்பசிச் செவ்வானமும் அவைக்கு ஈடாகா. ஆனால் இப்போது ஒன்றுகூட இல்லையே. ஆடி மாசம் வெள்ளம் வந்ததே, அப்போது ஒரேயடியாக மணல் அடித்து, தாமரைக்கொடிகளைச் சிதைத்துவிட்டது. மணல் எடுக்கிறேன் என்று சொல்லிக்கொண்டு தாமரைக் கொடிகளையும் கிழங்குகளையும் அரண்மனை சர்வாதிகாரி வாரி எறிந்து விட்டான். இனிமேல் என் செல்வத் தாமரை மலருமா என்று ஏங்குகிறேன். மலட்டுக்குளமாய் எப்படி இருப்பேனடி?''

"ஒரே ஒரு செந்தாமரை வேண்டும், இதற்கு வழி ஒன்றும் இல்லையா ?" என்று பதறியது குயில்.

"ஒரு வழி உண்டு. ஆனால் சொல்லவே கூசுகிறது. அவ்வளவு பயங்கரமானது."

"சொல், நான் பயப்பட மாட்டேன்."

தணிந்த குரலில் குளம் பேசியது : "உனக்கு இன்றிரவே செந்தாமரை வேண்டுமானால், உன் இசையினாலேயே ஒரு மலர் அமைத்து, அதற்கு உன் நெஞ்சிலே வடியும் இரத்தத்தைக் கொண்டு செவ்வண்ணம் ஊட்ட வேண்டும். இதோ இந்தக் கருவேல மரத்தின் நீண்ட முள்ளிலே சாய்ந்து நீ பாட வேண்டும். ஆம், இரவு முழுதும் பாடவேண்டும். முள் உன் நெஞ்சிற் பாயவேண்டும், உன் உதிரம் கீழே விழுந்து என் நாடிகளில் ஓடவேண்டும்."

குயில் நிமிர்ந்து கருவேல மரத்தைப் பார்த்தது. கரை ஓரத்தில், தண்ணீரின்மேல் தன் முறுக்கிய எலும்புக் கைகளை நீட்டி, முள் மயமாய் அந்தக் கருவேல மரம் நின்றது. என்ன கோரமான முட்கள், எவ்வளவு நீளம்! தன்னை அறியாமல் குயில் நடுங்கியது. அடுத்த கணம் உறுதியுடன் பேசியது.

"ஒரு செந்தாமரைப் பூவுக்கு என் உயிரையா விலையாகத் தரவேண்டும்? உயிரைவிட யாருக்குத் தான் மனம் வரும்? செம்பொன் ரதத்தில் சூரியன் பவனி வருவதையும், முத்துப் பல்லக்கில் சந்திரன் அசைந்து செல்வதையும் பார்த்துக் கொண்டு, தென்றலின் குரலே சுருதியாய் இசை உதிர்த்து, இந்த மாஞ்சோலைப் பசுமைக்குள் வாழ்வதில் எவ்வளவு இனிமை இருக்கிறது, சொல்லவா முடியும் ? சண்பகப் பூ 'வா' என்று அழைக்கிறது ; நெருஞ்சி மலர்கள் மரகதப் புல்லிடையே கண் சிமிட்டுகின்றன ; மலைச்சாரலின் ஏகாந்தத்தில் காட்டு மல்லிகை மரம் மலர் மழை பொழிகிறது. இதையெல்லாம் இழப்பதா ? ஆனால்

காதல் உயிரினும் உயர்ந்தது, சந்தேகமில்லை. ஒரு மனித இதயம் மகிழ்வதற்காக அற்பப் பறவை தன்னையே தரக் கூடாதா?''

இந்த முடிவுக்கு வந்ததும் குயிலுக்கு எல்லையற்ற மனநிறைவு உண்டாயிற்று. குதூகலத்துடன் சிறை விரித்து, மாமரத்தை நோக்கி நிழல்போல் மிதந்து சென்றது.

மாமரத்தின் அடியிலே அந்த இளைஞன் சோகச் சிற்பமாய்ச் சமைந்திருந்தான்.

"கவலைப் படாதே, அப்பா" என்றது குயில். "உன் தேவையை ஈடு செய்கிறேன. இசையால் மலர் செய்து, என் உதிரத்தால் அதைச் செந்தாமரை யாக்குகிறேன். உன்னிடம் நான் எதிர்பார்க்கும் சுகம்மாறு ஒன்றே ஒன்று தான். நீ மாத்திரம் உண்மையான காதலனு யிருக்கவேண்டும், தெரிந்ததா? காதல் தெய்வம் தத்துவ தேவதையை விட ஞானத்தில் சிறந்தவள்; சக்தி தேவியைவிட வல்லமை வாய்ந்தவள். அவளைப் பாரடா, ஒளிப் பிழம்பைப் போன்ற மேனி, தேனிதழ், கற்பக மணம் தவழும் மூச்சு.''

இளைஞன் தலையைத் தூக்கிக் குயிலைப் பார்த்தான். குயிலின் பேச்சு அவனுக்கு விளங்கவில்லை. எப்படி விளங்கும்? பழஞ்சுவடிகளில் உள்ள எழுத்துப் புழு என்றால், சூத்திரம் என்றால், காரிகையோ விருத்தி உரையோ என்றால் ஏதோ தெரியும். குயிலின் பாஷையை அவன் கண்டானு?

மாமரத்திற்கு மட்டும் குயிலின் பேச்சு விளங்கி விட்டது.

"அடி பாதகி, என்னை விட்டுப் போகிருயா?" என்று வருத்தத்துடன் கேட்டது. குயிலின் விழிகளில் பிரதிபலித்த திடசித்தத்தைக் கண்டதும் மாமரத்திற்கு மன முருகிவிட்டது. துக்கம் அடைத்த மெல்லிய குரலில்,

"அடி சின்னக் குயிலி, கடைசி முறையாக ஒரு பாட்டை யாவது எனக்குப் பாடிவிட்டுப் போ" என்றது.

குயில் பாடியது. சல சலவெனப் பாயும் சிற்றோடை யைப் போல் அந்த இசை பெருகியது. சோலை மரங்கள் கேட்டு அசைவற்று நின்றன.

இளைஞன் எழுந்து உட்கார்ந்தான். ஒரு சிறு குறிப் புப் புத்தகத்தையும், பென்சிலையும் வெளியே எடுத்தான். ஏதேதோ குறித்துக் கொண்டான். "பாட்டு பாதக மில்லை. குயில் நன்றாகத்தான் பாடுகிறது. நல்ல சாரீரம். ஆனால் இன்னும் ஸாதகம் செய்ய வேண்டும். காகலி கைசிக நிஷாதங்களை, என்னதான் கமகரக்தி ஏற்பட்டா லும், இப்படிக் கலக்கலாமா என்று ராகபிரளயாந்தகார வஜ்ரதீபிகையைப் புரட்டிப் பார்க்கவேண்டும். இந்தக் குயிலின் பாட்டில் பாணி இருக்கிறது. பாணி மட்டும் போதுமா? பாவம் வேண்டுமே. அதற்கு ஸாகித்யம் வேண் டாமா? குயிலின் பாட்டு ஏன் பாஷையில் அமையவில்லை? வெறுமனே காதுக்கு மட்டும் இனிமையாய் இருந்தால் போதுமா? ஒலிகள் இதயத்தைத் தொட முடியுமா?" என்று எண்ணமிட்டான்.

குயில் பாடிக் கொண்டிருந்தது. இளைஞனுடைய சிந்தனை மறுபடியும் ஆராய்ச்சிப் புழுதியை எழுப்பியது: "இந்தப் பாட்டிலே வடிவம் இருக்கிறது. அதை மறுக்க முடியாது. ஆனால் பாவம் இருக்கிறதா? அனேகமாகக் கலைஞர்கள் எல்லோருமே இப்படித்தான். கலையைப் பற் றியே எண்ணமிட்டு, அதன் நுணுக்கங்களில் அழுந்தி, முக்கியமானதை மறந்து விடுகிறார்கள்."

"கலையே ஒரு கருவிதானே; இதை மறந்தால் சுயநலம் தான் மிஞ்சும். கிலுகிலுப்பையை ஆட்டி மகிழும் குழந் தையைப் போல் இருக்கிறார்களே யல்லாமல் மனிதர்க ளுடைய இன்ப துன்பங்களைப் பற்றி இந்தக் கலைஞர்கள் ஏதாவது கவலைப் படுகிறார்களா? கலை என்றால் உலகத்

திற்கு நேரடியாக நன்மை பயக்க வேண்டாமா?'' என்று எண்ணமிட்டுக்கொண்டே வீட்டிற்குள் சென்றான். படுக்கையை விரித்துப் படுத்தான். தன் காதலியையும் செந்தாமரையையும்பற்றி நினைத்து நாலைந்துதரம் பெருமூச்சு விட்டான். பிறகு, படுக்கையின் பயனை நேர்முகமாகப் பெறவேண்டும் என்று கருதியோ என்னவோ தூங்கிவிட்டான்.

குயிலுக்கு இதெல்லாம் தெரியாது. பாட்டு முடிந்ததும் சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தது, பாட்டின் உருக்கத்தில் நினைவிழந்து நின்ற மாமரம், தன் நினைவு பெற்றுப் பெருமூச்சு விட்டது குயிலின் காதில் விழவில்லை. தாமரை யில்லாத தாமரைக் குளத்தின் மேலே முட்களை நீட்டி நின்ற கருவேல மரத்திற்கு நிழல் போல் பறந்து சென்று, அதன் எலும்புக் கையில் குயில் உட்கார்ந்தது. பிறகு நீண்ட கருவேல முள்ளொன்றின் மேல் சாய்ந்தபடியே, பாட ஆரம்பித்தது.

அந்தப் பாட்டின் அற்புதத்தைப் பருக எண்ணி, காற்று அசைவற்று நின்றது. வானத்திலிருந்து சந்திரன் இறங்கி வந்து கருவேல மரத்தின் உச்சியிலிருந்த கிளை ஊஞ்சலில் சாய்ந்து கொண்டான்.

குயில் பாடியது. பாடப் பாட, கருவேல முள் அதன் உடம்பில் நுழைந்தது. மணல் மூடி மலடாய்ப்போன தாமரைக் குளத்தின் நெஞ்சில் சிருஷ்டி-அனல் மூண்டது.

குயில் பாடியது. முதன்முதலில் அதன் பாட்டு ஒரு சிறுவன், ஒரு சிறுமி, இவர்கள் இதயத்தில் ஊறும் பரிசுத்தமான அன்பைப்பற்றிப் பேசியது. பாடப்பாட, குளத்தின்மேல் படர்ந்த நிலவுதான் ஒன்றாகத் திரண்டதோ, அல்லது நிலவொடு கலந்த வெண்பனிப்படலந்தான் இறுகி வடிவாகியதோ, கருவேல மரக்கிளையின் அடியிலே, அதன் நிழலை ஏந்தி அசைவற்று நிற்கும் தண்ணீரின்மேல், இதழ் இதழாய் அற்புதமான வெண்தாமரை

ஒன்று எழுந்தது. நிலவோடு நிலவாய், பனியோடு பனியாய், கரந்துநின்ற அந்த மாயமலர், குயிலின் பாட்டு ஓங்க ஓங்கத் தெளிந்து வடிவாகி மலர்ந்தது.

கருவேல மரம் குயிலின் காதில் பேசியது: "சின்னக் குயிலீ, இன்னும் நன்றாக என்மேல் சாய்ந்துகொள். இல்லாவிட்டால் செந்தாமரை சிருஷ்டி யாவதற்குள், இரவு முடிந்துவிடும்."

குயில் மரத்தை இன்னும் இறுகத் தழுவிக்கொண்டது. முள்ளோ நெஞ்சின் அருகிலே துழவியது. நாத வெள்ளமாய்ப் புரண்டு குயிலின் பாட்டு எங்கும் நிறைந்தது. யௌவனப் பருவத்தின் புலன் வெறி படிந்து வீசும் காதற் புயலின் வேகத்தை எல்லாம் குயிலின் இசை இப்போது தன்னுள் தேக்கிவிட்டது.

கீழே, தாமரை இதழ்களில், செவ்வரி படர்ந்தது. மணாளனைத் தனியே கண்டதும், மணப் பெண்ணின் முகத்திலே பாயும் சிவப்பைப்போல், ஒரு செவ்வொளி, தாமரையின் மேனியில் படிந்தது. என்றாலும், இன்னும் தாமரையின் இதயத்திலே சிவப்பு ஊறவில்லை. அது செந்தாமரையாகவில்லை; குயிலின் நெஞ்சிலிருந்து வடியும் இரத்தமல்லவா அந்தச் சிவப்பை அளிக்க முடியும்!

இன்னும் இறுகத் தன்னை அணைத்துக்கொள்ளும்படி கருவேலமரம் பேசியது: "சின்னக் குயிலீ, இன்னும், இன்னும் நன்றாக என்மேல் சாய்ந்துகொள். இரவு முடிவதற்குள் செந்தாமரை சிருஷ்டியாக வேண்டுமே" என்றது.

மரத்தை இன்னும் இறுகத் தழுவியது குயில். உள்ளே சென்று துழாவிய கருவேலமுள் குயிலின் இதயத்தைத் தொட்டு நின்றது. குயிலின் தேகம் முழுதும் வேதனையின் துடிப்புப் பாய்ந்தது. இவ்வேதனை குயிலின் பாட்டிலே கலந்ததும், சாவோடு தணிந்து மடியாத அமரக்காதலை, சாவினாலேயே பூரணத்துவம் பெறும்

அன்பை அந்தப் பாட்டின் புலம்பல் எட்டிப் பிடித்தது. குயிலின் இரத்தம் ஒரு சொட்டு தாமரையின் மேல் விழுந்தது. உடனே உஷையின் ஒளி முத்திரையைப்போல் தாமரையின் இதயம் சிவந்தது. ஆனால், குயிலின் குரல் மங்கியது; அதன் உடல் துவண்டது; அதன் சிறு விழி களில் இருள் விழுந்தது. நெஞ்சை ஏதோ அடைக்கிறது என்று கண்டதும் கடைசி முறையாக இசைச் சுழல் ஒன்றை வீசி எறிந்துவிட்டுக் குயில் தலைசாய்த்தது.

இசை மந்திரத்தில் கட்டுண்டு, வைகறை வந்ததைக் கூட மறந்து, சந்திரன் வெளிறிய முகத்துடன் வான வீதியில் தயங்கி நின்றான். செந்தாமரை உடல் சிலிர்த்து, காலைக் காற்றை இதழால் வருடியது. அந்தப் பாட்டின் வேகம், எதிரொலியின்மேல் ஆரோகணித்து, ஆற்றங் கரை நாணற் காடும், மையமலைச் சுனையும் கடந்து, மலை வெளி எங்கும் பரந்து, கடலோடு கலந்து பிரபஞ்சம் முழுதும் நிறைந்தது.

"அடி சின்னக் குயிலி, இங்கே பார். செந்தாமரை சிருஷ்டியாகிவிட்டது" என்று களிப்புடன் கூவியது கருவேல மரம்.

"ஆமடி, என்ன அற்புதமான மலர்!" என்று பெரு மையுடன் புன்னகை பூத்தது தாமரைக் குளம். குயிலின் காதில் இது விழவில்லை. குளத்தங்கரைப் புல் படுக்கை யில், தன் நெஞ்சில் பாய்ந்த கருவேல முள்ளோடு அந்தக் குயில் கிடந்தது. அதன் சிறகு அசையவில்லை; அதன் விழியில் ஒளியில்லை; அதன் நெஞ்சு துடித்துத் துடித்து இசையாகப் பெருகவில்லை; செந்தாமரையை சிருஷ்டி செய்யத் தன்னையே அந்தச் சிறு குயில் தந்துவிட்டது.

காலையில் தாமரைக் குளத்தருகில் வந்த இளைஞன் செந்தாமரையைக் கண்டு, "அடேடே, இதோ ஒரு செந் தாமரை பூத்துவிட்டதே. என்ன ஆச்சரியமான சிவப்பு! இவ்வளவு சிவந்த தாமரையை இதுவரை கண்டதில்லை.

இதற்கு ஏதாவது தனியாகப் பெயருண்டா என்று அகராதியைப் புரட்டிப் பார்க்கவேண்டும்" என்று தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டான். அலட்சியமாகக் கையை நீட்டி அதைப் பறித்துக்கொண்டு காதலியைத் தேடிச் சென்றான். அந்தக் குயில் மட்டும் குளத்தருகில் கிடந்தது.

அவன் காதலி, முகத்தைக் கோணிக் கொண்டு அவனை வரவேற்றாள்.

"இங்கே பார். செந்தாமரை கொண்டுவந்தால் இன்று தைப்பூசத் திருநாளுக்கு என்னுடன் வருவதாகச் சொன்னாயே. இதோ செந்தாமரை. என்ன சொல்லுகிறாய்?" என்று கேட்டான் இளைஞன்.

"செந்தாமரை கொண்டு வந்துவிட்டாயா? சரி. போயும் போயும் அகப்பட்டதே. நல்ல வேடிக்கை" என்று அவள் முகத்தைத் திருப்பிக்கொண்டாள்.

"செந்தாமரை வந்தால்தான் என்னுடன் பேசுவேன் என்று சொன்னாயே?"

"சொன்னேன், சுரைக்காய்க்கு உப்பில்லை என்று. உன் மாதிரி பைத்தியத்தைப் பார்த்ததே இல்லை. இன்று சிவப்புக் காசிப் பட்டுப்புடவை கட்டிக்கொள்ளப் போகிறேன். தலையில் செந்தாமரை வைத்துக்கொண்டால் நன்றாய்த்தானிருக்கும்! உனக்கு ஏதாவது தெரிந்தால் தானே."

"அப்படி என்றால் வேறு ஏதாவது பூ..."

"நீ ஒன்றும் கொண்டுவர வேண்டாம். ஓடிப்போய்க் கள்ளிப் பூவைப் பறித்துக்கொண்டு வந்து நிற்பாய். நானும் அரண்மனை சர்வாதிகாரியின் மகனும் இன்று மையமலை அருவிக்குப் போகப் போகிறோம். அரண்மனைப் பெட்டி வண்டியில் போவோம். அப்பாவும் வருகிறார். உன் செந்தாமரையை எடுத்துக்கொண்டு நீ வேண்டுமானால் தைப்பூசம் பார்க்க ஆற்றங்கரைக்குப் போய்..."

இளைஞனுக்குக் கோபம் வந்துவிட்டது. செந்தாமரையை வீசி எறிந்தான்.

"நீ நன்றிகெட்டவள், உணர்ச்சியில்லாத பொம்மை, உன்னுடைய அன்பு இவ்வளவுதானு?" என்று கசப்புடன் இரைந்தான்.

"நன்றிகெட்டவளா? அன்பா? என்ன பேசுகிறோம் என்று தெரியாமல் உளருதே. யாரிடம் யாருக்கு அன்பு? அகராதியைப் புரட்டிக்கொண்டு ஆந்தைபோல் விழிக்கும் உன்னிடம் அன்பு வேறு? அன்பாம் அன்பு. ஏதோ அசடு, கொஞ்சம் உற்சாகப்படுத்துவோம் என்று பிரியமாக இரண்டு வார்த்தை பேசினுல், அன்பாம்! செந்தாமரை கொண்டுவந்து விட்டாளும். உலகத்திலே உள்ள செந்தாமரையை எல்லாம் விலைக்கு வாங்க அவரிடம் பணம் இருக்கிறது. உன் தயவு வேண்டாம். உன் செந்தாமரையைக் கட்டிக்கொண்டு நீயே அழு. நீயோ, உன் பூவோ?" என்ருள்.

இளைஞன் வெளியேறினுன். போகும் வழியிலே கிடந்த தாமரைப் பூவைக் காலால் மிதித்துக் கொண்டு "காதலாவது, மண்ணுவது. காதலென்பது வீண் பிரமை. அதனுல் ஒரு பயனுமில்லை. இந்தச் செந்தாமரைப் பூவைப் போலத்தான்" என்ருன். அதை எடுத்து எரிச்சலுடன் வீசிவிட்டு, செல்லரித்த ஏட்டைப் புரட்டப் போனுன்.

வதங்கிய தாமரை உயிரற்றுக் கிடக்கும் குயிலருகே விழுந்தது. இதைப் பார்த்து நின்ற மாமரம் கண்ணீர் விடமுடியாமல் பெருமூச்செறிந்தது. கருவேலமரம் தன் கிழட்டு உடல்குன்ற வெறித்துப் பார்த்தது. வெறி பிடித்து எங்கும் அலைந்தது காற்று. தாமரைக் குளமோ மெல்ல அலைக் கைகளை நீட்டி, தாமரைப் பூவையும் குயிலையும் தன்னேடு அணைத்துக் கொண்டது.

## 14

# பாம்புப் பட்டினம்

ஏது என்னுடைய ஊர்? 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்' என்று பழந் தமிழ்க் கவிஞர் சொன்னது சான்றோர்களுக்குப் பொருந்தும். என்னை நன்ருக அறிந்திருந்தால், இப்படி எல்லா ஊர்களையும் என்னுடைய ஊர் என்று கவிஞர் சாதித்திருப்பாரோ என்னவோ? என்னுடைய ஊர் என்று நான் கருதும் ஊர் என் ஆதிக்கத்திற்குக் கட்டுப்பட்டதன்று. ஆயிரக்கணக்கான மக்கள் அங்கே வாழ்ந்து வருகிருர்கள். எல்லோரும் அதைத் தங்கள் ஊர் என்று மார்தட்டுகிருர்கள். ஆனல் என்னைப் போலத்தான் அவர்களும். அவர்களுக்கும் அந்த ஊர் சொந்தமில்லை. ஏதோ சில வருஷங்கள் ஓர் இடத்தில் வளைய வருகிரேம். அங்கே உள்ள புழுதியை அளைகிரேம்! அதைப் பிசைந்து புடம் போட்டுக் கல்லாக்கி, வீடு என்ற புழுதிக் கூடு ஒன்று கட்டிக் குதூகலப்படுகிரேம். வெளியே போகிரேம், உள்ளே வருகிரேம்; வெயிலும் நிலவும் மழையும், பட்டும் படாமல் சிறிது அனுபவிக்கிரேம். பிறகு......இதற்குள்ளே உலகப்புழுதி வெளியில் நம்முடைய கால் தோய்கின்ற சிறு பகுதியை நம் ஊர் என்று சொல்லிக் கொள்ளுகிரேம்.

குற்றமில்லை. நம்மால் இதைத்தான் செய்ய முடியும். ஆங்கிலக் கவிஞன் வர்ட்ஸ்வொர்த் சொன்னன்: "பார்க்கப்போனல் நம்முடைய பிறப்பு என்பது ஒரு தூக்கத்தின் ஆரம்பம், இந்தத் தூக்கத்திலே எங்கேயிருந்து வந்தோம் என்பதை மறந்து விடுகிரேம். இந்த உலகத்து வாழ்க்கையை நாம் தொடங்கும்போது நம்மோடு இங்கே உதயமாகிறதே,-ஆத்மா என்ற நட்சத்திரம்-, அது எங்கேயோ

வெகு தொலைவில் உள்ள தேசமொன்றில் அஸ்தமித்த பிறகே இங்கு உதயமாகிறது. அந்த நாடுதான் நம்முடையது. நம்முடைய ஊர் அங்கே இருக்கிறது. நம்முடைய வீடும் அங்கேதான். அதன் பெயர் கடவுள்.''

உண்மைதான். ஆனால் அந்த ஊரைப்பற்றியும், அங்கே உள்ள நம்முடைய வீட்டைப்பற்றியும் நம்மால் பேச முடியுமா? நமக்குத் தெரிந்தது அவ்வளவும், தூக்கம் என்று வர்ட்ஸ்வொர்த் குறிக்கும் இந்த வாழ்க்கைதான்; அதுவும் பூரணமாய்த் தெரிவதில்லை. தூக்கத்தில் இன்பம் துன்பம் என்ற கனவுகள் எத்தனையோ, அவற்றை எல்லாம் நாம் புரளும் இந்தப் புழுதிப் படுக்கையோடு ஒட்டியே காணமுடிகிறது. நமக்கு எல்லா வகையிலும் சொந்தமான இறைவனுடைய திருநாடு எங்கே இருக்கிறது என்று தெளியாத நிலையில், நம்முடைய கனவுகளுக்கு அரங்காகவும், நம் வாழ்க்கைக் கொடி படருவதற்குக் கொழுகொம்பாகவும் உள்ள இந்தப் பிரபஞ்ச வெளியின் ஒரு மூலையை நம்முடைய ஊர் என்று சொல்லிக் கொள்வதில் குற்றமென்ன? இவ்வாறு பேசுவதும் வாழ்க்கை என்ற தூக்கத்தின் ஓர் 'அவசரந்'தானே. விழித்துக்கொள்ளும்போது என்னுடைய உண்மையான ஊருக்குப் போய்ச் சேர்வேன்; அதுவரையில் என்னுடைய ஊர் இதோ கடல் அருகில் தூங்கும் இந்தச் சிறு பட்டினந்தான்.

### பாம்பு பிடிக்கப்போன கதை

பெயரை ஏன் கேட்கிறீர்கள்? ஊரைச் சொன்னாலும் பேரைச் சொல்லக்கூடாது. பாம்புப் பட்டினம் என்று வைத்துக்கொள்ளுங்கள். பாம்புப் பட்டினத்திலே பாம்பு உண்டோ என்னவோ எனக்குத் தெரியாது; நான் இருந்தேன்; ஒரு காலத்தில், எப்போதோ தெரியாது, நாகர் என்ற வகுப்பினர் இருந்ததாகக் கேள்வி. அதிலிருந்து

தான் எங்கள் ஊருக்கு இப்போதுள்ள பெயர் வந்ததாகத் தஞ்சை ஜில்லா பூகோள வேதம் கோஷிக்கிறது. 'நாகம்' என்றால் 'பாம்பு' என்ற அளவுக்கு மொழிப் புலமை எனக்குக் கிட்டிய அந்த நாளில்—அந்தக் கிருதயுகம் இனி திரும்பப் போகிறதா?—நானும் பக்கத்து விட்டு சண்முக சுந்தரமும், ஐந்தாறு தங்க அரளிப் பூக்களை எடுத்துக்கொண்டு, பாம்பு பிடிப்பதற்காக உப்பனாற்றங் கரையில் அலைந்தது எனக்கு நன்றாக ஞாபகம் இருக்கிறது. நல்ல வெயில். ஆகாச வெளியில் மந்தை மந்தையாய் வெண்மேகங்கள் மெல்ல அசைந்தன. கூனிக் குறுகி, முடக்கு வாதத்தில் அடிபட்டவைபோல், போகும் வழியிலே நின்ற பூவரச மரங்களைப் பார்த்ததும், பாம்பு பிடிப்பதற்கு மகுடி வேண்டும் என்பதும், பாம்பைப் பிடித்தவுடன் அதனோடு ஆடுவதற்குத் துணியால் மறைபடாத முழங்கால் வேண்டும் என்பதும் எனக்குப் பளிச் சென்று தோன்றின. வேட்டியை மடக்கிக் கட்டிக்கொண்டு முழங்காலைத் தயாரித்துக்கொண்டேன். பிறகு மகுடி ஒன்று நிருமிக்க எண்ணிப் பூவரச மரத்தின்மேல் ஏறினேன். "ஏ, விழுந்திரப்போறே" என்று சண்முகசுந்தரம் எச்சரித்தான். விழுவதாக எனக்கு உத்தேசமில்லை. மேலே வளைந்து சென்ற கிளையொன்றை இறுகப் பிடித்துக்கொண்டு, "உனக்கு என்னடா தெரியும்? மகுடிவேண்டாமா, மகுடி? நல்ல பூவரச இலையாப் பார்த்து ஒரு மகுடி பண்ணி..." என்றேன்.

அப்போதுதான் அந்த முசுக் கட்டைப் பூச்சி என் கையில் ஏறியது. "ஐயோ, பாம்பு!" என்று அலறிக்கொண்டு கீழே விழுந்தேன். "எங்கேடா" என்று கூக்குரலிட்டுக்கொண்டு, எங்கே இருந்தாலும் தேடிப் பிடித்துக் கொண்டு வருபவன்போல், ஒரே ஓட்டமாய், சண்முக சுந்தரம் வட்டமிட்டு ஓடி மறைந்துவிட்டான். என்னுடன் அவன் வந்ததற்கு அடையாளமாய் நாலைந்து தங்க

அரளிப்பூக்கள் கீழே கிடந்தன. முழங்காலைத் தடவிக் கொண்டு அவற்றைப் பார்த்தேன். "பாம்பு பிடித்தால் முழங்காலை இன்றைக்கு ஆட்ட முடியாதே, என்ன செய்வாய்?" என்று வதங்கிய தங்க அரளி இதழ்கள் பேசின. இதைக் கேட்டுப் பூவரச மரம் கிழட்டுச் சிரிப்புச் சிரித்தது. முசுக்கட்டைச் சரம் காற்றில் ஊசலாடியது.

எனக்குச் சொல்லமுடியாத வேதனை. முழங்காலில் அப்படி ஒன்றும் பிரமாதமாக அடிபட்டுவிடவில்லை, கொஞ்சம் சிராய்த்திருந்தது. இரத்தம் வரப் பார்த்தது. ஆனால் வீட்டிற்குத் தெரிந்துவிட்டால்? மடக்கிக் கட்டிய வேட்டியைத் தளர்த்தி முழங்காலை மறைத்துக் கொண்டேன். "எல்லாம் இந்தச் சண்முகசுந்தரந்தான் காரணம். வரட்டும், சொல்லுகிறேன்" என்று முணுமுணுத்துக் கொண்டு கீழே கிடந்த தங்க அரளிப் பூக்களை ஆத்திரத்துடன் பிய்த்தெறிந்தேன். பெருமூச்சுடன் எழுந்தேன். எனக்கு அழுகை வந்தது. மகுடி இல்லை. முழங்காலோ வீங்கிவிட்டது. பாம்பாவது ஏதாவது கண்ணில்பட்டதா? அதுவும் இல்லை.

கலங்கிய கண்களுடன் பரக்கப் பரக்க விழித்து நின்ற என் முன், அப்போதுதான் நீண்டு துவண்டு வெயிலில் மின்னிய பாம்பு ஒன்று பிரசன்னமாயிற்று. அடேயப்பா, எவ்வளவு நீளம்! கண்ணுக்கு எட்டியதூரம் வரையில் நீண்டு வளைந்தது அந்தப் பாம்பு. இந்தப் புறம் மேலக்கோட்டை வாசற் பாலமும், அந்தப் புறம் ரயில்வேப் பாலமும், அதன் கண்கள் வழியே தெரிந்த கோரைக் காடும்; இடையே வளைந்து நெளிந்தது பாம்பு. அதன் முதுகின்மேலேயே உட்கார்ந்து கொண்டு பிடாரன்ஒருவன் ஓய்யாரமாக முழங்கால் ஆட்டினான். என் துக்கமெல்லாம் மாயமாய் மறைந்தது. ஆச்சரிய மிகுதியில், சண்முக சுந்தரத்திடம் இருந்த கசப்பையும் மறந்து, "அடேய் சம்மு, பாரடா, பாம்பைப் பாரடா" என்று கூவினேன்.

ஆம். உப்பனாற்றுக்குக் கரை உயரமாய் இல்லை. நான் நின்றுகொண்டிருந்த இடத்திலிருந்து உப்புப்பூத்த கரிசல்தரை சரிந்து ஆற்றுவெள்ளச் சுருளின் அடியிலே மறைந்தது. வெயிலில் மின்னிச் சிற்றலை மோதப் புரண்டு சென்ற உப்பனாற்று வெள்ளத்தின் வளைவுதான் என் கண்ணிற்குப் பிரும்மாண்டமான பாம்பாகிவிட்டது. பழுதையைப் பாம்பாக நினைப்பது, பாம்பைப் பழுதையாக நினைப்பது, பழுதையும் பாம்பும் இல்லாத நிலையில் ஏதாவது ஒன்று இருப்பதாக மலைவது, இவற்றைப் பற்றி எல்லாம் தத்துவ விசாரணை செய்து தடுமாறும் மனித அறிவு பேசியிருக்கிறது. இப்போது எனக்கு அதொன்றும் விளங்குவதில்லை. ஆனால் அந்தக் காலத்தில் ஆற்றை அரவமாக எண்ணி அத்வைத சாதனையின் முதற் படியை எப்படியோ தொட்டுவிட்டேன்.

### கற்பனைப் பிரயாணம்

நாகப்பட்டினத்தைச் சுற்றி—அடடா, பெயரைச் சொல்லிவிட்டேனே! பாதகமில்லை—மண்டலித்துச் செல்லும் உப்பனாறுதான் தெற்கிலும் மேற்கிலும் என் ஊரின் எல்லைகள். கடலிலிருந்து புறப்பட்டு ஊரின் வடமேற்கில் வெளிப்பாளையத்திற்கு அருகில்உள்ள மயானம் வரையில் உப்பனாற்றின் வளைவுகளைத் தொடர்ந்து சென்றிருக்கிறேன். என்னுடைய ஊரைப் பார்க்க நீங்களும் வருவதானால் இந்த மயானத்திலிருந்து நமது கற்பனைப் பிரயாணத்தைத் தொடங்குவோம். மயானத்தைக் கண்டு நாம் பயப்படப்போவதில்லை. "காடுடைய சுடலைப் பொடி பூசி" வரும் பெம்மானை நமது "உள்ளங்கவர் கள்வனை"க் கருதப் பழகிய நாம் மயானத்தைக் கண்டு அஞ்சவா போகிறோம்? மயானம் இல்லாவிட்டால் மனிதனுக்குப் பெருமை ஏது? அவன் எழுப்பிய சிந்தனைக் கோபுரங்கள், தத்துவ மண்டலங்கள், கலாபவனங்கள், எல்லாவற்றிற்கும் சுடுகாட்டுப்

புகை மறைக்கும் "சாவுக்கு அப்பால்" என்ற மருமந் தானே அடித்தலமாக அமைந்திருக்கிறது!

## குளமும் குழாயும்

மயானத்திலிருந்து தென் மேற்கில் பார்த்தால், உப்பளுறும் அதை அடுத்த உப்புப்பூத்த பாழ்வெளியும் அதற்கப்பால் தொலைவிலே ஒரு சோலையும் தென்படும். இந்தச் சோலைக்குள்ளே அக்கரைக்குளமும் அதன் சகோதரியான தாமரைக் குளமும் இருக்கின்றன. அந்தக் காலத்தில் எங்கள் ஊரில் பெரும் பகுதியினருக்குக் குளிக்கவும் (அக்கரைக் குளத்தின் தருமம்), குடிக்கவும் (தாமரைக் குளத்தின் புண்ணியம்), இவ் "விருகாமத் திணையோரி" களும் உதவி வந்தன. ஊரிலே வேறு குளங்களும் உண்டு. காக்காக் குளம் என்பது ஒன்று. காக்கைக் குளமா, காகக் குளமா, காக்காய்க் குளமா என்று எனக்கு இன்னும் தெளிவுபடவில்லை. காகாசுரனுக்கு - அவன் யாரோ - இங்கேதான் மோட்சம் கிட்டியது என்று என் பாட்டி சொன்னதுண்டு. அவளுக்கு யார் சொன்னார்களோ? காக்காக் குளம் ஊர் நடுவிலே கட்டியப்பர் கோயிலுக்கு எதிரில் இருந்த வட்டமான பாசி நிலயம். பாசி என்றால் தங்கத்தை உருக்கித் தகடாக்கிக் குளத்திற்கு மூடியாக யாரோ அமைத்துவிட்டது போலத் தோன்றும் அற்புதம். அதைப் பார்த்துக் கொண்டிருந்தால், அதன் மேலேயே அக்கரைக்கு நடந்துபோய் விடலாம் என்ற பிரமை தட்டும். ஆகவே காக்காக் குளத்தைக் காக்கைகள் கூட நாடுவதில்லை.

புண்டரீகக் குளம் காக்காக் குளத்தை அடுத்து உள்ளது. அது நீலாயதாட்சி அம்மனுடைய கருணையின் வடிவாய், கோயிலுக்கு மேற்கே அமைந்துள்ளது. புண்டரீகக் குளத்திலே புண்டரீகங்கள் இல்லை. ஒரு மூலையில் காக்காக் குளத்தின் பாசி குடியேறியிருந்தது. படிக்கட்டு,

துறை வசதி உண்டு. தண்ணீர் மட்டும் புண்டரீக மகரிஷி காலத்திலிருந்து எத்தனையோ பேருடைய பாபத்தையெல்லாம் கழுவிய புஷ்கரிணி ஜலமானபடியால், குளிக்க வந்த பாபிகளுடைய பொறுமையைச் சோதிக்கும் வல்லமை பெற்றிருந்தது.

இவை தவிர, சௌந்தரராஜப் பெருமாள் கோயிலுக்குள்ளே ஒரு சிறு குளம் உண்டு. ஆனால் அதை உபயோகப்படுத்த எத்தனையோ கட்டுப்பாடுகள். தென்கலை வைணவர்களாக இருந்தால் கட்டுப்பாடுகள் சில தாமாகவே தளர்ந்துவிடும். அதற்கு உதவியாய், நரைத்த மீசையும், அடர்ந்த தாடியும், பட்டைத் தென்கலை நாமமும் திகழ்ந்த திருமுகசேவையோடு ஆடி அசைந்து கோயில் வாசலைக் காத்துவந்த பூதம் ஒன்று அந்தக் காலத்தில் இருந்தது.

நெல்லுக்கடை மாரியம்மன் கோயிலருகே ஒரு குளம் உண்டு; அது காக்காக் குளத்தின் தம்பி. சௌந்தர ராஜப் பெருமாளுக்குச் சொந்தம். இடிந்த மைய மண்டபம் உண்டு. வெளிப்பாளையம் சிவன் கோயில் புஷ்கரிணிக்கு அப்போது திருப்பணி வேலை நடந்துகொண்டிருந்தது. பட்டினத்தின் கீழ்ப்பகுதியில் இஸ்லாமியர் வசிக்கும் இடங்களில் சில குளங்கள், பல சிறு குட்டங்கள், இவைகளும் இருந்தன. குளத்திற்கும் பிள்ளையார் கோயிலுக்கும் மசூதிக்கும் பஞ்சமா? தண்ணீருக்கும் பக்திக்குந் தானே பஞ்சம் ஏற்பட்டு விடுகிறது?

எத்தனை குளங்கள் இருந்தபோதிலும் அக்கரைக் குளமும், தாமரைக் குளமுமே நகரத்தின் தண்ணீர் விடாய் தீர்க்க முயன்ற தாரகங்கள். 'தீர்க்க முயன்ற' என்று சொல்லுகிறேன்; ஏனென்றால் முழுவதும் தீர்ந்ததாகச் சொல்லுவதற்கில்லை. அடுத்த யுகத்தில் குடி தண்ணீர்க் குழாய்கள் வீதிக்கு ஒன்றாய் முனிசிபல் தர்மாத்மாக்கள் ஏற்படுத்தியபொழுது ஒவ்வொரு குழாயைச் சுற்று

லும் அறுபது எழுபது குடங்கள் அணி வகுத்து நிற்கும் அருமையான காட்சி என்னுடைய ஊரிலே சர்வ சாதா ரணம். எத்தனைவிதமான குடங்கள்! சிறிய பித்தளைக் குடங்கள்; நீண்ட கழுத்தை நெளித்துக்கொண்டு பச்சை படர்ந்த உடலை வெயிலில் உலர்த்தும் தாமிரக் குடங்கள்; தாய் மடியிலே கிடக்கும் குழந்தையைப்போல் சாந்தி யோடு தெருப் புழுதியிலே தூங்கும் மண் குடங்கள். இவை தவிர, செம்புகள், தவலைகள், அண்டாக்கள், காதைச் சிலிர்த்துக்கொண்டு நிற்கும் கங்காளங்கள்! இவை எல்லாவற்றிற்கும், குழாயடியில் தண்ணீர் ஏந்தும் குடத்தையோ, செம்பையோ கண்டு ஏற்படும் பொறாமை பொதுவான உணர்ச்சி. அதனால் விளைந்த ஒற்றுமையில் அவை அமைதியாய் இருப்பதுண்டு. ஆனால் அவற் றிற்கிடையில், சலிப்புடனும் பரபரப்புடனும் நின்ற பெண்களுக்குள் அமைதியும் ஒற்றுமையும் இருப்பதில்லை.

"ஒன்பது மணிச் சங்கு ஊதப்போறான். இன்னும் உலை வைத்தபாடில்லை......எனக்கு ஒரு செம்பு மட்டும் தண்ணீர் கொடடீ. குழந்தைக்குத் தலையில் சீயக்காய் தேய்த்திருக்கிறேன்...அக்கரைக் குளம் போகக்கூடாதா? ......உனக்கென்ன, நீ சொல்லுவாய்......அதென்ன அக் ருமம்! ஒருத்தரே தண்ணீர் பிடித்துக்கொண்டிருந்தால்? ......அவுக பணக்காரங்க, என்ன வேணும்னாலும் செய் வாக"...இம்மாதிரியான பேச்சு ஒவ்வொரு தெருவிலும் நிறைந்திருக்கும். இதன் நடுவில் ஒன்பது மணிச் சங்கு இரைந்து பெருமூச்சு விடும். உடனே பரபரப்பு அதிக மாகும். அது கோபமாக மாறும். குரல்களின் ஸ்தாயி உயரும். குடங்கள் குழாயருகிலே கணீர், டணார் என்று மோதிக்கொள்ளும். ஒவ்வொரு பெண் தெய்வத்தினுடைய ஸஹஸ்ர நாமங்களையும் மற்றப் பெண் தெய்வங்கள் உச் சாடனம் செய்வார்கள்; அவள் முகத்தின் கோணல், அவள் கணவன் வம்சாவளி, அவளுடைய புடவைக் கிழி

சல், அவள் குஜ்ஜிலிப் பொட்டு வைத்துக்கொள்வது...இம் மாதிரியான விஷயங்கள் குழாய் அருகிலே அலசப்படும்.

திடீரென்று பெண் தெய்வங்கள் அந்தர்த்தானமாகி விடுவது சாதாரணம். குடங்கள் மட்டும் உடம்பில் ஏற்பட்ட காயங்களைத் தடவிக்கொண்டு, "இதென்ன அதிசயமடி! மனிதர்கள் ஏன் இப்படி அடித்துக் கொள்கிறார்கள்?" என்று தத்துவ விசாரணை தொடங்கி, அதன் முடிவான சமாதியில் ஆழ்ந்துவிடும். இந்தச் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்து நிற்கும் கெட்டிக்காரி ஒருத்தி குடத்தை எடுத்துக்கொண்டு மெல்ல வருவாள். அவள் குடம் பாதி நிரம்புவதற்குள் குழாய் ஜலம் நின்றுவிடும்.

### சங்கொலி வைபவம்

இந்த நிலைமை ஏற்படுவது பறிஞெரு மணிச் சங்கின் மந்திர சக்தியினாலே என்பது விஷய மறிந்தவர்களுக்குத் தெரியும். எங்கள் ஊரில் சங்கின் ஒலிக்கு விசேஷ மதிப்பு உண்டு. காலையில் எழுந்திருக்கும்போது, "ஆறுமணியாகி விட்டது. இன்னும் ஒரு மணிதான்......" என்று நீட்டி முழக்கும் ஆறுமணிச் சங்கு; அரைமணி நேரத்திற்கெல்லாம், "இன்னும் அரைமணிதான்" என்று எக்களிக்கும் ஆறரை மணிச் சங்கு; இந்தச் சங்கின் ஒலிக்கும் ஏழு மணிச் சங்கின் முத்தாய்ப்புக்கும் இடையிலே, சாய வேட்டி, பலவர்ணச் சட்டை, முண்டாசு, காலில் கட்டை முதலான வைபவங்களுடன், கைகள் "ஏற்றிய சுருட்டு" முத்திரையோ, வெற்றிலை தடவும் அபிநயமோ பிடிக்க, பந்தி பந்தியாகப் பலர் ரயில்வே ஸ்டேஷனுக்கு விரைந்து செல்வதைக் காணலாம். அநேகமாக இவர்களெல்லோரையும் ஸ்டேஷனை அடுத்த கீரைக்கொல்லைத் தெரு முடுக்குகள் விழுங்கிவிடும். இத்தனை பேரும் கீரைக் கொல்லைத் தெருவில் என்ன செய்கிறார்கள் என்று சிறுவனாயிருந்தபோது தினம் ஒரு தடவை நான் கேட்டுக்

கொள்வது உண்டு. 'ஒரு முண்டாசு கட்டிக்கொண்டு, காலில் கட்டை மாட்டிக்கொண்டு, டக் டக்கென்று நானும் இவர்களோடு போனால் என்ன' என்றும் பயங்கரமான திட்டங்கள் போட்டிருக்கிறேன்.

கிரைக்கும் கிரைக் கொல்லைத் தெருவுக்கும் சம்பந்தம் இல்லை. அதுபோலவே கிரைக்கொல்லைத் தெருவுக்கும் இவர்களுக்கும் சம்பந்தமில்லை என்பது பிறகு தெரியவந்தது. கிரைக்கொல்லைத் தெரு ரயில்வே தொழிற்சாலைக்குப் போகும் குறுக்கு வழி. ஆனால் அந்தத் தெரு எத்தனை தொழிலாளர்களுடைய பாதங்களையும், அவற்றின் மூலமாக அவர்கள் உள்ளங்களையும் அளந்திருக்கிறதோ, யார் கண்டது? நம்பிக்கை உள்ள நிமிர்ந்த நடை (அடுத்த மாசம் சம்பள உயர்வு, அதற்கடுத்த மாசம் கல்யாணம்), அமர்ந்த நடை ('பிட்ட'ராகிவிட்டால், கையில் பணம் சேர்ந்துவிட்டால், இந்த நடை வரும்), தட்டித் தடுமாறும் பிரேத நடை (காலைச் சாராயத்தின் விளைவு), தரையைத் தேய்த்துச் செல்லும் அழுத்தமான இழைப்பு நடை (யானைக்காலின் விளைவு), அடடா, கிரைக் கொல்லைத் தெருவைக் கேட்டால் அல்லவா தெரியும்!

சங்கை மறந்துவிட்டேனே! ஒன்பது மணிச்சங்கு, "உலை வைக்கவேண்டும்" என்று ஊரெங்கும் பறையறையும். பதினொரு மணிச்சங்கு (கடிகாரத்தில் 11-20) "வருவார் கொழுநர்" எனக் 'கடை திறப்பு'ப் பாடி மகளிரைப் பயமுறுத்திக் குழாயடியிலிருந்து மசாலை அரைக்கத் துரத்தும். பிறகு, பன்னிரண்டரை, ஒரு மணி, மூன்று மணி, ஐந்துமணிச் சங்குகள்; சங்கொலிக்குக் குறைவில்லை. "ஆலைச் சங்கின் வாய் பொங்கு மோதை" (கம்பன் கருதாத புதிய பொருளில்) ஒரு காலத்தில் என் ஊரைக் கவிந்து நின்றது.

ஞாயிற்றுக்கிழமை மட்டும் சங்குக்கு ஓய்வு. ஆனால் அன்று தொழிலாளருக்கு ஓய்வு இராது. பலர் வெளிப்

பாளையம் சங்கதக்குப் போய் வருவார்கள். காலையில் தெருத் தெருவாய் வீட்டுத் திண்ணைகளில், வீதி முனை களில் சிறு சிறு கூட்டங்கள் நடைபெறும். மாலையில் ரயில்வே ஸ்டேஷனுக்கும் அதையடுத்த போலீஸ் ஸ்டே ஷன் சிவப்புக் கட்டிடத்திற்கும் இடையே உள்ள சிறு வெளியில், சாலை ஆல மரங்களுக்கும் பக்கத்திலிருந்த பங் களாக் குரோடன் மரங்களுக்கும் (ஆம். குரோடன் மரங்கள்; இரண்டு பெரிய மஞ்சள் குரோடன் பிரும் மாண்டங்கள் என் நினைவை விட்டு அகலவில்லை) மத்தி யில் பெரிய கூட்டமொன்று, மேஜை, நாற்காலி, தலைவர் கள, தீர்மானங்கள், வந்தனோபசாரங்கள், கூச்சல்கள், காந்த விளக்குகள், அவற்றை அணிவகுத்துப் பாதுகாக் கும் கொசுக்கள், இத்தனை வைபவங்களோடு நடைபெறும். தொழிலாளர் உரிமை, 'தனி ஒருவனுக்கு உணவில்லை எனில் ஜகத்தினை அழிப்பது', தொழிலாளியின் மரத்துப் போன இரத்தம் படிந்த கையே தொண்டமானுடைய கிரீ டத்தைத் தாங்கி நிற்பது, தெய்வப் புலமைத் திருவள்ளு வர் கூட இதைப்பற்றித் திருவாய் மலர்ந்தருளி யிருப்பது —இவையெல்லாம் அப்போதே வந்துவிட்டன. வர்க்கப் போர், சம உரிமை, பொது உடைமை, சிவப்புக்கொடி, நீண்ட ஜிப்பா......இவை ஜனனமாகவில்லை. கலி புரு ஷன் மகா சாமர்த்தியவான்; என்றாலும் அவனுக்கும் காரியங்களைச் சாதிப்பதற்குப் போதிய நேரம் கிடைக்க வேண்டாமா?

**கிங்கர லோகம்**

தொழிலாளர்கள் கவனத்தை—அதாவது ஹிந்துத் தொழிலாளர் கவனத்தை—தொழிலாளர் உரிமைகளை விட அதிகமாகக் கவர்ந்தது நெல்லுக்கடை மாரியம்மன் கோயில். நெல்லுக்கடை மாரியம்மன் மகா வரப்பிரசாதி என்பது எங்கள் ஊர் ஹிந்து தருமத்தின் அடிப்படை

யான கொள்கை. கோயில் மிகவும் சிறியது. பிராகாரம் குறுகலானது. ஆகவே ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் நடக்கும் அபிஷேகப் பால் பிராகாரத்தில் பெருக்கெடுத்து ஓடுவது எனக்குப் பிரமாதமாகத் தோன்றும். அந்த நாளில், "பாலாபிஷேகப் பழனிமலை யப்பன்" என்று தொடங்கும் ஒரு பாட்டு எங்கும் உலாவி வந்தது. அதன் மெட்டைத் தழுவி எங்களூர்க் கவிஞர் ஒருவர் (கவிதை எழுதாதபோது ரயில்வே தொழிற்சாலையில் கரி தள்ளு வார்),

**"பாலாபிஷேக நெல்லுக்கடை யம்மன்**
**பாதப் பிரசாதம் பரமானந்தம்"**

என்ற ஒரு பாட்டைக் கவனம் செய்தார். 'பாதப் பிர சாதம்' என்றால் என்ன என்பது அப்போதும் சரி, இப் போதும் சரி, எனக்குத் தெரியாது. நெல்லுக்கடை அம்ம னுடைய பாதத்தையும் நான் தரிசித்ததில்லை. நான் மாரி யம்மன் கோயிலுக்குப் போன சில சந்தர்ப்பங்களில், வீரன் சிலையின் கொடூர மிடுக்கு என்னை அள்ளி, பயக் குகையில் எறிந்துவிடும். 'திக்திக்' கென்று அடிக்கும் நெஞ் சுடன் உள்ளே போவேன். ஜரிகைக் கரையுடைய வெள் ளைப் பாவாடை, மேலே கறுப்பாய் ஏதோ ஓர் உருவம், அதில் பளபளவென்று மின்னி என் நெஞ்சைத் துளைத்து எனக்குப் பின்னால் உள்ள தூணை எரிக்கக் கனல் வீசும் இரு கண் மலர்கள்—இவற்றைக் காண்பேன். அந்தக் கண்மலர்கள் ! எத்தனை இரவுகள் அவை என்னைத் தொடர்ந்து வந்திருக்கின்றன! விவரிக்க முடியாத அவற் றின் கொடூர பாவ சூன்யம் எத்தனை தடவை என்னை நரக வேதனையில் அழுத்தி யிருக்கின்றது! மனிதன் அமைக்கும் வெள்ளிக் கண்மலர், வரப்பிரசாதியான தாயின் கருணை விழிகளையும் ஈவிரக்கமற்றனவாகச் செய்து விடுமா? பல வருஷங்களுக்குப் பிறகு, அதாவது

வயது வந்து, நானாகவே விஷயங்களை ஆராய்ந்து மயங்கத் தொடங்கிய பிறகு, அந்த வெள்ளிச் சூன்யத்தின் ஒளியிரு ளின் வழியாக கருணை வெள்ளம் பொங்கித் ததும்பியதை யும் கண்டிருக்கிறேன்.

அதைப்பற்றிச் சொல்வதென்றால் நெல்லுக்கடை மாரியம்மன் உற்சவத்தைப்பற்றி ஒரு வார்த்தை பேசியாக வேண்டும். மாசம் ஞாபகமில்லை; சித்திரை என்று நினைக் கிறேன். பள்ளிக்கூடத்தில் கோடை விடுமுறை விட்ட பிறகுதான் அந்த உற்சவம் தொடங்கும்.

நாற்பது நாற்பத்தைந்து நாள் விடுமுறை என்றால் ஏதோ ஒரு கல்பத்திற்குப் புத்தகக் கவலையிலிருந்து விடுதலைபெற்ற உணர்ச்சியோடு, உற்சவக் குதூகலத்தில் விழுந்து, அம்மன் வீதி வலம்வரும் காட்சிகளின் வர்ண ஜாலங்களில் புரண்டு, ஸங்கீதம் தெரியாமலேயே நாகப் பட்டினம் வேணுகோபாலன் நாதஸ்வர இசையில் முழுகி, தத்துவம் தெரியாமலேயே தன்னை மறந்து, ஒன்பது நாட் களை ஒன்பது சொர்க்கங்களாகக் கழித்த பிறகு, அந்தப் பத்தாவது நாளின் நிங்கரலோக சஞ்சாரம் ஆரம்பமா கும்.

எழுந்திருக்கும்போதே, வெளியிலே அலறும் பம்பை யின் தத்தகாரத்திற்கு ஏற்றவாறு விட்டு முற்றத்தில் துள்ளும் காலை வெயில் அபிநயம் பிடித்துச் சிவந்த கோரப் புன்னகை புரியும். பித்தங் கொண்டவனைப் போல் வீட்டுக் கூடத்தில் உள்ள பெரிய மரத்தூண்களைச் சுற்றிச் சுற்றி ஓடி ஒளிந்துகொள்ள முயல்வேன். ஆனால் அந்தப் பம்பையின் அழைப்பிலே உள்ள அதிகாரத்தை யும், மிடுக்கையும் வெகு நேரத்திற்கு எதிர்த்து நிற்க முடி யாது. தூக்கத்தில் நடப்பவனைப்போல, ஆனால் வெகு வேகத்துடன், வெளியே ஓடி ஆளோடியில் நின்று கொண்டு தெருவைப் பார்ப்பேன். வீதியில் ஜன சமுத் திரம் அலைமோதும். எங்கே பார்த்தாலும் தண்ணீர்

தெளித்துக்கொண்டு பலர் வளைந்து வளைந்து வட்டமிடு வார்கள். "தேர் தெற்கு வீதி சடையப்ப பிள்ளை வீட்டருகில் வந்து விட்டது" என்ற கூச்சல் கேட்கும். ஜனத்திரள் கலங்கிப் புரளும்.

இதோ—தெருக்கோடியில் பம்பையின் ஒலி கேட்கிறது. காவடிகள் வருகின்றன. வேப்பிலை, வேப்பிலை, வேப்பிலை! அந்தப் பச்சையின் நடுவிலே மகளிரின் மஞ்சள் உடை; முகத்திலே குங்குமத் திட்டைச் சுற்றி ஓடிய மஞ்சள் கால்வாய்கள்; பக்தியின் பரவசம். காவடிகள் ஆடி வருகின்றன. வேப்பிலைக் காடு அசைந்து வருகிறது. இடையே மயிற்காவடிகள், பாற்காவடிகள், இளநீர்க் காவடிகள், எத்தனை, எத்தனை, எத்தனையோ!

**"ஆயி மகமாயி ஆயிரங் கண்ணுடையாள்**
**ஆகாத பேருகளை அதட்டி மடக்கிடுவாள்"**

என்று ஒரு குரல் பம்பையை அதட்டி மடக்கி ஓங்குகிறது.

காலை வெயில் துள்ளி விழுகிறது. ஜன வெள்ளம் மடைதிறந்து பாய்கிறது. பம்பையின் கரகரப்பு ஜதி விசிறி சுழற்றுகிறது. காவடிகள் பரவசத் தாண்டவம் புரிந்து அலை அலையாய் தாவிக்குதித்து என்னைத் தாண்டி மறைகின்றன.

அம்மன் தேர் வருகிறது; ஆடி அசைந்து மணி குலுங்க, உலுக்க மரக் கூச்சலும் 'ஒகாய்' என்று வடந் தொடும் ஒலியும் மேளத்தைத அடக்க, துள்ளுமா எங்கும் வீசிட, அதை மடியில் ஏந்த ஏழைகள் துள்ளிட, அண்ட சராசரங்களை இயக்கும் விதியைப்போல் நிமிர்ந்து செல்கிறது. அதன் பின் தேர்க்காவடிகள் வருகின்றன. என் மனத்துத் துடிதுடிப்பில் வேதனை பிறக்கிறது. முதுகுச் சதையில் கொக்கிகளை மாட்டிக்கொண்டு, அவற்றிலே கயிறு கட்டிச் சிறு தேர்களுடன் பிணைத்து, தேர்களை இழுத்துக்கொண்டு வெறிகொண்ட பக்தர்கள் வருகிருர்

கள். பம்பை, பாட்டு, வேப்பிலை, முதுகுச் சதையின் துடி துடிப்பில் அடிப்பதற்குப் பீச்சாங்குழல் தண்ணீர்— இவைபோன்ற இன்றியமையாத சாதனங்கள் அவர்களைத் தொடர்கின்றன. அதன்பின் 'செடில் காவடி' தள்ளாடி வருகிறது. செடில் மரம் ஏற்றமரம் போன்ற அமைப் புள்ளது. உயரத்திலே உள்ள குறுக்கு மரத்தின் ஒரு நுனியில் உள்ள சட்டத்தின் மத்தியிலே கொக்கிகள். அவற்றை முதுகுச் சதையில் குத்தி வாங்கி, ஒரு மனிதன் அந்தரத்தில் தொங்குகிறான். அவன் கீரைக் கொல்லைத் தெரு பயில்வான். கீழே அவனுடைய சகாக்கள் பம்பையை முடுக்குகிறார்கள். மாரியம்மன் கும்மி, நெல்லுக் கடை வண்ணம் முதலியவற்றை இரைந்து பாடுகிறார்கள். சிலர் சிலம்பம் விளையாடுகிறார்கள். கையிலே 'கல்-கல்' என்று வளையங்கள் சுழற்றிப் பேய்போல் ஆடுகிறார்கள். என் மனத்தில் என்னவோ ஒன்று பிசைகிறது. கூட்டம் அதிகரிக்கிறது. வெயிலில் வதங்கிய வேப்பிலை மணமும், வியர்வை நாற்றமும், சந்தன வாசமும் கமழ்ந்த மனித ஆறு பாய்கிறது. எத்தனையோ விதங்களில் அலகு கள் குத்திச்செருகி உடலைப் பலவிதமாய் வதைத்துக் கொண்டு பக்தர்கள் பலர் வரிசை வரிசையாய் ஆயிரம் கண்ணுடையாள் கோயிலை நோக்கி விரைகிறார்கள். ஆனால் என் மனத்திலே மட்டும் இரக்கமற்ற அந்த இரண்டு வெள்ளிக் கண்மலர்கள் உயிரற்று, உணர்ச்சி யற்று விழிக்கின்றன.

### கருணை பேசுகிறது

அன்று மாலை கோயிலுக்குப் போகிறேன். கோயி லெங்கும் வேப்பிலை, பால், இளநீர், தண்ணீர் இவை சிந் திச் சதசதவென்று இருக்கிறது. வாடி வதங்கிய இலைகள் செறிந்த காட்டில், மழை யிருட்டிலே எழுகின்ற மணம் போன்ற ஒரு வாசனை எழுந்து, சாம்பிராணிப் புகையின்

வாசத்தோடு கலந்து, தலை சுற்றவைக்கும் நெடியாகிறது! உள்ளே போகிறேன். ஒரே கூட்டம். அங்கு மிங்கும் தள்ளப்பட்டுக் கர்ப்பக் கிரகத்தில் ஒதுங்குகிறேன். தலையை நிமிர்த்திப் பார்த்தால், சாம்பிராணிப் புகையூடே, சர விளக்கின் மங்கலில் அந்த வெள்ளிக் கண்கள், ஆனால் அவற்றிலே இப்போது கருணை பேசுகிறது. 'ஆயி மகமாயி, ஆயிரங் கண்ணுடையாள்' தன் மக்களின் பேதைமையைக் கண்டு விட்டாள். மனிதன் அமைத்த கண்மலரைக் கூடப் பிளந்துகொண்டு அவள் அருள் பாய்ந்து வருகிறது. "பயப்படாதே, நான் உலகுக்கெல்லாம் தாயடா" என்கிறது. செடில் காவடியும், தேர்க் காவடியும், அலகும், மனிதன் தன் பயத்தால் சிருஷ்டித்துக் கொள்ளும் நரகத்தின் அம்சங்கள் என்பதை உணர்கிறேன்.

இந்த அனுபவத்திற்குப் பிறகு, நெல்லுக்கடை மாரியம்மனுக்கும், எங்கள் ஊர் நீலாயதாட்சி அம்மனுக்கும் என் மனத்திலே இருந்த பேதம் அழிந்துவிட்டது. நீலாயதாட்சி அம்மன் கோயில் ஊர் நடுவிலே உள்ளது. பெரிய கோயில், சுவாமியின் திருநாமம் காயாரோகணேசுவரர். ஆடிப்பூர உற்சவம் விசேஷம். தெற்கு வீதியிலே, இரவு பத்துப் பன்னிரண்டு நாழிகைக்கு, நீலாயதாட்சியின் வெள்ளி ரதம் தீவர்த்தியின் செவ்வொளி வெள்ளத்திடையே மிதந்து வருவதைக் காண ஆயிரங் கண்கள் வேண்டும். நாதஜ்யோதி முத்துசாமி தீக்ஷிதர் இந்த ஆடிப்பூர வைபவத்தைக் கண்டு மனம் பூரித்துத்தான், நீலாயதாட்சியின் ரதம் அசைவது போலவே கம்பீரமாகச் சவுக்க காலத்தில் நகரும் "அம்பா, நீலாயதாட்சி" என்ற அற்புதமான நீலாம்பரி உருப்படியைச் செய்திருக்கவேண்டும் என்பது என் கற்பனைகளில் ஒன்று. அந்தக் கிருதியின் ஓர் அடி என் ஊரைப்பற்றி நினைக்கும் போதெல்லாம் மனத்தில் உதயமாகிறது:

**"பிம்பாதரி சித் ப்ரதி பிம்பாதரீ."**

சித் ப்ரதி பிம்பாதரியின் பிம்பமாக எங்கள் ஊர் நீலாய தாட்சியை நாங்கள் வழிபடுகிறோம்.

தீக்ஷிதர் பாட்டின் அடிகளோடு திருமங்கை மன்னன் பாசுரங்களும் என் நினைவில் எழுவது உண்டு. எங்கள் ஊர் வைணவ திவ்ய தேசங்களில் ஒன்று. கோயிலில் புதிதாக யார் பேரிலாவது அர்ச்சனை நடந்து கற்பூர ஹாரதி நடக்கும்போது அர்ச்சகர் சொல்வார்: "ஸௌந்தர்ய ராஜன் என்று மங்களாசாஸனம்; ஸௌந்தர்யவல்லித் தாயார்; ஸௌந்தர்ய விமானம். ஸார புஷ்கரிணி; நாகராஜனுக்கும் திருமங்கை யாழ்வாருக்கும் பிரத்யக்ஷம்." ஆனால் திருமங்கையாழ்வார் இதை ஒப்புக்கொள்வாரோ என்னவோ? ஸௌந்தர்ய ராஜனுடைய வடிவழகிலே தம்மை மறந்து திகைத்து நின்று,

**"பிணியவிழ் தாமரை மொட்டலர்த்தும்**
**பேரரு ளாளர்கொல்? யான் அறியேன்**
**பணியும்என் நெஞ்சமி தென்கொல்? தோழீ!**
**பண்டிவர் தம்மையும் கண்டறியோம்.**
**அணிகெழு தாமரையன்ன கண்ணும்**
**அங்கையும் பங்கயம், மேனிவானத்து**
**அணிகெழு மாமுகிலேயும் ஒப்பர்**
**அச்சோ ஒருவ ரழகியவா!**

என்று அவர் பாடும்போது, நாம் வேண்டுமானால் ஒப்புக் கொள்ளலாம்.

**காயாத சந்தனம்**

எங்கள் ஊர் முகம்மதிய சகோதரர்கள் முணு முணுப்பது காதில் விழுகிறது. இதோ வந்துவிட்டேன். அவர்களை மறந்து விட முடியுமா? நாகப்பட்டினம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து நேரே வடக்காகச் செல்லும் ரஸ்தா கடைத்தெரு வழியாகச் சென்று, நீலாய தாட்சி யம்பிகை கோயில் வாசலைக் கடந்து, வெளிப்பாளை

யம் செல்கிறது. பொதுவாகக் கூறினால், இந்த ரஸ்தாவின் கீழ்ப்புறம் கடற்கரை வரையில், ஊரின் முகம்மதிய கிறிஸ்தவப் பகுதி என்று கூறி விடலாம். நாகூர் கந்தூரி என்று நீங்கள் கேள்விப் பட்டிருப்பீர்கள். வருஷத்திற்கு ஒருமுறை கோலாகலமாய் வரும் அந்தத் திருவிழாவின் ஊர்வலங்களில் இரண்டு நாகப்பட்டினத்தி லிருந்துதான் தொடங்கும். முதல் ஊர்வலம் பகல் பன்னிரண்டு அல்லது ஒரு மணிக்கு ஆரம்பமாகும். பாய்மரக் கப்பல்களை, தோணிகள், புகைக் கப்பல்கள், இவைபோல் மரத்தாலும் காகிதத்தாலும் அற்புதமான வேலைப்பாட்டுடன் அமைத்து, அப் பதுமைகளைச் சப்பரத்தில் ஏற்றி, ஒன்றன்பின் ஒன்றாக நாகூருக்கு இழுத்துச் செல்வார்கள் அது அதிசயமான காட்சி சில புகைக் கப்பல்களின் புகைப் போக்கிகளிலிருந்து நிஜமாகவே புகை வருவது எனக்குப் பெரிய விநோதமாக இருக்கும். இந்தக் கப்பல்களில் தீப்பிடித்துக்கொண்டு விடாதா என்று கேட்டுக் கொண்டு, கடலிலே எத்தனையோ கப்பல்களைப் புயலிலும் காற்றிலும் காப்பாற்றிக் கரை சேர்க்கும் நாகூர் ஆண்டவர் இவைகளையும் காப்பாற்றுகிறார் என்று என்னைத் தேற்றிக் கொள்வேன்.

இரண்டாவது ஊர்வலம் சந்தனக்கூடு ஊர்வலம். அது இரவில் நடைபெறும். விளக்குகள் செஞ்சுடர்விடப் பளபளவென்று மின்னும் பெரிய ரதம்; ரதம் அசையும் போது அதன் மேற்பகுதி மெல்லச் சுழலும்; அதனுள் நாகூர் மீராசாவுக்குச் சந்தனக்காப்பு போவதாக என் முகம்மதிய நண்பர்கள் சொல்லி அல்லாவை வணங்குவர். அந்தச் சந்தனம் அடுத்த வருஷம் வரை காயாமலேயே இருக்குமாம்! ஏன் இராது? மனித உள்ளம் மட்டும் வறண்டு காயாமலிருந்ததானால், அதிலே பக்திமழை பொழிந்து கொண்டிருக்குமானால், சந்தனம் காயாமல் இருப்பது அதிசயமா?

## கோபுரம் எழுப்பிய கதை

சந்தனக் கூட்டையோ, கஸ்தூரிக் கப்பல்களையோ தொடர்ந்து சென்றால் வெளிப்பாளையம் போய்ச் சேர்வோம். வெளிப்பாளையம் நம்மை அவுரித் திடலில், முனிசிபல் ஆஸ்பத்திரி எதிரில் வரவேற்கும். அவுரித் திடலில் அவுரி இல்லை; நெருஞ்சிப் பூக்கள் உண்டு. அதுபோலவே அவுரித் திடலின் மேற்கே உள்ள 'வெள்ளிக் கோபுரம்' என்ற கட்டிடங்களில் வெள்ளி இல்லை; தாலுகாக் கச்சேரி, ஸப் கோர்ட்டு, ஸப் ஜெயில், ஆம், ஒரு சிறு காபி கிளப்; இவையும், கட்டிடங்களை அடுத்துப் பல வாதநாராயண மரங்களும், தூங்கு மூஞ்சி மரங்களும் இருக்கின்றன. தாலுகாக் கச்சேரிக்கு எதிரில் உள்ள ஒரு தூங்குமூஞ்சி மரம் என் பழைய நண்பன். அதன் தணிந்த கிளையொன்றில் உட்கார்ந்து வெள்ளிக் கோபுரத்தைப்பற்றி என் ஆசிரியர் சொன்ன பழங்கதையைத் திருப்பித் திருப்பிப் பலவிதமாக அமைத்துப் பார்த்துக் குருட்டுக் கனவு காணுவதில் எனக்கு மிகுந்த ஈடுபாடு.

திருமங்கையாழ்வார் காலத்தில் வெள்ளிக் கோபுரம் ஒரு பௌத்த ஆலயமாய் இருந்ததாம். வெள்ளி ஆலயத்தில் பொன்மயமான புத்த விக்கிரகம் இருந்ததாம். அதை ஒருவரும் களவாடிச் செல்லாமல், 'சக்கராகாரமான யந்திர விசேட மொன்று' இடைவிடாது சுழன்று காத்து வந்ததாம். வாழைத் தண்டுகளைத் தறித்து, அந்நேமிப் பொறியின் இடையே கொடுத்துப் பொறியின் இயக்கத்தை நிறுத்தி, தம் சீடன் ஒருவனைத் திருமங்கையாழ்வார் உள்ளே அனுப்பினாராம். அவன் உள்ளே சென்று கனக விக்கிரகத்தைக் கவரத் தொடங்குகையில், அது அவன் கைக்கு அகப்படாமல் கோயில் முழுதும் திரிந்து ஓட்டம் காட்டியதாம். அதன் மந்திர வலிமையைக் குறைப்பதற்காக, சீடன் அதை அபரிசுத்தமாக்கிவிடவே அது சக்தி குன்றி,

**"ஈயத்தா லாகாதோ இரும்பினு லாகாதோ**
**பூயத்தான் மிக்கதொரு பூதத்தா லாகாதோ?**
**தேயத்தே பித்தளைநற் செம்புகளா லாகாதோ?**
**மாயப்பொன் வேண்டுமோ மதித்தென்னைப்**
**[பண்ணுகைக்கே?"**

என்று ஊளை யிட்டுக்கொண்டு விழுந்து விட்டதாம். பிறகு திருமங்கையாழ்வார் அந்தக் கனக விக்கிரகத்தை உருக்கி, அதிலிருந்து கிடைத்த பொருளைக்கொண்டு திருவரங்கப் பெருமானுக்கு விமானம், மண்டபம், கோபுரம், பிராகாரம் முதலியன எழுப்பினுராம். பொன் கலந்த அந்தி மயக்கத்தில், வெள்ளிக் கோபுர வாதநாராயண மரங்களிடையே,பௌத்த விக்கிரகம் ஒன்று தந்தித்தத்தி என் கைக்கு அகப்படாமல் எத்தனையோ தடவை ஓடி யிருக்கிறது. தூங்குமூஞ்சி மரத்தின் கிளைகள் அசைந்து பின்னி, நேமிப் பொறியாகச் சமைந்ததும் உண்டு. இருள் விழுந்ததும், கிளைப் பந்தலின் மேலே இருந்து,

**"மாயப்பொன் வேண்டுமோ**
**மதித்தென்னைப் பண்ணுகைக்கே?"**

என்று பரிகாசக் குரல் கேட்கும். வீட்டிற்கு வரும் வழியில் அவுரித் திடல் நெருஞ்சிப் பூக்களும், வானத்திடல் நட்சத்திர மலர்களும்,

**"மாயப்பொன் வேண்டுமோ**
**மதித்தெம்மைப் பண்ணுகைக்கே?"**

என்று சிரிக்கும். கட்டி முடிந்தவுடன் திருவரங்கம் கோயில் மதிலும் திருமங்கை யாழ்வாருக்கு இதைச் சொல்லி யிருக்கும் என்று என்னுல் நினைக்காமல் இருக்க முடியவில்லை.

**சரித்திரக் காட்சிகள்**

எங்கள் ஊரைப்பற்றிச் சரித்திரக் கதைகளும் பல உள்ளன. அவற்றை எல்லாம் அடுக்கிக் கொண்டு

போனுல் முடியா நெடுங்கதையாகி விடும். எப்போதோ நாகர் என்ற காட்டு மக்கள் வாழ்ந்து வந்தார்கள். பல ஆயிரம் வருஷங்களுக்குப் பிறகு, நாங்கள் வாழ்ந்துவந் தோம். இடையிலே முகம்மதியர் வந்தார்கள். நாகூர் தர்க்காவையும் வேறு பல மசூதிகளையும் எழுப்பினுர்கள். டச்சுக்காரர்கள் வந்தார்கள். அதற்கு அடையாளமாக இப்போதும் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து ஹாலந்து ரோடு கிழக்கே கடலைநோக்கி நேராகச் சென்று வளைந்து, போர்வீரன்போல் திரும்பிப் பார்க்காமல் வடக்கே திரும்பு கிறது. அந்த வளைவிலிருந்து தெற்கே ரயில்வேப் பாதை யைக் கடந்து சென்ருல் உப்பனுற்றங்கரைமேல், ஆற்றை யும் அதற்கப்பாலுள்ள மரஞ்செறிந்த மணல் திட்டையும், அதற்கும் அப்பாலுள்ள கடலையும் பார்த்துக்கொண்டு டச்சுக் கொடிமேடு நிற்கிறது. சுமார் இருபது அடி உயர முள்ள இந்த மேட்டை டச்சுக்காரர் அமைத்தார் களாம். மேட்டை அணைத்து நாற்புறமும சுவரெழுப்பி, மேலே சுற்றிலும் கைப்பிடி சுவரமைத்து, மேட்டு நடு விலே வட்டமான உயர்ந்த பீடமொன்றும் அவர்கள் கட்டி யிருக்கிருர்கள்.

பீடத்தின் நடுவிலே இப்போது டச்சுக் கொடிமரம் இல்லை. முனிசிபல் லாந்தல் கம்பம் நிற்கிறது. இரவிலே அதன் அடியில் அமர்ந்து இறந்தொழிந்த காலத்தைச் சிருஷ்டி செய்யத் தொடங்கினுல், வேறு சரித்திரக் காட்சி களும் மனத்திலே மங்கலாக உருவம் பெறும். டச்சுக் காரர் வந்தார்களா? போர்ச்சுகீஸாருக்கும் அவர்களுக் கும் எங்கேயோ மூண்ட ஏகாதிபத்தியப் போர் நாகப் பட்டினத்திலே ஆறியது. அதன் பிறகு பிரஞ்சுத் தளபதி லாபூர்தனேயின் கப்பல்கள் இங்கே இரண்டு நாள் தங்கி ஆங்கிலக் கடற்படையை எதிர்நோக்கி, அலைகளோடு கம் பீர நடனம் புரிந்தன. இப்போது வீசுகிற இதே தமிழ்க் காற்றுத்தான் லாபூர்தனேயின் கடற்படைக் கொடிமரங்

களில் துவண்ட பிரஞ்சுப் பாவட்டாக்களை அலைத்து, அவற்றில் தீட்டப்பெற்ற மும்மலர்களை எண்ணி திச்ர கதியிலே வீசியிருக்க வேண்டும். இப்போது அதே காற்று, கடற்கரை ஓரத்தில் உள்ள சுங்கச்சாவடியின் மேலும், மதுரைக் கும்பினியின் மேலும் துவள்கின்ற பிரிட்டிஷ் கொடியோடு விளையாடுகிறது. டச்சுக் கொடிமரம் முனிசிபல் லாந்தலாக மாறிவிட்டது. நாகப்பட்டினம் கோட்டையோ மேலைக் கோட்டைவாசல், மருந்துக் கொத்தளம் வெளிப்பாளையம் என்பன போன்ற பெயர்களை மட்டும் அளித்துவிட்டு இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டது.

### வளம் மாறவில்லை

டச்சுக்காரரையும், போர்ச்சுகீஸியரையும், பிரஞ்சுக்காரரையும், ஆங்கிலேயரையும் ஒருவரோடொருவர் மோதவைத்த சோழநாட்டு இயற்கை வளம் இன்னும் அதிகமாக மாறவில்லை. அதை வெளியேற்றுவதற்கு வசதியாய் அமைந்த துறைமுகமும் பழைய நிலையிலேதான் இருக்கிறது. ஏதோ ஒரு சில மாறுதல்கள் ஏற்பட்டிருக்கலாம். ஒரு லைட் ஹவுஸ், பீச் ரயில்வே ஸ்டேஷன், உப்பனுறு கடலில் கலக்கத் தயங்கும் மணல் மேட்டில் ஆற்றை ஒட்டிச் சில புதிய தோணித் துறைகள், அடுத்துள்ள கொட்டகைகளுக்கு இரும்புக் கூரை, இவை புதிதாய் ஏற்பட்டவை. ஆனால் பழைய கடல் எப்போதும் போலவே இன்றும் நிரந்தர இளமையோடு துள்ளிப் புரண்டு விளையாடி, நினைத்தபோது உப்பனுற்றுக்குள் ஓடித்திரண்டு பொங்குகிறது.

கடல்தான் எங்கள் ஊரின் கிழக்கு எல்லை. அதுவே எங்கள் ஊரின் வியாபார வளர்ச்சிக்கும் அடிப்படையான சாதனம். கடல் இல்லாவிட்டால் எங்கள் ஊர் ஊராகவே இராது என்று கூடச் சொல்லிவிடலாம். ஹாலந்து ரோடு வழியாகச் சென்றால் வரிசை வரிசையாகப் புழுதி

அடைந்த பண்டகசாலைகளைக் காணலாம். நிலக்கடலைத் தோலும், வெங்காயச் சட்டையும், நெற் பதாகளும் ஹாலந்து ரோடின் அகலத்தை அளக்க முயன்று, கடற் காற்று எழுப்பும் மணலோடு கலந்து, தோணித்துறைகளை வட்டமிடும். கடலின் உப்பு நெடியும், ஈரநெல், நாளான வெங்காயம், செத்த மீன் இவற்றின் மணமும், சில சமயங் களில் பீச் ஸ்டேஷனிலிருந்து வரும் நிலக்கரி வாசனையும் ஒன்றாகித் துறைமுகக் கலவையாக உலா விவரும். உப்பனு ற்று வெள்ளத்திலே அசைந்தோ, சேற்றில் அழுந்தியோ சிறுதோணிகள் அங்கங்கே பாயில்லாத பாய்மர எலும்பு களைத் தூக்கிக் காட்டி, பரிதாபமாக வயிற்றைத் திறந்து கொண்டு நிற்கும். இதைக் கண்டு மனமிளகியவர்கள் போல, பெரிய மூட்டைகளைச் சுமந்துகொண்டு வத்தற் காரர்கள் வருவார்கள்.

**கடல் நீலமா? சோழ வேங்கை**

கருங்காலி மரத்தில் செதுக்கிய பீமன் சிலைபோல் இதோ ஒருவன் வருகிறான்; இரண்டு கலம் நெல் கொண்ட மூட்டையைச் சிறு தூசியைத் தட்டுவதுபோல் முதுகி லிருந்து தட்டிக் கீழே எறிந்துவிட்டு என்னைப் பார்த்து நகைக்கிறான்.

"என்ன முச்சாமி!" என்கிறேன்.

அவன் பெயர் முத்துச்சாமி. முச்சாமி என்பது குறுக் கல் விகாரம்.

நெற்றி வியர்வையை இடதுகை ஆட்காட்டி விரலால் ஒரட்டிப் பூமியில் வடிய விட்டபின் ஒரு பெருமூச்சுடன், "என்னாங்க, நீலந்தானுங்க" என்கிறான். நான் சிரிக் கிறேன். அவனும் என்னைப் பார்த்துச் சிரிக்கிறான். பிறகு 'நீலந்தானா?' என்று அறிய இருவரும் கடலைப் பார்க் கிறோம்.

அது எங்கள் இருவருக்கு மட்டும் தெரிந்த இரகசி யம். கடலின் வர்ணத்தைப் பற்றிய ஆராய்ச்சியில் அப்

போது ஈடுபட்டிருந்தேன். ஒருநாள் முச்சாமியிடம் விளையாட்டாகச் சொல்லிவிட்டேன். அவ்வளவுதான். அன்றிருந்து என்னைக் காணும்போதெல்லாம் சிரித்துக் கொண்டு கடல் வர்ணத்தைப்பற்றி ஏதாவது சொல்வான். உண்மையில் கடல் இன்று நீல நிறமாயில்லை. பச்சையும் பழுப்பும் கலந்த ஓர் அரை வட்டம்; அதன் நடுவே சாம்பலும் வெண்மையும் மாறி மாறி நுரையாகக் கவிந்தன; இந்த வட்டத்தைச் சுற்றி ஓர் ஊதா வளையம்; அதற்கப்பால் இன்ன வர்ணம் என்று சொல்ல முடியாத ஒரு கலவை; அதன் பின்புறம் தொடுவானத்தின் பூங்காரம். நாலைந்து கட்டுமரங்கள் பச்சை வெளியில் மிதந்தன. ஊதா வளையத்தைக் கடந்து சிவப்புத் தொங்கியை மெல்ல அசைத்துப் படகொன்று சென்றது. முதுகொடிந்த ஒட்டகம்போல், ஒரு புகைக் கப்பல் வான வளைவைத் தன் உடைந்தபல்லால் கவ்வி நின்றது.

"ஆம், நீலந்தான்" என்கிறேன்; முச்சாமியை மறுத்துப் பேச எனக்குத் தைரியம் வருவதில்லை. கடலைப்பற்றி அவனைவிட எனக்கு என்ன தெரியும்? மழையிலும் பனியிலும், இரவிலும் பகலிலும், எந்நேரத்திலும் அதன் அருகிலே அதன் மடியிலே வளரும் முச்சாமியை விடக் கடலை நான் அறிந்துவிட முடியுமா? அவன் தகப்பனையும் தம்பியர் இருவரையும் கடல் விழுங்கிவிட்டது. அவன் அப்படிச் சொல்வதில்லை. "போனுங்க, அன்னிக்குக் கும்மிருட்டிலே, விடிய ரண்டு நாளிப்போது இருக்கரப்பவே போனுங்க; இப்போ நல்ல புள்ளை மாதிரி இருக்குங்க; அன்னிக்குப் பாக்கணம், இந்தக் கடலே. பனைமர ஒசரம் எளும்பி ஆடிச்சுங்க. போனுங்க, திரும்பி வரலை, அவ்வளவுதானுங்க" என்று கடலை வெறித்துப் பார்த்துவிட்டுப் பெருமூச்செறிவான். அடுத்த நிமிஷம் கலகலப்புடன் சிரித்து, "ஆமாங்க, நீலந்தானுங்க" என்பான். "போனவர்கள் திரும்பாதது இந்த உலகத்திலே புதிதா? கடல்

நீலமுந்தான் புதிதா?'' என்று நான் எண்ணுவதற்குள் நீண்ட கத்தியை மடியிலிருந்து எடுத்துப் புகையிலைத் துணுக்கு ஒன்றைச் சாவதானமாய் நறுக்கி வாயில் போட்டுக் கொள்வான். பிறகு "பொல்லாப் பயலுங்க'' என்று கடலை நோக்கிக் கையசைப்பான்.

முச்சாமி ஓர் ஏழைக் கூலியாள்தான். ஆனால் அவனைப் பார்த்த பிறகுதான் சோழ சாம்ராஜ்யத்தின் கடற்படையில் எனக்கு நம்பிக்கை பிறந்தது. கடலைத் தாண்டி சுமாட்ரா, ஜாவா, வங்காளம், காம்போஜம், ஸ்வர்ணபூமி இங்கெல்லாம் சோழனுடைய வேங்கை எட்டிப் பார்த்தது முச்சாமியின் முன்னோர்களாலேயே என்று எண்ணுவதில் எனக்கு எவ்வளவோ பெருமை.

முச்சாமியின் குடிசை நம்பியான் குப்பத்தில் இருந்தது. பீச் ஸ்டேஷன் எதிரிலுள்ள மரவாடிகளையும், மலை போல் அடுக்கியுள்ள மரங்களையும், இடையிடையே மணலில் குழிதோண்டி, குழிக்குள் ஒருவனும் மேலே ஒருவனும் நின்றுகொண்டு, மரம் அறுக்கும் மலையாளி ஜோடிகளையும் கடந்து, கடலோரமாகவே ஜலத்தை அளைந்து கொண்டு ஒன்றரை மைல் நடந்தால் நம்பியான் குப்பம் போய்ச் சேரலாம்.

**பள்ளிக்கூடமும் கடற்கரையும்**

இருங்கள், போகும் வழியிலே உள்ள மரவாடிகளைப் பார்த்து விடுவோம். மரக் கட்டைகளை மலைபோல் அடுக்கி வைத்திருக்கிறார்கள்; எதற்காகத் தெரியுமா? எங்கள் ஊர்ப் பள்ளிக்கூடத்தில்—உலகத்திலேயே அதற்கு நிகரான பள்ளிக்கூடம் இல்லை; உங்கள் ஊர்ப் பள்ளிக்கூடத்திற்கு எதிரில் குமரன் கோயில் உண்டா? அப்படியிருந்தாலும் நீங்கள் படிக்கும்போது அந்தக் கோயிலில் கும்பாபிஷேகம் நடந்ததா? குமரன் கோயில் பஞ்சாமிர்தத்தைப் பரிமேலழகர் உரையோடோ, பிதாகரஸ் கண்டு பிடித்த திரிகோண உண்மைகளோடோ, அசோகனுடைய சாஸ

னங்களோடோ ஒன்றாகக் கலந்து நீங்கள் சாப்பிட்டிருக்கிறீர்களா? புதுக் கட்டிடத்தின் சுவரில் பஞ்சாமிர்தக் கையைத் துடைத்திருக்கிறீர்களா?—எங்கள் ஊர்ப் பள்ளிக்கூடத்தில் படித்து, இதையெல்லாம் செய்து தேறிய காரணத்தால், கடற்கரை மரக்கட்டை மலைகளின் உபயோகம் எங்களுக்குத் தெரியும். மலைகள் இருந்தால் பள்ளத்தாக்கும் இருக்கும் என்பது, பூகோள விசாரணை செய்த எங்களுக்கு உள்ளங்கை நெல்லிக்கனியாய் இருந்தது. அந்தக் காலத்தில் மாணவர்கள் அகற்ற வேண்டிய பஞ்சமா பாதகங்களில் ஒன்றாக வெற்றிலை போடுவது கருதப்பட்டது. எங்கள் ஆசிரியர்களுள் மிகவும் வயதானவரும், மிகவும் குள்ளமானவரும், மிகவும் இரைந்து பேசுபவரும், மிகவும்—மிகவும்—மிகவும்—ஆங்கில இலக்கணம் தெரிந்தவரும், குள்ளப்புலி என்று எங்களால் நாமகரணம் சூட்டப் பெற்றவருமான எஸ். வி. என். சித்தாந்தம் செய்த சாதனை பஞ்சமத்தின் முதற் பிரகரணம், "வெற்றிலை போடக்கூடாது" என்பதே.

ஆகவே, வெற்றிலை போடுவதில் எங்களில் சிலருக்கு எல்லையற்ற மோகம் ஏற்பட்டது. கடற்கரைக்குச் சென்று அங்கே மரக்கட்டை மலைகளுக்கு இடையிடையே இருந்த சிறு பள்ளத்தாக்குகளில் உட்கார்ந்து, ஏதோ பிரமாதமான சதியாலோசனை செய்கின்ற பாவனையுடன், வாடிய வெற்றிலை, சொத்தைப் பாக்கு, உலர்ந்த சுண்ணாம்பு—இவற்றை ஒன்றாக வாயிலே குதப்பிக் கொண்டு, உலகத்தையே வென்றுவிட்ட இறுமாப்புடன், வானத்தையும், மேற்கே மாலை வெயிலில் மின்னிய மாதாகோயில் கோபுரச் சிலுவையையும் பார்த்துத் தலையாட்டிக் கொண்டு இருந்தால், காலம் ஓடாமல் நின்று விடாதா?

ஒருநாள் இந்த அமர நிலையில் நாங்கள் இருந்த போது, மாதாகோயில் கோபுரச் சிலுவையை மறைத்துக் கொண்டு, மரக்கட்டைச் சரிவிலே ஒரு மனித உருவம்

தோன்றியது. "யாரோ வருகிறார்கள்" என்று தணிந்த குரலில்—அது என்னுடைய குரலாகவே இல்லை, பயத்தால் இறுகிவிட்டது—நான் கூவினேன். "நம்முடைய தமிழ் ஐயாவடா" என்றான் எங்கள் கோஷ்டித் தலைவன். வந்தவர் தமிழ் ஐயாவே. அவருடைய கம்பீரமான தோற்றமும், தமிழ்ப் பாட்டுக்களை அவர் பாடும்போது கனிந்த இனிமையும், அவருடைய அன்பும் எங்கள் எல்லோரையும் அவருக்கு அடிமையாக்கி வைத்திருந்தன. எங்கள் தமிழ் ஐயாவை உங்களுக்குத் தெரியாதே; ஒரு வேளை கேள்விப் பட்டிருக்கலாம். நாகை, 'நீலலோசனி' பத்திராதிபர், சதாசிவம் பிள்ளையவர்களே எங்கள் தமிழ் ஐயா. எனக்கு வேறொரு தமிழ் ஆசிரியரும் இருந்தார். அவர் திருவாரூர் 'இலக்கண விளக்க'க் குடும்பத்தைச் சேர்ந்தவர். அவரிடம் நான்...ஆனால் இதெல்லாம் எதற்கு? எங்கள் ஊரைப் பற்றியல்லவா சொல்லவந்தேன்!

**சப்தகன்னிகை மேடு**

'நீலலோசனி' ஆசிரியர் மரவாடிக்கு வந்த உற்பாதத்திற்குப் பிறகு, நாங்கள் எங்கள் வெற்றிலைக் கூடத்தை, வடக்கே நம்பியான் குப்பத்திற்குப் போகும் வழியில் கடலருகில் இருந்த 'சப்த கன்னிகை மணல் மேட்டி'ற்கு மாற்றினோம். மணல் மேடு மிகவும் சிறியதுதான். ஆனால் அதைச் சுற்றி இலைக்கள்ளியும், 'ராவணன் மீசை'ப் புல்லும் அடர்ந்திருந்தன. மணல்மேட்டின் உச்சியில் ஒரு பள்ளம். அதை அடைவதற்கு இலைக்கள்ளி நிறைந்த குறுகிய பாதை. போகும் வழியிலே நாலைந்து உடைந்த கருங்கற் சிலைகள்—சப்த கன்னிகைகளாய் எப்போதோ பக்தர்களுக்குக் காட்சியளித்த திருவுருவங்களின் மிச்சம். மண் மேட்டின் உச்சியிலிருந்து ராவணன் மீசையைக் காற்றுவாக்கில் விட்டு, அது தத்தித் தத்தி மணல் வெளியைக் கடந்து தூரத்தில் உள்ள ரயில்வே லயனைச் சேரும்வரை, இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருப்

போம். ராவணன் மீசை ஓட்டப் போட்டியும் நாங்கள் நடத்தியது உண்டு.

**வலைஞர் குப்பம்**

சப்த கன்னிகை மேட்டிலிருந்து சுமார் அரை மைல் தூரத்தில் மரங்கள் அடர்ந்த உயர்ந்த மணல்மேடு இருக்கிறதே, அதுதான் நம்பியான் குப்பம். கடலை அடுத்து இருக்கிறது. ஜலத்தோரமாக நடந்துபோனால் தென்படும் கட்டு மரங்களும், பழைய உடைந்த தோணிகளும் நம்பியான் குப்பத்தின் சின்னங்கள். ஒற்றையடிப் பாதையொன்று மேலே போகிறது. மீன் நாற்றத்தைச் சகித்துக் கொள்ள உங்களுக்குப் பழக்கமிருந்தால் என்னுடன் மேலே வாருங்கள். மேலே பிரமாதமாக ஒன்றும் இல்லை. சிறு குடிசைகள், கடற் காற்றைக்கூடக் கறைப்படுத்தும் நாற்றம், கூச்சல், கும்மாளம், அடிதடி, அழுகை; வலைஞர் சேரியின் வைபவம். கடலோடு சலியாமல் மல்லாடி வயிற்றுப் பிழைப்பை நடத்தும் எங்களூர்ப் பரதவருடைய மனவலிமையெல்லாம் வறுமை தாண்டவமாடும் இந்தக் குப்பத்திலும், மரவாடிகளை அடுத்த பரவைக்காரத் தெருவிலுந்தான் வளர்ந்தது என்றால் அதிசயமாகத்தான் இருக்கும். ஆனால் ஆதனூர்ப் புலைச்சேரியில் நந்தன் என்ற பக்தி மலர் பூத்ததானால் எங்கள் நம்பியான் குப்பத்தில் வீரம் மலரக்கூடாதா?

"சுரையோ படர்ந்திருக்கும்—அதைச் சுற்றிலும் நாய்கள் குலைத்து நிற்கும்" என்று ஆதனூரைப் பற்றி, கோபால கிருஷ்ண பாரதியார் பாடினார். நம்பியான் குப்பத்தில் சுரை படர்ந்திருப்பதை நான் கண்டதில்லை. ஆனால் சுற்றிலும் நாய்கள் குலைத்து நிற்கும். கோழி கூவும் கூக்குரலும், பாழுங் கொல்லையருகினில் வெள்ளெலும்பும் காணலாம். கிழிதோல், நரம்புகள், மணற் பரப்பில் உலரும் சிறுமீன்கள் - இவைகளுக்கும் பஞ்சம் இல்லை. மீன்களைக் கொத்திச் செல்ல வரிசை வரிசையாய்க் காத்திருக்

கும் காக்கைகளையும் வட்டமிடும் பருந்துகளையும் அதட்டி. ஓட்டி, வலைச்சியர் ஓடுவார்கள். குடிசை வாசலில் அறுந்த வலைகளைச் செப்பனிட்டுக்கொண்டு கிழவர்கள் தள்ளாடுவார்கள், ஓயாமல் மணலைத் தூவிச் சுழலும் கடற் காற்று, குடிசைகளையும் மரங்களையும் சுற்றிச் சுழன்று, எதையோ தேடிப் பிடிக்க முயன்று வெற்றி பெருதது போல் நெடுங்குரலில் ஓலமிடும். ஆதனூர் வருணனை முழுவதும் ஞாபகத்திற்கு வரும். அதோடு கோபால கிருஷ்ண பாரதியார் எங்களூரில் சேர்ந்தாற்போல் ஐந்து நாட்கள் தம் அற்புதமான நந்தன் சரித்திரக் கீர்த்தனைகளைப் பாடி எங்களூரைப் பரவசப் படுத்திஞர் என்பதும் ஞாபகத்திற்கு வரும். ஆனுல் அப்போது நான்தான் எங்களூரில் இல்லையே,...அல்லது இருந்தேனே...?

**காடம்பாடிக் கடற்கரை**

பிரபஞ்ச சிருஷ்டியிலிருந்து எப்போதுமே எங்களூரிலேயே இருந்து வந்திருக்கிறேன் என்ற பிரமை எனக்கு நம்பியான் குப்பத்திற்கு அடுத்துள்ள காடம்பாடிக் கடற்கரையில் ஏற்படுவது உண்டு. காடம்பாடிதான் எங்களூரின் வடக்கெல்லை. காடம்பாடிக் கடற்கரை, மேடு பள்ளங்கள் நிறைந்தது. எங்கும் சிறு சிறு மணல் மேடுகள். அவற்றிடையே மணலும் புல் தரையும் மாறிமாறி நெய்த இரத்தினக் கம்பளம்.

மேற்கே சவுக்குத் தோப்புக்குள் போனுல் பழைய காலத்து மண்டபத்திற்குள் போவதுபோல் இருக்கும். அதே கம்பீரம்; அந்த நிம்மதி; அந்தத் தனிமை; உலகமும் அதன் ஓயாப் பரபரப்பும் சஞ்சலமும் கழன்று விழுந்து விட்டன போன்ற நினைவு. உள்ளே, இருட்டும் ஒளியும் இல்லாத ஒரு மங்கல்; அதோடு கலந்து, கடற்பாசி, ஈர மண், அருகிலுள்ள பாப்பணச்சேரி மல்லிகைக் காடு—இந்நான்கின் வாசமும் சேர்ந்து தோப்பின் சுவாசமென உலாவும் ஒரு மணம்.

இதை அனுபவித்துக்கொண்டு நின்று விடுகிறேன். நீங்கள் வேண்டுமானால் எங்கள் ஊருக்குள்ளே தனியாகப்போய் நான் சொன்னதெல்லாம் உண்மைதானா என்று பார்த்துவிட்டு வாருங்கள். குறுகிய மண் வீதிகள், பழைய இடிந்த ஓட்டு வீடுகள், உப்புப் பூத்த சுவர்கள், தென்னைமரக் கூந்தல்கள், கொசுக்கள் — இவற்றைப் பார்த்துவிட்டு நான் பேசியது முழுதும் கற்பனை என்று நீங்கள் சொல்லலாம்.

ஆனால் உண்மையென்பது எது? எங்களூரைப் பற்றிய நினைவுகளை இவ்வளவு நேரம் தொடர்ந்து சென்றதில் எனக்குள்ள இன்பமல்லவா எங்களூரைப் பற்றிய உண்மை? நினைவுகள் அலை அலையாகவே புரண்டு வருகின்றன. ஆனால் என்னைப் பற்றிய நினைவு எங்களூரில் யாருக்கும் இராது. ஒரு சமயம் உப்பனாற்றங்கரைப் பூவரச மரங்களும் தாலுகாக் கச்சேரி தூங்குமூஞ்சி மரமும் சப்த கன்னிகை மணல் மேடும் என்னை ஞாபகத்தில் வைத்துக் கொண்டிருக்கலாம். ஒன்றையும் மறக்காமல் வேதனைப்படும் கடலும் என் பேரைச் சொன்னால் அறிந்து கொள்ளலாம். 'ஏது, அப்படியொன்றும் நடைபெறாது' என்று நினைக்கிறீர்கள்? போகட்டும்; "பிம்பாதரி சித் ப்ரதி பிம்பாதரி"யான நீலாயதாட்சியும், அருள் வள்ளலான சௌந்தர்ய ராஜப் பெருமானுங் கூடவா இந்த ஏழையை மறந்திருப்பார்கள்?

## 15

# வாழ்க்கையில் சலிப்பு

எத்தனையோ முறை நீங்களும் நானும் அனுபவித்திருக்கிறோம். "என்ன வாழ்க்கையடா இது! காலை முதல் அந்தி வரையில் ஒவ்வொரு நாளும் ஒரே மாதிரியாய், தொலையாப் பெரு விலங்காக மூண்டுவிட்டது!" என்று அந்த அனுபவத்தை வெளியிட்டும் இருக்கிறோம். ஆனால், இந்த அனுபவம் நமது தொழிலைப் பற்றியதாகவோ, அல்லது நாம் மேற்கொண்ட தினசரி வேலை ஒன்றைப் பற்றியதாகவோ சாதாரணமாக அமையும். கொல்லனுக்கு உலைக் கூடத்திலும், பழுக்கக் காய்ந்த இரும்பிலிருந்து பறக்கும் பொறியிலும், துருத்தியின் பெருமூச்சிலும் சலிப்புத் தட்டுவது இயற்கை. தோலைத் தைக்க நெளியும் ஊசியும் சரடும் தன் வாழ்க்கையையே தைத்துவிடுவதாகச் சில சமயங்களில் செம்மானுக்குத் தோன்றுகிறது. தினந்தோறும் காதக் கணக்காய், அணி வகுத்துச் செல்லும் படையிலே இயந்திரம்போல் நடந்து செல்லும் போர் வீரனுக்கு, உலகமெல்லாம் ஒன்றாகத் திரண்டு தன் கால் பூட்ஸின் பாரமாய் அமைந்து விட்டதாகப்படும் என்று ஆங்கிலக் கவிஞன் ருட்யார்ட் கிப்ளிங் சொல்லுகிறான். பழக்கத்தினால் புதுமை மழுங்கிய வகையில் ஒரு தொழிலையே நாம் செய்து வரும்போது இந்த அலுப்பு ஏற்படுவது ஸஹஜம். அப்போதுதான் நமது தினசரி வாழ்க்கையிலிருந்து விடுதலை பெற விரும்புகிறோம். வேறொருவர் வாழ்க்கையைப் பார்த்து அதை அடையலாகாதா என்று பொருமுகிறோம். "உங்களுக்கென்ன,

சாமி! நினைக்கிறீங்க, பாட்டுப் பாடுறீங்க. சந்தோஷமாய இருக்குறீங்க. எங்க மாதிரி நெருப்பிலே வாடுறீங்களா" என்று கவிஞனைப் பார்த்துக் கொல்லன் பொருமைப் படுகிறான். கவிஞனோ கொல்லனுடைய கை வன்மையைப் பார்த்து அதிசயிக்கிறான்; அது சாதிக்கும் பொருள்களைத் தேவர்களும் நாடுவார்கள் என்று நினைக்கிறான்; "என்போல் வார்த்தைப் போரிலும், மனக் குழப்பத்திலும் காலத்தை வீணாக்காமல் பயனுள்ள கருவிகளைச் செய்யும் இந்த மாவண்டூர்க் கொல்லனுடைய வாழ்க்கை எவ்வளவு ரஸம் நிறைந்தது" என்று கருதுகிறான்; கொல்லனுடைய உலைக் கூடத்தில் திருமாலும், சிவனும், பிரமனும், குமரவேளும், தங்கள் படைக் கலங்களைப்பெறக் காத்துக் கொண்டிருப்பதாகக் கற்பனை செய்கிறான்; அது ஒரு பாடலாக வெளிப்படுகிறது:

**"ஆழியான் ஆழி அயன் எழுத்தாணி யென்பான்**
**கோழியான் குன்றெறிய வேலென்பான்—பூழியான்**
**அங்கை மழுவென்பான் அருள் பெரிய மாவண்டூர்ச்**
**சிங்கன் உலைக் களத்திற் சென்று."**

பழக்கத்தின் காரணமாகப் பாலும் புளிக்கும், புளிக்காவிட்டாலும் பால் என்ற தத்துவமே மறைந்துவிடும் என்ற செய்தியை நாடக பாத்திரம் ஒன்றின் மூலமாகக் குறிப்பாக உணர்த்தும் இன்னொரு கவிஞன் சொல்லுவதைக் கேட்போம். ஸாம்ராட் ஒருவனுடைய அந்தப்புரம். பரந்த நந்தவனங்கள்; நடுவே பளிங்கு மாளிகை; இயற்கையின் அற்புத சௌந்தரியத்தையும், கலையின் எல்லையற்ற அழகையும் ஒன்றாகக் கலந்து நிருமாணித்த வாசத்தலம்; "சீர் சிறக்கு மேனி பசேல் பசேலென, நூபுரத்தின் ஓசை கலீர் கலீரென, சேரவிட்ட தாள்கள் செவேல் செவேலென"த் தெய்வ நாட்டுக் கன்னியர்போல் உலாவி வரும் அந்தப்புர மகளிர்; வீணையின் விம்மலும், முழவின்

ளக்களிப்பும், மகளிர் குரலும் சேர்ந்து நந்தவன மலர்களின் மணத்தோடு மணமாய், தென்றலில் மிதந்து வருகின்றன. இங்கே அமைந்திருக்கிறது ஒருவனுடைய வாழ்க்கை. வேறென்ன வேண்டும் என்று நினைக்கிறோமல்லவா? ஆனால் அவனைக் கேட்போம்.

ஸம்ஸ்கிருத மகாகவி காளிதாஸனுடைய 'சாகுந்தலம்' என்னும் நாடகத்திலே அவன் தோன்றுகிறான். சகுந்தலையின் நினைவும், தான் அவளைப் புறக்கணித்து விட்டோமே என்ற இரக்கமும் தன்னை வாட்ட, அந்த வருஷம் வஸந்தோத்ஸவம் வேண்டாம் என்று அரசன் துஷ்யந்தன் கட்டளையிடுகிறான். ஆனால் வஸந்தம் வருவதைத் தடைசெய்ய முடியுமா? மாமரங்கள் தளிர்க்கின்றன. 'கள்ளவிழ் சண்பகப் பூ மலர் கோதி', மன நிறைவோடு, குயில்கள் இளவேனிற் காலத்திற்குக் கட்டியம் கூறுகின்றன. அநதப்புர மாதர் இருவர் மனத்திலே, வஸந்தத்தின் எதிரொலி கேட்கிறது. அவர்கள் நந்தவனத்தில் பூக் கொய்கிறார்கள். அப்போது தோன்றுகிறான் அரசனுடைய கஞ்சுகி. அந்தப்புர மேற்பார்வை அவனுடைய நித்திய கருமம். அவன் வார்த்தையிலும் செய்கையிலும், கோபமும் தளர்ச்சியும் தொனிக்கின்றன. " என்ன சொன்னாலும் உங்களுக்குத் தெரியவில்லையே! என்ன உத்ஸாகம் வேண்டியிருக்கிறது? அரசனுடைய கட்டளை என்னவென்று உங்களுக்குத் தெரியாதா?" என்று சீறுகிறான். வஸந்தத்தின் மநதிர சக்தியும், அழகே வடிவாய்ப் பூக்கொய்யும் மடந்தையர் ஒயிலும் அவன் கண்ணிற் படவில்லை. ஏனென்றால், அவன் அரசனுடைய கட்டளையை நிறைவேற்றும் இயந்திரம். எவ்வளவு மனோரம்மியமான அம்சங்கள் நிறைந்த இடத்திலே அவனுடைய தினசரி வாழ்க்கை நடைபெறுகிறது! இருந்தும் அவனுக்குப் பயனில்லை. ஏனென்றால், அது கேவலம் தினசரி வாழ்க்கையாகி விட்டது.

இந்த நாடகப் பாத்திரத்தின் நிலையிலே இன்னொரு உண்மையையும் காண்கிறோம். சுற்றியுள்ள அழகிலே ஈடுபடக்கூடிய சக்தியை இழந்து விட்டதோடுகூட, அந்த அழகு பிரதிபலிக்கும் பொருள்களையே அவன் கண்டிக்கிறான். அரசனுடைய கட்டளையை நிறைவேற்றும் முயற்சியில் தனக்கு இடையூறு செய்வதாகக் கருதுவதால், அவை அவனுக்குக் கசந்து விடுகின்றன.

"மனந்தான் காரணம்: நரகத்தைச் சொர்க்கமாக்கி விடும்: சொர்க்கத்தை நரகமாக்கி விடும்" என்று ஆங்கிலக் கவிஞன் மில்டன் சொன்னானே அது நமக்கு ஞாபகம் வருகிறது. இந்த உண்மையைக் கம்பனுடைய காவியத்திலே பல இடங்களில் நாம் காண்கிறோம். தன் அளவற்ற செல்வமும், வீரத்தின் வலிமையால் தான் பெற்ற வாழ்க்கைச் சாதனங்கள் யாவும், தான் சீதையை அடையவில்லையே என்ற ஏக்கத்தில், இராவணனுக்குத் துச்சமாகப் படுகின்றன. சீதையைக் காண அசோகவனத்திற்கு இராவணன் வருவதைப் பாருங்கள் :

**" நான நெய் விளக்க நாலிருகோடி**
**நங்கையர் அங்கையி லெடுப்ப**
**மேனிவந்தெழுந்த மணியுடை அணியின்**
**விரிகதிர் இருளெலாம் விழுங்கக்**
**கான்முதல் தொடர்ந்த நூபுரம் சிலம்பக்**
**கிண்கிணி கலையொடும் கலிப்பப்**
**பானிறத் தன்ன குழாம் படர்ந்தென்னப்**
**பற்பல மழலையும் பகர."**

ஊர்வசி உடைவாள் ஏந்துகிறாள் ; 'விஜய வாட்கண் திலோத்தமை' பாதரட்சை தாங்கி வருகிறாள் ; மேனகை அடைக்காய் உதவுகிறாள். இந்த உலகத்துச் செல்வம் மட்டுமல்ல, தெய்வநாட்டு ஐசுவரியமெல்லாம் இராவணனுடைய தினசரி வாழ்க்கைச் சாதனங்களாய் அமைந்திருக்

கின்றன. ஆனால் அவை அவனுக்குச் சப்பென்று சாரமில்லாப் பொருள்களாகி விட்டன. 'தேவர் தேவியர் சேவடி கைதொழும், தாவின் மூவுலகின் தனி நாயகன்' தான். ஆனால் பெற முடியாத சீதையின் காதலை விரும்புகிறான்; தன்னுடைய செல்வத்தையும் காதலையும் தூவென்று சீதை உதறித் தள்ளும்போது "யாவரேழையர் நின்னின் இலங்கிழாய்?" என்று கேட்கிறான். ஆனால் ஏழை சீதை யில்லை; இராவணன் தான்.

ஏழ்மை—மிகவும் வருத்தம் தரக்கூடிய நிலை—என்று நாம் சாதாரணமாக எதை ஒப்புக் கொள்ளுகிறோமோ, அதில் அகண்டமான இன்பத்தையும் திருப்தியையும் பலர் பெறுவதைக் காவியங்களிலே பார்க்கிறோம். காட்டுக்குப் புறப்படுமுன் கோசலையிடம் இராமன் கூறுவதை யாரால் மறக்க முடியும்? ஆழி சூழ் உலகமாளும் உரிமையைத் துறக்கிறான்; சடைமுடி தாங்கி, மரவுரி அணிந்து, பதினான்கு வருஷம் காட்டிலே வாழ உல்லாசமாகப் புறப்படுகிறான். கோசலையின் மனம் கொதிக்கிறது. இந்தச் சமயத்தில் இராமன் பேசுவதைக் கேட்போம்.

**"சிறந்த தம்பி திருவுற, எந்தையை**
**மறந்தும் பொய்யில னாக்கி, வனத்திடை**
**உறைந்து மீளும் உறுதி பெற்றேனின்**
**பிறந்து யான்பெறும் பேறென்பது யாவதோ?.'**

இங்கே பேசுவது இராமன் இல்லை என்று கூடச் சொல்லி விடலாம்; இராமன் மூலமாகத் தருமதேவதையே பேசுகிறது.

இது போலவே, காளிதாஸனுடைய 'குமாரஸம்பவ'த்தில் உமையின் மூலமாக, தினசரி வாழ்க்கையில் விருப்பும், வெறுப்பும், அந்த வாழ்க்கையின் வெளித் தோற்றத்திலோ அம்சங்களிலோ எழவில்லை யென்றும், நம்முடைய மனத்திலிருந்தே உண்டாகின்றன என்றும்,

தெளிவாக அறிகிறோம். தன் மகள் சிவனை அடையக் கடுந்தவம் புரியத் தீர்மானித்து விட்டாள் என்று அறிந்ததும், மேனு சொல்லுகிறாள் :

"குழந்தாய் உன்னுடைய சரீரம் எங்கே, தவம் எங்கே?
சிரீஷ புஷ்பம் வண்டின் பதங்களைத் தாங்கும் ;
பறவையைத் தாங்க முடியுமா ?"

தாங்க முடியும் என்கிறது உமையின் வைராக்கியம். உமையின் தவத்தையும், தவத்தினர் செய்யும் நித்திய கருமங்களில் ஒன்று தவறுமல் அவள் செய்ய முடிந்ததையும், இருபத்திரண்டு அழகிய சுலோகங்களில் காளிதாஸன் வருணிக்கிறான். உமையின் சரீரம் தாமரையைப் போல் மென்மையானதுதான் ; என்றாலும் அது காஞ்சனபத்மமாகி விட்டது என்று கவிஞன் வியப்படைகிறான்.

நமது தினசரி வாழ்க்கை எவ்வாறு அமைந்திருந்தபோதிலும் அதனால் விளையும் சோர்வையும் கஷ்டத்தையும் சமாளித்து அதிலிருந்து இன்பமும் புதுமையும் பெற—நம்மைக் காஞ்சனபத்மங்களாக்கிக் கொள்ள—ஒரு வழிதான் உண்டு. அது நம்முடைய தினசரி வாழ்க்கையை ஏதாவது ஒரு இலட்சியத்தோடு ஒட்டி நடத்துவதே. சலசல வென்று காற்றில் அசைந்து செந்நெல் தாங்கித் தலைவணங்கும் நெற் கதிர்கள் நிறைந்த வயலைத் தன் மனத்திலே பார்த்துக் கொண்டே, காய்ந்த வயலுக்குத் தண்ணீர் இறைக்கும் உழவனுக்குக் களைப்பு எவ்வாறு தோன்றும் ?

ஆனால் நீங்கள் கேட்கலாம் : குறிப்பிட்ட காவியக் கதைகள் தினசரி வாழ்க்கையா? அபூர்வமான சந்தர்ப்பங்களில், நம்முடைய வாழ்க்கைச் சாதனங்களை மனம் எவ்வாறு பாவிக்கிறது, என்பதைத்தானே இவற்றால் அறிகிறோம்! 'நரகத்தைச் சொர்க்கமாக்கலாம் ; சொர்க்கத்தை நரகமாக்கலாம்.' ஆனால் அதற்கு நரகமாவது

சொர்க்கமாவது வேண்டாமா? இராவணனுடைய வீரமும் செல்வமும் வேண்டாம்; அவன் காதலையாவது பெற்றோமா? இராமனுடைய தருமநெறி நமக்கில்லை யென்றாலும், அவன் பெற்ற அனுபவங்களாவது நமக்கு உண்டா? அரசைத் துறந்தோமா? சீதையை இழந்தோமா? உணர்ச்சியற்ற, உளுத்துப் போன நமது தினசரி வாழ்க்கையில், அர்த்தமற்ற இந்தச் செயல் வளையத்தில், இலட்சியங்களுக்கு இடமேது என்றல்லவா நினைக்கிறீர்கள்!

கொஞ்சம் இருங்கள். உங்களுக்கு ஞாபகம் இருக்குமே; கந்தர்வ லோகத்தையும், ஸத்ய லோகத்தையும், தர்ம லோகத்தையும், சென்னை வீரராகவ முதலித் தெருவின் பக்கத்தில் அல்லவா தமிழ்க் கவிஞர் பாரதி கண்டது? 'ஜட்கா வண்டிகள், துரைகள் போகும் கோச்சுகள், புழுதி, இரைச்சல், துர்நாற்றம் இவற்றையெல்லாம் கடந்து, முன் பகுதியிலே பசுமாடு, ராயர் வீட்டம்மாள், குழந்தைக் கூட்டங்கள் முதலிய விபத்துக்களுக் கெல்லாம் தப்பிப் பின்புறத்திலே மெத்தைக்கு' வருகிறார் பாரதி. அங்கே பழைய வாழ்க்கை வளையம்: 'குழந்தைக்குக் காய்ச்சல். மனைவிக்குக் காது வலி. அவருக்குப் பித்தக் கிறுகிறுப்பு இத்யாதி இத்யாதி.' இது அவருடைய வெளிப்படைத் தினசரி வாழ்க்கை; நம்முடைய வாழ்க்கையைப் போன்றதுதான். ஆனால் அவருக்குக் கவிதையுள்ளம் இருந்தது. பத்திரிகைக் குப்பை, பழம்பாய், புகையிலைக் காம்பு, இவற்றின் நடுவிலிருந்து குயிலின் காதல் உலகத்தை அவர் பார்க்க முடிந்தது. "வீதிக் கதவை அடைப்பதும், கீழ்த் திசை விம்மிடு சங்கொலியும், வாதுகள் பேசிடு மாந்தர் குரலும், மதலையழுங் குரலும்,' வீதியிலே ஏழையொருவன் 'அன்னக்காவடி பிச்சை, அம்மா!' என்று ஏங்கும் குரலும், அவருடைய மனத்திற்குக் குதிரைகளாய் அமைந்தன, 'சீதக் கதிர்மதிமேற் சென்று தேனுண்ண.' இம்மாதிரியான இலட்சிய மனோபாவம்

பெற்ருல், தினசரி வாழ்க்கை எதுவாய் இருந்தாலும் சுவையுள்ளதாகிவிடும். களிமண் யானையை இழுத்துச் சென்று 'யானை வருகிறது, வழி விடுங்கள். இல்லாவிட்டாற் கொன்றுவிடும்' என்று சொல்லுகிற குழந்தையைப் பார்த்து நகைக்கிரேம். ஆனல் நமது தினசரி வாழ்க்கையாகிய களிமண் பொம்மைகளில், உயிரும் உணர்ச்சியும் காணும் கவிதையுள்ளம் படைத்துவிட்டோமாஞல் சிறுமை விலங்கு அற்றுவிடும்; தினசரி வாழ்க்கையின் மாருப் பழமையும் கைப்பும் நீங்கிவிடும். இலட்சியம் தோன்றும்; உணர்ச்சி பெருகும்; புதுமை உதயமாகும்; தினசரி வாழ்க்கை தெய்வ வாழ்க்கை யாகிவிடும்.